## புது அழகுடன் விளங்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்

### சருமத்தைப் பட்டுப்போல் மிருதுவாக வைத்துக்கொள்ளுங்கள்

வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை உபயோகித்து உங்கள் சருமத்துக்கு புதுப் பொலிவை அளியுங்கள். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முகத்தில் கரும்புள்ளிகள் தோன்றுவதைத் தடுத்து, எண்ணெய் வழியும் தோற்றத்தை மாற்றி சருமத்தில் வெயிலினாலும் காற்றினாலும் வறட்சியேற்படாமல் பாதுகாப்பளிக்கும். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மட்டுமே உபயோகித்தால்கூட முகம் பட்டுப்போல் விளங்கும். அதன் மீது பவுடரும் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து மணிக்கணக்கில் அப்படியே கலையாமல் இருக்கும்.




சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

S.S.M. பிரதர்ஸ் (பி)
லிமிடெட் பெருமையுடன்
அறிமுகப்படுத்தும்

# வீணா

# Veena

## எம்ப்ராய்டரீஸ்

உங்கள் பொலிவுக்கு
பூரண-கவர்ச்சி தருவது

புதுமை ததும்பும் நவீன
டிசைன்கள் எடுப்பான கண்
நிறைந்த வண்ணங்கள் மனதைக்
கவரும் சித்திர தையல்
வேலைபாடுகள் அமைந்தது
மற்ற எல்லா சித்திர தையல்
துணிகளுக்கும் லேஸ்களுக்கும்
மிகச் சிறந்தவை.



டிரேட் மார்க்

தயாரிப்பாளர்கள் :

**S.S.M. பிரதர்ஸ் (பி) லிட்.**

தபால் பெட்டி எண் : 8
குமாரபாளையம் போஸ்ட்
ஈரோடு (வழி) தென்னிந்தியா.
போன் : 146. (பவானி)
தந்தி : ESSESEM

எங்கள் இதர உற்பத்திகள் :
யாழ் (வீணை) மார்க்
நூலிழை வேஷ்டிகள்,
சர்ட்டிங்ஸ்,
பூப்பின்னலமைந்த
பட்டுத் துணிகள்,
மற்றும் உன்னதமான
விசேஷரக பவானி
பட்டு ரிப்பன்கள்.

LEGANT

# இந்திய அழகு ராணி

## குமாரி நாகி ஜெஹன்
## வீட்டிலே உல்லாச
## ஓய்வு பெற விரும்புவது—
## மர்பி மினி-மாஸ்டர்...
## -டிரான்ஸிஸ்டர்களிலே
## ஒரு எழில் ஓவியம்

ஏன், நீங்களும் ஒரு மர்பியை நம்பலாம்—ஏனெனில், மர்பி இன்ஜினீயர்கள் ஒவ்வொரு மர்பி செட்டையும் தமது சொந்த உபயோகத்திற் கென்றால் எப்படியோ, அவ்வளவு உன்னத முறையில் டிசைன் செய்கிறார்கள்.

NAS 6141d

# மர்பி



**ரேடியோக்களும் டிரான்ஸிஸ்டர்களும்**

*Murphy sets the standard*

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, சித்திரை 24 — மே 7



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

தலைவரைப் பொறுக்கும் தேர்தலில் ஸ்ரீ பிரகாசம் அவர்கள் போட்டிக்கு நின்று தோற்று, கனம் ஓமந்தூர் ரெட்டியாரின் கட்சி பெரும் வெற்றி பெற்றதில் ஓர் அபாயம் இருக்கிறது.

கட்சித் தேர்தலில் வெற்றி பெற்றுத் தங்களுடைய பதவிகளை ஸ்திரம் செய்து கொண்டதோடு எல்லாக் காரியங்களும் நிறைவேறி விட்டதாக நமது மந்திரிமார்கள் எண்ணிக் கொண்டு விடலாம். எண்ணிக் கொண்டு தேசத்தின் நிர்வாகத்திலும் தேச மக்களின் நன்மையிலும் அலட்சியம் காட்டத் தொடங்கி விடலாம். அல்லது கட்சித் தேர்தலில் ஜெயிப்பதற்காக அங்கத்தினர்களைத் தாஜா பண்ணி வோட்டுச் சேகரித்த களைப் பினால் இளைப்பாறத் தொடங்கலாம்; சிலர் கொஞ்சம் தூக்கமும் போட விரும்பலாம். இத்தகைய விளைவுகளைத் தான் ஓமந்தூர் வெற்றியில் உண்டாகக் கூடிய அபாயம் என்று குறிப்பிட்டோம்.

''திருப்தி அடையாதீர்!'' தலையங்கத்திலிருந்து ஒரு பகுதி. கல்கி, 11-4-48

நினைவுத்திரையில்...

# நவீன மார்க்கண்டேயன்!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 40



# ஐக்கியம் எங்கே?

**பா**ரதத்தின் பல்வேறு பகுதி மக்களிடையே பலவிதமான மாறுபாடுகள் இருந்த போதிலும் இது ஒரே தேசமாக இருந்து வந்திருப்பதற்குக் காரணம் பொதுவான மத உணர்வுதான். க்ஷேத்திரங்களும், க்ஷேத்திராடனமும், ராமாயணமும், பாரதமும் இந்தத் தேசத்தின் பல பகுதி மக்களையும் ஒன்றாக இணைத்து வந்தது. அரசியல் ரீதியில் இது ஒரே சாம்ராஜ்யமானது பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்தில்தான். சுதந்திரப் போராட்டத்தின்போது அரசியல் ரீதியில் நாட்டின் எல்லாப் பகுதியினரும் ஒன்றுபட்டு ஒரே லட்சியத்துக்காக உழைத்தனர். பாரதம் சுதந்திர நாடான பின், சமய உணர்வு நலியத் தொடங்கிய போதிலும், புதிதாக ஏற்பட்ட அரசியல் விழிப்பினால், நாட்டின் ஐக்கிய உணர்வைக் காக்க நல்ல வாய்ப்பு இருந்தது.

பலவிதமான மொழிகளையும் வாழ்முறைகளையும் பண்பாடுகளையும் கொண்ட மக்களின் ஐக்கியத்தைக் காப்பது மிக நுண்ணியதொரு சாதனையாகும். தனிப் பகுதிகளுக்கு எங்கு சுதந்திரம் தர வேண்டும், எங்கு அச்சுதந்திரத்தைத் தேசத்தின் ஐக்கியத்துக்கு ஊறு ஏற்படுத்தாமல் கட்டுப்படுத்த வேண்டும் என்பதைச் சூட்சுமமான ராஜநீதி வல்லுநர்களே அறிவர். காங்கிரஸ் அரசுக்கு மிகவும் தேவைப்பட்டது இந்தச் சூட்சும நோக்குத்தான்.

அந்தந்த ராஜ்யங்களுக்கும் போதிய அளவு சுயாட்சி தராமல் மத்திய சர்க்காரிடம் தேசத்தின் பொருளாதாரப் பொறுப்பு அவ்வளவுமே குவிக்கப்பட்டது. இதனால் எல்லா ராஜ்யங்களுக்குமே தாபம் ஏற்படக் காரணம் இருந்ததெனினும், மத்திய ஆட்சி பீடமாகிய தில்லி வடக்கே இருந்ததால், தென் ராஜ்யங்களில் — குறிப்பாகத் தமிழகத்தில் — விசேஷமான மனக்கசப்பு ஏற்பட்டது. பொருளாதார அபிவிருத்தித் திட்டங்களில் வடக்கும் தெற்கும் எந்த நிலையில் உள்ளன என்பதை ஒத்துப் பார்த்து இம்மனக்கசப்பு வளர்க்கப்பட்டது.

கட்டுப்பாட்டினால் வந்த கேடு இது எனில், தவறான வழியில் சுதந்திரம் தருவதால் எத்தகைய அனர்த்தம் விளையக்கூடும் என்பதையும் நாளுக்கு நாள் நிதரிசனமாகப் பார்த்து வருகிறோம். இந்த அனர்த்தத்தின் தொடக்கம் மொழிவாரி மாகாணப் பிரிவினைதான். அப்போதே ராஜாஜி, 'இது என்ன ஆதிவாசிகளின் அமைப்புக்குத் திரும்புவதாக அல்லவா உள்ளது?' என்று எச்சரித்தார். அவர் அப்படிச் சொன்னதைப் பலர் கண்டனம் செய்தனர். ஆனால் பல்லாண்டுகளுக்குப் பின் இப்போது தினந்தோறும் அவரது தீர்க்க தரிசனத்தை எண்ணி வியக்கிறோம்.

மொழிவாரிப் பிரிவினை இல்லாவிடில் இன்றுள்ள ராஜ்யங்களில் பல ஒரு ராஜ்யமாக இருந்து உணவுப் போக்குவரத்துத் தடைகள் பெருமளவு குறைந்திருக்கும். உணவுத் கட்டுப்பாட்டுப் பிரச்னை இவ்வளவு தீவிரமான நிலையை அடையாதிருந்திருக்கும்.

மொழிவாரிப் பிரிவினை ஏற்பட்டிராவிடில் ஒரே ராஜ்யத்தில் பல்வேறு மொழிகளைப் பேசும் கணிசமான மக்கட்தொகைகள் இருந்திருக்குமாதலால் அனைவருக்கும் ஒரே போல் பொதுவான ஆங்கிலம் சர்க்கார் அலுவலகங்களிலும், சர்வகலாசாலைகளிலும் முன் போலவே நீடித்திருக்கும். பலவேறு மொழியினரிடையே தொடர்பு மொழியாக ஆங்கிலம் ஒவ்வொரு ராஜ்யத்திலும் பயனாகி வரும்போது, அகில இந்தியத் தொடர்பு மொழியாக ஹிந்தியைப் புகுத்துவதற்கு இடம் இருந்திராது. இந்தியாவின் மற்றப் பகுதிகளுடன் மட்டுமின்றி, வெளி உலகத்துடனும், நவீன விஞ்ஞானத்துடனும், நுட்பத் தொழிலியலுடனும் நம்மைப் பிணைக்கும் அற்புதக் கருவியான ஆங்கிலத்தின் ஸ்தானம் குன்றாதிருந்திருக்கும். ஆட்சி மொழி விஷயம் ஒருபுறமிருக்க, கல்வித் துறையில் இன்று பின்பற்றப்படும் கொள்கையைப் பார்க்குமிடத்து இதை அழுத்திச் சொல்ல வேண்டியிருக்கிறது.

மும்மொழித் திட்டத்துக்குப் பதில் புதிதாகக் கூறப்படும் இரு மொழித்

திட்டம், ஆன்மிக ரீதியில் தேசத்தை ஒன்று படுத்தும் சம்ஸ்கிருதம், விஞ்ஞான ரீதியில் தேசத்தை ஒன்றுபடுத்தும் ஆங்கிலம் இரண்டுக்கும் குழி பறிப்பதாகவே உள்ளது. பிரதேச மொழியையே கல்லூரி போதனமொழியாக்குவதன் மூலம் மொழிவாரிப் பிரிவினைப் பிரியர்களைச் சந்தோஷப்படுத்தும் இத்திட்டம், மாணவர்கள் இரண்டாம் மொழியாக ஹிந்தி ஒன்றையே தேர்வு செய்யவும் மறைமுகமாக வழிவகுக்கிறது.

நமக்குத் தமிழிடமோ வேறெந்தப் பிராந்திய மொழியிடமோ பற்று குறைந்து விட்டது என யாரும் எண்ணலாகாது. தாய் மொழியிலேயே கல்லூரிப் படிப்பை முடித்த மாணவனுக்கு மற்ற ராஜ்யங்களிலும் வெளி உலகிலும் வேலை வாய்ப்புக் குன்றி, நாட்டின் அறிவாளிச் சமூகம் ஆங்காங்கு துண்டு பட்டு இணைப்பின்றி நிற்க நேரிடுமே என்ற கவலையிலேயே இதைச் சொல்கிறோம். ஸயன்ஸையோ, சரித்திரத்தையோ, பொருளாதாரத்தையோ தாய்மொழியில் படித்து விட்டதால் தாய்மொழிக்குச் சேவை செய்ததாகி விடாது. தாய்மொழியின் இலக்கியத்தைப் பரீட்சை என்ற நோக்கமில்லாமல் அதன் சுவைக்காகவே படித்து வளர்ப்பதே தாய்மொழித் தொண்டாகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக மொழிவாரி மாகாணங்களால் நேர்ந்த உற்பாதத்தினை மகாராஷ்டிரத்தில் கிளம்பியுள்ள 'சிவ சேனை'யில் காண்கிறோம். 'எந்நாட்டவர்க்கும் இறைவன்' என்று போற்றப்படும் சிவபெருமானின் பெயரைத் தாங்கியே தென்னாட்டவருக்கு எதிராக இப்படி ஓர் இயக்கம் தோன்றியிருப்பதையும், நாட்டின் அதி முக்கியமானதோர் உப தேர்தலின் விளைவை இது விபரீதமாக மாற்றியிருப்பதையும் என்னவென்பது? சிவசேனையின் போக்கு 'மொழிவாரியமைப்பால் ஆதிவாசிகளாகிறோம்' என்று ராஜாஜி சொன்னதை எதிர்த்தவர்களுக்கு விடை அளிக்கிறது. தமிழர்களுக்கும் மற்றவர்களுக்கும் எதிராக வங்காளத்திலும் இவ்வியக்கம் மேற்கொள்ளப்படும் என்று தகவல் கிடைத்துள்ளது. இதில் விசனத்துக்குரிய விந்தை என்னவெனில், காங்கிரஸாட்சி இவர்களை அடக்க முடியாமல் இருப்பதோடு மட்டுமின்றி, மறைமுகமாக இவர்களோடு தொடர்பு கொண்டு அநுகூலம் பெறுவதுதான். தமிழ் நாட்டில் வடநாட்டினரைத் துவேஷித்த திராவிடக் கழகம் தேர்தலில் காங்கிரஸுக்கு உதவியதெனில், வடக்கேயோ தமிழரை எதிர்க்கும் சிவசேனை காங்கிரஸுக்கு உதவி புரிகிறது !

இந்நிலையில் 'இந்தியாவின் ஒருமைப்பாடு' என்று ஆட்சியாளர்கள் வாய் ஓயாமல் முழக்கி வருவதால் ஒரு பலனும் விளையாது. பேதப்பட்ட மனங்களை மாற்ற பக்தியும் பண்பும்தான் அவசியம். அரசியலும் பொருளாதாரமும் இதைச் சாதிக்க முடியாது. நாட்டில் மீண்டும் ஒரு பக்தி இயக்கம் பலமாகப் பரவினாலன்றி எல்லா உள்ளங்களும் ஒன்றுபடுவது கடினம். சமயத்தாலேயே ஒன்றுபட்டிருந்த நாடு அந்தப் பெருமையை மீண்டும் பெற ஆண்டவன் தான் அருள வேண்டும்.

## காமகோடியின் கருணைமொழி



எது தர்மம், எது அதர்மம் என்று எப்படிக் கண்டு பிடிப்பது? வேதங்கள்தான் அதற்குப் பிரமாணம். வேதத்துக்குப் பிறகு ஸ்மிருதிகள் தர்மங்களுக்குப் பிரமாணம். சுருதிகளில் சொல்லியிருக்கிற சத்திய ஸ்வரூபமான பகவானை நேருக்குநேர் அநுபவித்த ரிஷிகள் ஸ்மிருதிகளை எழுதியிருக்கிறார்கள். ஸ்மிருதிகளிலும் அகப்படாத விஷயங்களைப் புராணங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். சுருதிகளும் ஸ்மிருதிகளும் சொல்லும் தர்மங்களை அநுஷ்டித்துக் காட்டின மகான்களின் சரித்திரங்களைப் புராணங்கள் விஸ்தரிக்கின்றன. 'உண்மையைப் பேசு' (ஸத்யம் வத) என்ற வேத வாக்யத்தின் பொருளை அநுஷ்டித்துக் காட்டின மகானின் சரித்திரம் அரிச்சந்திரோபாக்யானம். 'தர்மம் சர' என்ற வேதவாக்யத்தை ஸ்ரீராமரும் ஸீதையும் பூர்ணமாய் அநுஷ்டித்துக் காட்டியதை ஸ்ரீ ராமாயணம் கூறுகிறது. புராணங்களிலும் உதவி கிடைக்காவிட்டால், தர்மத்தை அறிய விரும்புகிறவன் ஸன்மார்க்கத்திலிருக்கும் ஸாதுக்களை அடைய வேண்டும். அப்படிப்பட்ட ஸாதுக்களையும் காணாவிட்டால் ஒருவன் தானே தன்னுடைய விருப்பு வெறுப்புக்களைவிட்டு, சாந்த ஹிருதயத்துடனும் பயபக்தியுடனும் தன்னுள்ளே புகுந்து பார்த்துத் தன் மனச்சாட்சியான பகவத் பிரேரணையின்படி நடக்க வேண்டும்.

அதாவது மனச்சாட்சி என்பதைக் கடைசியாய் உதவிக்குத் தேட வேண்டும். மற்றப் பிரமாணங்களின் உபகாரம் கிடைக்காத இடத்தில்தான் மனச்சாட்சிக்குப் பிரவேசம் உண்டு. சித்தத்தில் கிளம்பி அடிக்கடி மாறும் எண்ணத்தை மனச்சாட்சி என்று தவறுதலாக உணரக்கூடும். இந்தக் காலத்தில் இத்தகைய மனச்சாட்சிதான் பிரதானம் என்று சொல்கிறார்கள். இவர்கள் பிரமாண வரிசையைத் திருப்பிவிட்டார்கள். சாதாரண மனுஷ்யனின் மனச்சாட்சி சுத்தமாகவும் இல்லை, ஒரு ரூபமாகவும் இல்லை. அது வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு விதமாகப் பேசுகிறது. சாட்சி என்ற பதமே அதற்குத் தீர்ப்புக்கூறும் அதிகாரமில்லை என்பதைக் காட்டும். தர்மத்தை அறிய விரும்புகிறவன் வேதத்தையும் அதை அண்டின நூல்களையுமே முதற்கண் அநுசரிக்க வேண்டும்.




திட்டக் கமிஷனில் ஸ்ரீ அசோக மேத்தாவினிடத்தில் ஸ்ரீ பி. கே. நேருவை உப தலைவராக நியமிக்கப் போவதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. இன்னும் இது அதிகாரபூர்வமாக உறுதி செய்யப்படவில்லை. உண்மையாயின், இது எத்தனையோ நாட்களுக்கு முன்பே செய்திருக்க வேண்டிய காரியம். செய்யாமலே யிருப்பதை விடக் காலந் தாழ்த்திச் செய்வது சிலாக்கியம் என்ற முறையில், ஸ்ரீ அசோகமேத்தா திட்டக் கமிஷனிலிருந்து விலகுவதை வரவேற்க வேண்டும். ஸ்ரீ பி. கே. நேரு இளமையாக இருந்த காலத்திலேயே திட்டக் கமிஷனில் இடம் பெற்றிருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்.

அசோக மேத்தாவை இப்போது யூகோஸ்லாவியா தூதராக அனுப்பி வைத்தால் நல்லது. சோஷலிஸம் என்பது நடைமுறையில் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றி அவர் நேரடியாக யூகோஸ்லாவியாவில் பார்த்துப் படிப்பினை பெற முடியும்; ஆகாசக் கோட்டை கட்டுவதற்கும் யதார்த்தத்துக்கும் உள்ள வித்தியாசத்தை உணர முடியும்.

ஸ்ரீ அசோகமேத்தா போனாலும் பகற் கனவு காண்கிற இன்னொருவரை டாக்டர் சந்திரசேகர் அவர்களிடம் பெற்றிருக்கிறோம். அல்நாஸ்கர் பகல் கனவு கண்டதால் ஏதோ கண்ணாடிப் பாத்திரங்கள் உடைந்து போயின; அவ்வளவுதான். ஆனால் சந்திரசேகரின் கனவு மக்களின் வரிப் பணத்தைக் கர்ப்பத் தடை மாத்திரையிலும் லூப்பிலும் விரயம் செய்வதில் முடிகிறது. மாத்திரையும் லூப்பும் விநியோகித்து விடலாம். கோடிக்கணக்கான வரிப் பணத்தைத் தரகர் மூலம் கிராமப் பெண்களுக்கு லஞ்சம் தந்து குடும்பக் கட்டுப்பாட்டுக்கு முயலலாம். ஆனால் நமது கிராம மக்களுக்கு இது சிறிதும் ஒத்து வராத திட்டமாகும். இம்மாதிரி லஞ்சம் தந்து மக்கள் தொகையைக் குறைத்து நமது உணவுத் தட்டுப்பாட்டைத் தீர்த்து விட முடியாது.

❀❀❀

குடும்பக் கட்டுப்பாட்டு மந்திரி செலவிடும் கோடிக்கணக்கான ரூபாயால் குடும்பக் கட்டுப்பாட்டு ஊழியர்கள் என்ற பெயரில் தரகு செய்கிற புதுத் தொழில் உருவாகியிருக்கிறது. குடும்பக் கட்டுப்பாடு என்ற பெயரில் என்ன நடக்கிறது என்பதை மக்களுக்கு நன்கு உணர்த்தும் ஒரு சம்பவம் சென்னையில் நிகழ்ந்திருக்கிறது.

பதினைந்து வயதான ஒரு சிறுவனுக்கு ஆசை காட்டி மலடாக்கும் அறுவை சிகித்சைக்கு அவனை ஆளாக்கியதாக ஒரு குடும்பக் கட்டுப்பாட்டு ஊழியரும் அவரது இரு சகாக்களும் கைதாகியுள்ளனர். இந்த அறுவை சிகித்சை செய்து கொள்பவர்களுக்குப் பணம் கொடுக்கப்படுகிறது. இதை ஆசை காட்டிப் பகவான் என்ற சித்திப் பையனை ஏப்ரல் 12ந் தேதி ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் அறுவைக்கு ஆளாக்கியதாகத் தெரியவருகிறது. தனக்கு வயது இருபத்தேழு என்றும், தான் மூன்று குழந்தைகளுக்குத் தந்தை என்றும் அப் பிள்ளை விரல்நாட்டு வைத்து வாக்குமூலம் தந்ததன் பேரில் அறுவை நடந்துள்ளது. டவுனில் துணிக் கடை வைத்துள்ள பையனின் தந்தை நான்கு நாட்களாக அவனைக் காணாமல் தேடினாராம். பையன் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பிய பின்னரே உண்மை தெரிந்தது. பையனின் தந்தை போலீஸில் புகார் கொடுத்ததன் மீது மேற்சொன்ன மூவர் கைது செய்யப்பட்டனர். அறுவை செய்து கொண்டதற்காகப் பையனுக்கு அரசாங்கம் தந்த முப்பது ரூபாயில் பத்து ரூபாயை ஊழியரின் சகா ஒருவர் எடுத்துக் கொண்டதாகப் போலீஸார் கூறினர். ஊழியர்களுக்கு அரசாங்கமே பணம் கொடுக்கிறது.

ஊழியர்கள் எனப்படும் தரகர்கள் மக்களிடம் அறுவை நடக்கப் போவதாகச் சொல்லாமல் வெறுமே ஊசி போட்டு விட்டு அதற்குப் பணம் தரப் போகிறார்கள் என்று கூறி ஆஸ்பத்திரிக்கு அழைத்து வருவதாக ராஜ்ய குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரி டாக்டர் லக்ஷ்மி கூறியிருக்கிறார். ஆஸ்பத்திரியில் ரணசிகித்சை செய்யப் போவதாக விளக்கியவுடன் அழைத்து வரப்பட்டவர்கள் அதற்கு மறுத்துத் திரும்பி விடுவதாகவும் அவர் தெரிவித்துள்ளார்.

நகர ஆஸ்பத்திரி ஒவ்வொன்றிலும் பத்திலிருந்து பதினைந்து வரை குடும்பக் கட்டுப்பாட்டு ஊழியர்கள் இருக்கிறார்கள்.

❀❀

மந்திரி சபை விவாதித்துச் செய்ய வேண்டிய அலுவல்களையெல்லாம் பிரதமர் இந்திரா அம்மை கடிதப் போக்குவரத்தின் மூலமே நடத்தப் பார்ப்பதாகத் தெரிகிறது. இக் கடித விவரங்கள் எப்படியோ முன்கூட்டியே பத்திரிகைகளிலும் பிரசுரமாகிவிடுகின்றன. விலைவாசி உயர்வை இறக்குவதற்காகச் சர்க்கார் செலவைக் குறைக்க வேண்டும் என்று நிதிமந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய்க்கு ஸ்ரீமதி இந்திரா கடிதம் எழுதியிருக்கிறாராம். இச்செய்தி பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. மந்திரி சபையின் முக்கியமான அலுவலைச் செய்ய இது விசித்திர வழியாயிருக்கிறதே என்றுதான் இச்செய்தியைப் பார்த்தவுடன் எனக்குத் தோன்றிற்று. ஒன்றாக அமர்ந்து மனம் விட்டு விஷயங்களை அலசி முடிவெடுக்க வேண்டியவர்களிடையே கடிதப் போக்குவரத்து எதற்கு?

அது போகட்டும், நிர்வாகத்தின் சகல இலாக்காக்களும் செய்ய வேண்டிய செலவுக்

குறைப்பை நிதிமந்திரி மட்டும் எப்படிச் செய்ய முடியும்? மந்திரி சபையிலுள்ள செல வழிக்கும் இலாக்காக்கள் யாவும் ஒன்றுபட்டு அரசாங்கத்தின் கொள்கைகளையே பெரிதும் மாற்றினாலன்றி இப்பிரச்னை தீராது. முக்கிய மாகப் பிரதமர் சம்பந்தப்பட்ட பிரச்னை இது. தம்மைவிட இது பிரதமர் கவனிக்க வேண்டிய பிரச்னையே என்று ஸ்ரீ மொரார்ஜி தேசாய் பதில் எழுதிவிடலாம்.

இதே போல் மந்திரி சபையின் மற்ற அங்கத்தினர்களுக்கும் பிரதமர் கடிதங்கள் எழுதியிருக்க வேண்டும் எனத் தெரிகிறது. மந்திரி சபை அரசாங்கத்தை நடத்தும் வழி இதல்ல. இதனால் விஷயம் தெரியாத பொது மக்களிடமிருந்து பிரதமருக்குப் பாராட்டுக் கிடைக்கலாம். ஆனால் ஒரே மந்திரி சபையில் இடம் பெறுபவர்கள் ஒருவரை யொருவர் கலந்தாலோசிக்கக் கடிதம் எழுதுவது யுக்த மல்ல.

ஸர்தார் வல்லப பாய் படேல் அவர்களின் கடைசிக் காலத்தில் அவருக்கும் ஜவாஹர் லால் அவர்களுக்குமிடையே மன வேறுபாடு ஏற்பட்ட சமயத்தில் இருவருக்குமிடையே மனக்கசப்புடன் கடிதப் போக்குவரத்து நடை பெற்றதுண்டு. உள்ளூற இது வல்லப பாயின் இதயத்தை உடைத்ததேயன்றிச் செய்திப் பத்திரிகைகளில் இக்கடிதப் போக்குவரத்து வெளியாகிவிட வில்லை. அந்த முன்னோடியை நினைத்து இப்போது மந்திரி சபைக்குள் கடிதப் போக்குவரத்து நடப்பதைப் பார்க்கும் போது இன்றைய மந்திரி சபைக்குள் பிளவு ஏற்பட்டிருப்பதற்கு இது அறிகுறியோ என்று எண்ணத் தோன்றுகிறது. மந்திரி சபையை மாற்றி அமைக்கவும், சர்க்கார் கொள்கை களை மாற்றவும் பொது மக்களின் ஆதர வைப் பெறவே இது தந்திரோபாயமா? எப்படியாயினும், சர்க்கார் கொள்கைகளை மாற்ற இது முதற்படியாயிருப்பின் அது நம்ப முடியாத அளவுக்கு நல்ல விஷயமாகும்.

சுதந்திரக்கட்சிக்கு வோட்டுக்கள் கிடைக்க லாம், கிடைக்காதிருக்கலாம். ஆனால் சத் தியமே இறுதியில் வெல்லுமெனில் சுதந்திரக் கட்சிக் கொள்கைகள் ஆட்சியாளரின் மூளைக் குள் புகுந்தேயாக வேண்டும். காங்கிரஸ் கட்சி, தான் செய்த காரியங்களைக் காட்டித் தான் ஆட்சியிலிருக்கும் உரிமையைப் பெற வேண்டுமேயன்றி, அறியாதாரின்வோட்டைப் பெறுவதால் ஆட்சியை நீடிக்கக் கூடாது. சர்க்காரின் காரியம் சத்தியமான திட்டத் தின் மீதுதான் அமையுமேயன்றி, வோட்டுக் களின் மீது அமையாது.

❖❖❖

அமெரிக்காவின் போஸ்ட்மாஸ்டர் ஜென ரல் அந்நாட்டின் தபால் இலாகாவை மந்திரி சபையின் ஆதிக்கத்திலிருந்து நீக்கித் தனி யானதொரு சர்க்கார் கார்ப்பொரேஷனாக நிறுவ வேண்டும் என்றும், அது லாப—நஷ்ட மில்லாமல் செயல்பட வேண்டுமென்றும், தனி முதலீட்டாளர்களுக்குப் பத்திரம் விற்று இதற்கு மூலதனம் திரட்டலாம் என்றும் யோசனை கூறியுள்ளார். இப்படிச் செய்தால் வளைந்து கொடுக்கும் முறையில் காரியக்கிரமம் அமையும்; நிர்வாகம் முன்னை விடச் சீராக இருக்கும்; புதிய முறைகளில் ஆராய்ச்சி செய்ய வழி பிறக்கும் என அவர் கருதுகிறார். தபால்துறையை வியாபார ரீதியில் நடத்த வேண்டும் என்று அவர் கூறியிருக்கிறார். நன்கு நிர்வகிக்கப் படும் தனியார் தொழில்களில் ஊழியர்களைத் தேர்வு செய்வதில் எவ்வளவு கவனம் செலுத் தப்படுகிறதோ அதே போல் தபால் துறையி லும் செய்ய வேண்டும் என்பதே இதன் பொருள்.

பாரதப் பிரதமரவர்கள் தமது மந்திரி சபை சகாக்களுக்கு எழுதியுள்ள கடித மொன்றில் ஓரளவுக்கு இதே போன்ற யோசனையைக் காண்கிறோம். ஆனால் தபால் இலாகா பற்றியோ, ரயில்வே பற்றியோ பிரதமர் குறிப்பிடவில்லை. சர்க்கார் துறையி லுள்ள தொழிலகங்களில் நிர்வாகச் சீர் திருத்தம் செய்வது பற்றியே பிரதமர் குறிப்பிட்டிருக்கிறார். இது ஒரு நல்ல போக்கு. கட்சியைப் பலப்படுத்துவதைவிடத் தொழில் முன்னேற்றத்தில் அதிக அக்கறையுள்ள அனைவரும் இதனை வரவேற்பார்கள்.

❖❖❖

ராஜஸ்தானத்தில் மீண்டும் முதன்மந்திரி யாகப் பொறுப்பேற்றுள்ள ஸ்ரீ சுகாடியா அவர்கள் பெர்மிட் வழங்கும் இலாகாவைச் சீர்திருத்தும் உத்தேசத்தை வெளியிட்டிருக் கிறார். மந்திரிகளின் அதிகாரத்திலிருந்து சுதந் திரம் பெற்ற ஒரு கமிட்டி — அரசியல் சார் பற்றவர்களைக் கொண்ட கமிட்டி — பெர்மிட் வழங்குவது பற்றி முடிவுகள் எடுக்கும் என்று அவர் கூறியிருக்கிறார். சுதந்திரக் கட்சிச் சரக்கிலிருந்து ஒரு நல்ல துண்டையே அவர் பறித்துக் கொண்டிருக்கிறார். பெர்மிட் லைசென்ஸ் ஆட்சியின் தீமைகளைக் குறைப்ப தற்காக ஆசாரிய ரங்கா அவர்கள் வற்புறுத்தி வந்துள்ள ஏற்பாடும் இதுதான்.

❖❖❖

தி.மு.க. தலைவரும் தமிழக முதன் மந்திரியு மான திரு அண்ணாதுரை அவர்கள் ராஜ்யத் தில் ஆட்சிப் பொறுப்பேற்றுக் கொண்டு விட்டதால் காலியாகியுள்ள தென் சென்னை மக்கட் சபை ஸ்தானத்தில் புதுத் தேர்தலுக் காக என்ன நடக்கிறது என்று நான் அறிய வில்லை. என்ன நடந்தாலும், யார் வேட்பாள ராக நின்றாலும் வாக்காளர்கள் பொதுத் தேர்தலில் தந்த தீர்ப்பை மாற்றிவிடமாட் டார்கள் என்று நம்புகிறேன். காங்கிரஸ் வேட்பாளர் மற்ற விதங்களில் எவ்வளவு கவர்ச்சியுடையவராயிருப்பினும் அவருக்கு வாக்களிக்க மாட்டார்கள் என்றும், அல்லது அவர் எதிர்ப்பு இன்றித் தேர்வு பெற அனு மதிக்க மாட்டார்கள் என்றும் நம்புகிறேன். காங்கிரஸுக்கு எதிராகத் தேசம் தந்த தீர்ப்பை சர்வஜாக்கிரதையுடன் தொடர்ந்து காக்க வேண்டும். இச்சமயத்தில் திருகுகளைத் தளர்த்தி விடுவது பிராணாபத்தாகும். என் காதை எட்டும் வதந்திகள் இந்த எச்ச ரிக்கையை விடுமாறு என்னைத் தூண்டு கின்றன.

# சாதனையும் சோதனையும்

அமெரிக்க விண்கலம் ஒன்று சந்திரனைக் கிறிப் பார்த்து, சந்திர மண்டலத்தின் மேற்பரப்பு பற்றி அதிசயமான தகவல்களைத் தெரிவித்து வருவது மனித குலத்தின் அபார சாதனைக்கு ஓர் அழுத்தமான சான்றாகும்.

ஆயின் மனிதர்களின் கையை மீறிய சக்தி ஒன்று உண்டு என்பதையும் இச்சமயத்தில் சோதனை போல் நிகழ்ந்த ஒரு சம்பவம் உணர்த்துகிறது. தலைசிறந்த ருஷிய விண்வெளிப் பயணியாகிய கொமரோவ் அவர்கள் வான சஞ்சாரம் முடித்தபின், திட்டமிட்டபடி புவியில் வந்திறங்கவொண்ணாமல் விபத்துக்காளாகி மரணமடைந்துவிட்டார். சிறிது காலத்துக்கு முன்னரே மூன்று அமெரிக்க விண்வெளிப் பயணிகள் விபத்தில் மாண்டதாகப் படித்தோம். மனித குலம் வெற்றிப் பெருமிதத்தில் அகந்தை கொண்டு விடலாகாதென்றே சில நல்ல ஆன்மாக்கள் பலியாகின்றனவோ, என்னவோ?

'சந்திரனை விண்வெளிக்கலம் தோண்டிப் பார்த்து விட்டது; இன்னும் அதைத் தேவதை என்று சொல்லுபவர்கள் இருக்கிறார்களே' என்று நம் நாட்டுப் பகுத்தறிவாளர் சிலர் அங்கலாய்க்கிறார்கள். சந்திரனில் கோடு போட்டுவிட்டதால் அதன் தெய்வத் தன்மைக்கு எந்த ஊறும் ஏற்பட்டுவிடவில்லை: எத்தனையோ கலப்பைகளும் கருவிகளும் தினந்தோறும் உழுது வருகிற நம் பூமியையுந்தான் பூமா தேவி என்று போற்றி வந்திருக்கிறோம். ஏன், தெய்வத்தை மறுக்கிறவர்களின் அந்தரான்மாவிலுங்கூட ஆண்டவன் இருப்பதாகவே கருதி வருகிறோம். இது வெறும் வாதத்தால் உணர முடியாத — உணர்த்த முடியாத விஷயம். இதயத்தைத் திறந்து வைத்துக் கொண்டாலே இந்த மர்மங்கள் புரிய வரும்.

---

தொழிலதிபரும், அண்ணாமலை சர்வகலாசாலை இணைவேந்தருமான ராஜா ஸர் எம். ஏ. முத்தையா செட்டியார் அவர்களின் உருவப் படத்தை ஏப்ரில் 25ந் தேதியன்று சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழக முதலமைச்சர் திரு அண்ணாதுரை அவர்கள் திறந்து வைத்தார். ''தமிழ் மொழி அழிந்தால் நாம் இல்லை. ஆங்கிலம் அற்றுப் போனால் உலகத்தோடு உள்ள நம்முடைய தொடர்பு அறுபட்டுப் போகும். மாநில அரசின் அதிகாரம் குறைக்கப்பட்டால் ஆட்சி நடத்தியும் பயனில்லை. மக்களுக்குத் தேவையான இம்மூன்று அடிப்படைக் கொள்கைகளையும் நாற்பதாண்டுகளாக வலியுறுத்தி வருபவர் திரு முத்தையா செட்டியார் அவர்கள். முதன் முதலாகத் தமிழகத்தில் ஹிந்தி புகுத்தப்பட்டபோது அதை எதிர்த்துத் தமிழ்க் கொடியைத் தாங்கி வந்தவர் அவர். எனவே, அவரது உருவப் படத்தைத் திறந்து வைப்பதில் நான் பெருமகிழ்ச்சி கொள்கிறேன்'' என்றார் முதலமைச்சர். கல்லூரி டிரஸ்டு போர்டு தலைவர் திரு டி. எஸ். கச்சாபிகேச முதலியார் அவர்கள் கல்லூரியின் சார்பில் படத்தைப் பெற்றுக் கொண்டார்.



**007ல் ஆரம்பித்து 999 வரை பல்வேறு அடையாள எண்களை உடைய எண்ணற்ற ஒற்றர்கள் திரை உலகை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளார்கள். இப் படங்கள் மக்களை இந்த அளவுக்குக் கவரக் காரணம் என்ன ?**

"அதிகபட்சமாக நான் கொடுக்கத் தயாராக இருப்பது ஒரு லட்சம் டாலர்தான்! அதற்கு மேல் ஒரு டாலர்கூடக் கொடுக்க நான் தயாரில்லை" என்ற குரல் டெலிபோன் மூலம் மறுமுனையிலிருந்து ஒலித்தது.

இந்த முனையில் டெலிபோனைக் கையில் வைத்திருந்த காரியதரிசி சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த யஜமானனிடம் டெலிபோனில் ( ; ; விஷயத்தைச் சொன்னார்.




அந்த யஜமான் சர்வ அலட்சியமாக, "கால் மீலியன், அதாவது இரண்டரை லட்சம் டாலர் என்றுல் பேசட்டும். இல்லாவிடில் விட்டு விடட்டும்!" என்று சொன்னார்.

இந்தப் பதில் மறுமுனைக்குத் தெரியப் படுத்தப்பட்டதும், அங்கிருந்தவர் ஆத்திரத்துடன் 'டங்' என்று பேச்சு ஏதும் இல்லாமல் டெலிபோனை வைக்கும் ஒலிதான் கேட்டது.

ஆனால் சில நிமிடங்களுக்குள்ளாகவே மீண்டும் டெலிபோன்

# முற்றுகை இடும்







மணி ஒலித்தது. "சரி! இரண்டரை லட்சம் டாலர்கள் கொடுக்கிறேன்" என்ற பதிலும் வந்தது.

பதில் சொன்னவர் ஹாரி சர்ல்ட்ஸ்மன் என்ற பிரபல திரைப்படத் தயாரிப்பாளர் அந்தப் பதிலை வரவழைத்தவர் லென் டேய்டன் என்ற 'ஒற்றர் கதை' எழுத்தாளர். அவர் ஏற்கனவே 'இப்க்ரெஸ் ஃபைல் (Ipcress File) என்ற புத்தகத்தை எழுதித் திரைப்பட உலகுக்கு அளித்துப் புகழ்பெற்றவர். ஆகையால்தான் அவருடைய அடுத்த கதையான 'நூறு கோடி டாலர் மூளை' ( Billion Dollar Brain ) என்ற புத்தகத்தைத் திரைப்பட உரிமைகளுக்காக ஹாரி சால்ட்ஸ்மன் மேலும் பேரம் பேசாமல் கேட்ட விலை கொடுத்து வாங்கி விட்டார். தயங்கினால் வேறு யாரும் போட்டி போட்டு அடித்துக் கொண்டு போய் விடுவார்கள் என்ற பயம்! ஒற்றர் கதைத் திரைப் படங்களுக்கு உலகத்தின் எந்தப் பாகத்திலும் வரவேற்பு இருக்கிறது என்பதை அநுபவபூர்வமாக உணர்ந்த தயாரிப்பாளர் அவர். ஆகையால் தான் கதாசிரியருக்கு இரண்டரை லட்சம் டாலரை அள்ளிக் கொடுக்க யோசிக்கவில்லை.

சமீப காலத்தில் ஒற்றர்கள் பட மவுசு வளர்ந்து வருவதற்கு ஓர் உதாரணம்

சொல்ல வேண்டுமானுல், 'ஜேம்ஸ் பாண்ட்' பாத்திரத்தை உருவாக்கிய இயான் ஃப்ளெமிங்கையே எடுத்துக் கொள்ளலாம். 'காஸினோ ராயல்' என்ற முதல் கதையை ஃப்ளெமிங் சுமார் இருபத்தி எட்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் களுக்குத்தான் விற்ருர். ஆனல் அதே ஃப்ளெமிங் சில காலம் கழித்து அவ ருடைய வேறு ஒரு கதையை விலை பேசியபோது, இருபத்து மூன்று லட்சம் ரூபாய்களையும் பட லாபத்தில் இருபத் தைந்து சத விகித உடன்பாட்டையும் நிராகரித்தார்! அவர் கற்பனைக்கு அத் தனை மதிப்பு வளர்ந்து விட்டதே!



# ஒற்றர் படங்கள்

முன்பக்கம்: 'பொழுதுபோக் குப் படங்களேயன்றி அறிவுக்கு உகந்தவையல்ல' என்று அபிப் பிராயம் கூறும் கோபால கிருஷ்ணன்.

"உலக நாடுகள் பலவற்றை யும் பார்த்த திருப்தி ஏற்படு கிறது" என்று வாதாடும் வி. சினிவாசன்.

இந்தப் பக்கம்: கண்ணுடியைக் கரத்திலேந்தி வெற்றிச் சிரிப்பை உதிர்ப்பவர் லென் டேடன்.

ஏன்? அதே மதிப்பு ஜேம்ஸ்பாண்ட் பாத்திரத்தை ஏற்று நடித்த ஸ்காட் லாந்து தேசவாசியான ஷியான் கான ரிக்குக்கூடத்தான் அடித்தது. அச்சா பீஸில் எழுத்துப் பொறுக்கும் பையனுக வும், பால் பண்ணை ஊழியனுகவும், லாரி டிரைவராகவும், கப்பல் மாலுமியாகவும் பல துறைகளில் புகுந்து புறப்பட்டுக் கடைசியாகக் கோஷ்டி கானம் இசைக் கும் பல நபர்களில் ஒருவராக சினிமா உலகில் புகுந்த ஷியான் கானரி, ஜேம்ஸ்






பாண்டாகத் தோன்றிய முதல் படத்தில் வாங்கிய சம்பளம் வாரத்துக்குச் சுமார் நாலாயிரத்து எழுநூற்று ஐம்பது ரூபாய்! நான்கே வருட அவகாசத்தில் அவருடைய ஊதியம், படம் ஒன்றுக்குச் சுமார் நாற்பத்து ஏழு லட்சம் ரூபாய் வரை அல்லவா உயர்ந்து விட்டது!

இயான் ஃபிளெமிங்கின் ஜேம்ஸ்பாண்டை யும் ஷியான் கானரியையும் திரை உலகத் துக்கு அறிமுகப்படுத்திய பெருமை ஹாரி சால்ட்ஸ்மன்னையே சேரும்!

இந்த அறிமுகத்தினால் பணம் சம்பாதித்த வர்கள் ஆசிரியர், நடிகர், தயாரிப்பாளர் குழு மாத்திரமல்ல! எத்தனையோ வியா பாரிகள் பணத்தை அள்ளிக் குவித்தனர். வியப்பாக இருக்கிறதா?

007 என்ற எண்ணை முத்திரை வைத்து அவர்கள் வெளியிட்ட சரக்குகளெல்லாம் சூறாவளி வேகத்தில் விற்பனையாயின! ஹாலந்து தேசத்தில் ஒரு ரெடிமேட் துணிக் கடைக்காரர் '007 சட்டை' என்று ஒரு குறிப்பிட்ட ரகத்துக்குப் பெயர் வைத்தாலும் வைத்தார், ஒரே நாள் மாலையில் நாலாயிரம் சட்டைகள் விற்பனை ஆயின.

'கோல்ட் ஃபிங்கர்' படம் வெளியான வுடன் ஃபிரான்ஸ் நாட்டில் 'ஜேம்ஸ் பாண்ட் 007 தங்க நிற உள் பாவாடை' என்று பெயரிட்டு ஓர் ஆடைக்கு விளம் பரம் செய்தார்கள். அந்த வியாபார ஸ்தாப னத்தின் முன் சேர்ந்த பெண்கள் 'க்யூ' போல் சரித்திரமே கண்டதில்லையாம்!

பொதுமக்களின் அபிமானம் எந்த அளவில் இந்த மாதிரி 'ஒற்றர்கள்' படங் களின் மேல் விழுந்திருக்கிறது என்று தெரிய வில்லையா? மேலை நாட்டுத் தயாரிப்பாளர்கள் 'காற்றடிக்கும் போதே தூற்றிக் கொள்' என்கிற வகையில் 'சீக்கிரெட் ஏஜண்ட்ஸ்' என்று குறிப்பிடப்படும் ஒற்றர்கள் படங் களை எடுத்துக் குவிக்க ஆரம்பித்தார்கள்! இயான் ஃபிளெமிங், லென் டேய்டன் பாதை யில் பல கற்பனையாளர்கள் தோன்ற ஆரம் பித்து விட்டார்கள்.

இந்த 'ஒற்றர் விருந்து' சமீப காலமாகச் சென்னை நகரத் தியேட்டர்களிலும் கணிச மான அளவுக்குப் பரிமாறப்படுகிறது! ஆங் கிலம் தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் என்ற பாகுபாடு இல்லாமல் பலரும் இந்தப் படங் களைப் பார்க்கக் கூடுகிறார்கள்! பாஷைக்கோ, பேச்சுக்கோ இந்தப் படங்களில் முக்கியத்து வம் கிடையாது. ஓட்டசாட்டம், கும்குப் குத்து, டும் டாம் துப்பாக்கி வேட்டு, முக் கால் நிர்வாண மோகனாங்கிகள் ஆகிய நாலே அம்சங்களின் மாறுபட்ட கலவைகளாகத் தான் ஒவ்வொரு படமும் வருகிறது. பெயர்கள்தான் ஒவ்வொன்றுக்கும் தனி! இந்த 'ஒற்றர்கள்' படம் பற்றிய அபிப் பிராயத்தை வெவ்வேறு துறைகளைச் சேர்ந்த சிலர் எப்படிச் சொல்கிறார்கள் என்று பார்ப்போம்!

''ஆரம்பத்திலேயே பரபரப்பூட்டும் ஏதாவது ஒரு சம்பவத்துடன் படத்தை ஒட்ட ஆரம்பிக்கிறார்களா? நாம் ஏதோ மனோவசியத்துக்கு ஆளானது போல் உட் கார்ந்து விடுகிறோம். அயோக்கியன் யார்? யோக்கியன் யார்? என்று நமக்கு முன் கூட்டியே தெரியும். யோக்கியன் என்பவன் இந்த மாதிரிப் படங்களில், காணாமல் போன நபரையோ, தஸ்தாவேஜையோ கண்டு பிடித்து மீட்பவராக இருப்பார். அவர் எப்படியும் வெற்றி பெறுவார் என்றும் நமக்குத் தெரியும். ஆனாலும் அவருக்கு எத்தகைய எதிர்ப்புக்கள், சங்கடங்கள் ஏற் படுகின்றன என்பதைப் பார்ப்பதில்தான் சுவாரசியம் இருக்கிறது. நம் தமிழ்ப் படாதி பதிகள் இடம் பொருள் ஏவல் எதையும் பாராமல் தங்கள் படங்களில் பாடல்களை யும், நடனங்களையும் நுழைப்பது போல, இந்த ஒற்றர் கதைகளிலும் திடீர் திடீர் என்று அடிதடிக் காட்சிகள், இட வேறு பாடுகள் எல்லாம் வந்துவிடும்! பார்ப்ப வர்கள் கதைப் போக்கை அக்கறையுடன் கவனித்துவிடுவார்களோ என்ற அச்சத்தினா லேயே அவ்வப்போது இனக் கவர்ச்சி சூழ் நிலைகளை உண்டாக்கிக் கவனத்தைக் கலைக் கிறார்களோ என்று எனக்கு ஐயம் ஏற்படுவ துண்டு.

''நல்ல துப்பறியும் படங்களுக்கும் இந்த மாதிரி படங்களுக்கும் இடையே நிறைய வித்தியாசம் உண்டு! முந்தியதில் கட்டுக் கோப்பான கதை அமைப்பு இருக்கும். அடுத்தாற்போல் என்ன நடக்கும் என்ற ஆவல் உணர்ச்சி துளிர்விடும்! யோக்கியன் யார், அயோக்கியன் யார் என்று கடைசி வரை தெரியாது. அதைத் தெரிந்து கொள் ளும் போது பரவச உணர்ச்சி ஏற்படும். படம் பார்த்து வெகு நாட்களான பிறகும் அந்தக் கதையும் நடிப்பும் நம் மனத்திலே நிற்கும்.

''ஆனால் பிந்திய ரகப் படங்களிலே கதைக்கு அமைப்புக் கிடையாது. திட்டுத் திட்டான சம்பவங்கள்தான் நிற்கும். கதாநாயகன் ஆண்டவனுக்குச் சமம்! அவனை யாரும் ஒன்றும் செய்ய முடியாது! அவன் கண்ணை மூடிக் கொண்டு சுட்டாலும் எதிரே உள்ள எட்டுப் பேர் செத்து விழு வார்கள்! ஆனால் ஐம்பது பேர்களாகச் சூழ்ந்து சுட்டாலும் அவன் மேல் அரை குண்டு பாயாது!..... கொஞ்சம்கூட இயற்கைக்குப் பொருந்தாத சம்பவங்கள்!

''என்னமோ பொழுது போகிறது என்று பார்க்கலாமே தவிர அறிவுக்கு உகந்த படங்கள் என்ற வரிசையில் இந்தப் படங்கள் இடம் பெறுவது துர்லபம்!''

இதைச் சொன்னவர் சென்னைக் கல்லூரி ஒன்றில் ஆசிரியராகப் பணியாற்றும் வே. த. கோபாலகிருஷ்ணன்!

ஆனால் ராயப்பேட்டைவாசியான சரவண ராஜ் என்ன சொல்கிறார் தெரியுமா?

''சார், நீங்க என்னதான் சொல்லுங்க! இந்த ஸ்பை (Spy) படங்கள் கிட்டே வேறே எந்தப் படமும் அண்ட முடியாது! என்ன பிரமாதமா எடுக்கிறார்கள்? மற்றப் படங்களிலே வர்ற மாதிரி, சளசளன்னு பேசிக் கொண்டோ, நத்தை மாதிரி நகர்ந்து கொண்டோ போகிற அமைப்புகளுக்கே இங்கே இடமில்லை. ஆரம்ப முதல் கடைசி வரை ஆக்‌ஷன் சார்! அதாவது வேகம்! அட்வென்சர்! கதாநாயகன் பேனாவிலே பிஸ்டல் இருக்கா? பூட்ஸ் நுனியிலே விர்

என்று வெளிப்படும் கத்தி இருக்கா என்று தெரிந்து கொள்வது எவ்வளவு திகைப்பையும் ஆனந்தத்தையும் ஊட்டுவதாக இருக்கின்றன? இதிலேதான் இருக்கு இந்த மாதிரிப் படங்களைப் பார்க்கிறதிலே ஆனந்தம்! கனமான கதைகள், அலுத்துப் போன காதல் கட்டங்கள், அழுகை, அமர்க்களம் எல்லாம் இல்லாததினாலேயே இந்தப் படங்களுக்கு மவுசு! செக்ஸ் அப்பீலுக்காக மாத்திரம்தான் இந்தப் படங்களுக்குப் போறாங்கங்கறது ரொம்பத் தப்பு! இப்பவெல்லாம் வர்ற தமிழ்ப் படங்களிலே இல்லாத இனக் கவர்ச்சி போஸ்களா இந்தப் படங்களிலே இருக்கு? சூழ்ச்சிகளும், சதிகளும், நிறைந்த கதைக்காக இந்தப் படங்களைப் பார்க்கிறேன்.''

''நம்மாலெல்லாம் சுலபமாக, இத்தாலிக்கோ, பிரான்ஸுக்கோ, ரஷ்யாவுக்கோ, இங்கிலாந்துக்கோ போக முடியாது! ஆனால் இந்த இடங்களெல்லாம் நம்மைத் தேடிக்கிட்டு வர்ற போது நாம் ஏன் பார்க்காமலிருக்கணும்! இங்கிலீஷிலே 'லொகேஷன்' என்று சொல்லுகிறோமே, அதுதான் இடங்கள். மாறுபட்ட இடங்கள் இந்த ஸ்பை படங்களிலே ரொம்ப ஜாஸ்தி! கதாநாயகன் காணாமற் போன ரசாயனச் சேர்க்கை பார்முலாவைத் தேடி, பிரான்சுக்கும், ஸ்விட்ஜர்லாந்துக்கும் மேற்கு ஜெர்மனிக்கும் போகிறான் என்றால் அவன் போகுமிடங்களையெல்லாம் காட்டுகிறார்கள்! அவன் அடிக்கட்டும், குத்தட்டும், உதைக்கட்டும்! அதற்குள்ளே நாம் ஆடம்பரத்தையும் ஆம்ஸ்டர்டாமையும் தெளிவாகப் பார்க்கிறோமே! நம்ப புரொடியூஸர்கள் மாதிரி அவங்க திருச்செந்தூரையும் திருப்பதியையும் கோடம்பாக்கத்துக்கே வரவழைச்சுடறதில்லே! — காமிராவைத் தூக்கிக்கிட்டு ஓடறாங்க! கண்களுக்கு விருந்தளிக்கிறாங்க! இந்த ஒரு பாயிண்டுக்காகவே இந்தப் படங்களைப் பார்க்கிறேன் நான்!'' என்கிறார் இளைஞர். வி. சீனிவாசன்! இவர் திருவல்லிக்கேணிவாசி. அபிப்பிராயங்கள் மாறுபடுகின்றன என்பதற்கு உதாரணமாக, மயிலாப்பூர்வாசி ஸ்ரீமதி ராஜன் கூறுவதைக் கேட்போம்!

''இந்த ஒற்றர்கள் படங்கள் வர ஆரம்பித்த புதிதில் நான் இரண்டொரு படங்கள் பார்த்தேன். சுவாரசியமாகத்தான் இருந்தன. மற்றப் படங்களிலிருந்து ஒரு மாறுதல்! ஆனால் தொடர்ந்து பார்க்க ஆரம்பித்த போது அநேகமாய் எல்லாப் படங்களுமே ஒரே சம்பவங்களைக் கொண்டு இயங்குவன போலத் தோன்ற ஆரம்பித்தது! சுவாரசியம் குறைந்து போயிற்று. பத்துப் படங்களுக்கு ஒரு படத்தில் ஏதாவது குறிப்பிடத்தக்க புதுமை இருக்கிறது. 007 படங்களுக்குக் கிடைத்த வரவேற்பு, அதன் வழியிலே வந்த மற்றப் படங்களுக்குக் கிடைக்கவில்லை என்றுதான் தோன்றுகிறது. இனக் கவர்ச்சி விஷயங்களில் இந்த ஒற்றர் படங்கள் இவ்வளவு அதிக கவனம் செலுத்த வேண்டியதில்லை! ஒற்றர்கள் வழியில் குறுக்கிடப் பெண்களின் உதவி தேவைப்படலாம்! ஆனால் அத்தனை நெருக்கம் அவசியம் என்று தோன்றவில்லை! சீக்கிரமே இந்த ஒற்றர் படங்களின் மதிப்புக் குறையலாம்'' என்றார் அவர்.

சமீபத்தில் நான் ஓர் ஒற்றர் படம் பார்க்கப் போயிருந்த போது எனக்குப் பக்கத்தில் ஒரு வயோதிகர், ஆசாரசீலராக, அமர்ந்திருந்தார். அத்தகைய நபர்களைத் திரைப்படக் கொட்டகைகளில் பார்ப்பது அபூர்வம்! அவர் வாயை மெதுவாகக் கிண்டினேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா?

''சரித்திரம் திரும்புகிறதுன்னு சொல்லுவார்கள்! இங்கே என்னடான்னா புராணமே திரும்புகிறது. அந்தக் காலத்து தேவாசுர யுத்தம் இப்போ பாண்டு, சூட், கோட் சகிதம் நடக்கிறது. அக்கினியாஸ்திரம், மோகனாஸ்திரம் என்று கேள்விப்பட்டிருக்கிறோம் அல்லவா! அந்த அஸ்திரங்களை இப்போ வேறே உருவங்களிலே பார்க்கிறோம்! கடைசியில் அசுரர்கள் அழிகிறார்கள். தர்மம் ஜெயிக்கிறது. இதனாலே என்ன தெரிகிறது? உலகத்திலே புதுசுன்னு ஒன்றுமே இல்லே! பழசுக்குத்தான் அப்பப்போ புது உருவம் கொடுக்கறாங்க!'' என்றாரே, பார்க்கலாம்!

அபிப்பிராயங்கள் மாறுபட்டிருந்தாலும், இத்தகைய படங்கள் இந்தியாவில் முற்றுகையிடுவதோடு நிற்காமல் இந்தியத் தயாரிப்புகளிலும் ஊடுருவி நிற்கின்றன! தமிழ், ஹிந்திப் படங்களில் துப்பாக்கி வேட்டும், டும் டும் குத்து ஒலியும் அளவுக்கு மீறியே ஒலிக்கின்றன. 'காப்பி அடிப்பது வஞ்சப் புகழ்ச்சியின் சிறந்த வடிவமே' (Imitation is the best form of flattery) என்று ஆங்கிலத்தில் ஒரு சொற்றொடர் உண்டு! கலையை உபாசிப்பது வேறு! அதைக் காப்பியடிப்பது வேறு! இந்த வித்தியாசத்தை யாரும் உணர்வதாகத் தெரியவில்லை! — **கோமதிஸ்வாமிநாதன்**

## வெள்ளி விழாப் போட்டிக் கதைகள்

**'கல்கி' வெள்ளி விழாப் போட்டிக்கு நாவல்களும், சிறுகதைகளும் அனுப்பிவைத்த எழுத்தாள நேயர்களுக்கு ஓர் அறிவிப்பு**

போதிய தபால் பில்லைகளுடன் வந்த கதைகள், நவீனங்கள் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொண்டவை போகத் திருப்பியனுப்பப்பட்டு விட்டன. திரும்பிப் பெற விரும்புவோர் போதிய தபால் பில்லைகளுடன் விவரமும் விலாசமும் 15-6-67க்குள் அனுப்பி வைத்தால், கிடைப்பவற்றைத் திருப்பி அனுப்ப முயல்வோம். குறித்த தேதிக்குப் பின் வரும் கடிதங்கள் கவனிக்கப்படமாட்டாது. எவ்வித கடிதப் போக்குவரத்தும் வைத்துக்கொள்வதற்கில்லை என்பதைத் தெரிவிக்க விரும்புகிறோம்.



# ஜெம்மைப் பற்றிக் கேள்விப் பட்டீர்களா?



**ஓ! எவ்வளவு சிக்கனமானது…**

அதற்காகும் மின்சாரச் செலவு, 25% முதல் 50% வரை குறைவு. அது, பொருள்களை வைக்க, 10% முதல் 65% வரை அதிகமான இடவசதி கொண்டது; இத்தனைக்கும், கன அடிக்கு ஆகும் விலையும் மிகக் குறைவே.

எல்லா அம்சங்களையும் கொண்ட ரெஃப்ரிஜெரேடர் அது ஒன்றே:

- அது மிக நேர்த்தியான தோற்றம் கொண்டது.
- 90 நிமிடங்களில் ஐஸ்—ஏன், ஐஸ்க்ரீம் கூடத்தான்—தயாராகி விடும்.

உங்களுக்குத் திருப்திகரமாகப் பணியாற்றும் ரெஃப்ரிஜெரேடர் அதுவே:

- ஓசையில்லாமல் இயங்குகிறது.
- காற்று புகாதபடி ஸீல் செய்யப்பட்ட பகுதிக்கு 5 வருட உத்தரவாதம் உண்டு.
- விற்பனைக்குப்பின், திறமை மிக்க சர்வீஸ் வசதி கொண்டது.

இன்றே உங்கள் உள்ளூர் வியாபாரியின் ஷோ-ரூமில் ஜெம் ரெஃப்ரிஜெரேடரைப் பாருங்கள்.

கொள்திறன்: 285 லிட்டர் (10.1 கன அடி)

இந்த அளவிலும் கிடைக்கும்:
176 லிட்டர் (6.2 கன அடி)

**ஜெம்**
ரெஃப்ரிஜெரேடர்



விற்பனையாளர்கள்:
**ஜெனரல் எக்விப்மெண்ட் மர்செண்ட்ஸ் லி.**
புது டெல்லி • பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • ஃபரிதாபாத்

**ஜெம் டீலர்கள்:**

சென்னை: பிராட்வே: ஜெனரல் எக்யூப்மென்ட் மெர்ச்சென்ட்ஸ் லிட்., ❁ N.S.C. போஸ் ரோடு: ஈஸ்டர்ன் எலக்ட்ரிக்ஸ் ❁ மவுண்ட் ரோடு: இந்தியா ரேடியோ ஹவுஸ், பூர்ணிமா ஏஜென்ஸீஸ் ராஜ் மோட்டார்ஸ் ❁ பாண்டி பஜார்: ராஜேஸ்வரி எலக்ட்ரிகல்ஸ் ❁ ஒயிட்ஸ் ரோடு: பாரத் ஏர்கண்டிஷனிங் & ரெஃப்ரிஜிரேஷன் சர்வீஸஸ் ❁ லிங்கி செட்டி தெரு: திரேஜ கார்ப்பரேஷன் சைனா பஜார்: ஆந்திரா எலக்ட்ரிக் கம்பெனி ❁ கோயமுத்தூர்: பிரேமா என்ஜினீரிங் ஒர்க்ஸ், அவினாசி ரோடு ❁ திருச்சி ஜில்லாவுக்கு: அம்பிகா ஏஜென்ஸீஸ், மேற்கு புலிவார்ட் ரோடு, திருச்சிராப்பள்ளி வேலூர்: எலக்ட்ரிக் சோனிக்ஸ், ஆபீஸர்ஸ் லேன் ❁ சேலம்: குலாப்சந்த் அமுர்தலால், அப்பு செட்டி தெரு, செவ்வாய்ப்பேட்டை.

# முழுக்க முழுக்க ௨௦௦

## பி. எஸ். ராமையா

ஒரு சங்கமாகக் கூடி இயங்கி நாடகங்கள் நடத்த வேண்டும் என்று தீர்மானித்தவர்கள் அமெச்சூர்கள். அவர்கள் நடிப்பதற்கென்று நாடகங்கள் எழுதியவர்கள் அமெச்சூர்கள். அந்த நாடகங்களில் பாத்திரங்களாக நடிக்க முன் வந்தவர்கள், டைரக்ட் செய்தவர்கள், அவர்களுக்குப் பாத்திரப் பாங்குகளை விளக்கிக் காட்டி மேடைக் காட்சிகளைப் படைத்து அமைத்தவர்கள், ஒப்பனை செய்து விட்டவர்கள், பின்னணி இசைத்தவர்கள், ஒளி பரப்பியவர்கள் எல்லாரும் அமெச்சூர்கள். இப்படி முழுக்க முழுக்க அமெச்சூர்களே நடத்திய நாடகங்களைக் கண்டு கொட்டகை அதிரும்படி கரகோஷம் செய்து பாராட்டியவர்கள் மட்டும் நாடகங்களை ரசிப்பதையே தொழிலாகக் கொண்ட சென்னை நகர ரசிகப் பெருமக்கள்.

சென்ற மார்ச்சு மாதம் இருபத்தெட்டாம் தேதியிலிருந்து ஏப்ரல் மூன்றாந் தேதி வரை தியாகராய நகர் கிருஷ்ணகான சபையின் ஆதரவில் தில்லி 'தென்னிந்திய நாடக அரங்கம்' குழுவினர் வெற்றிகரமாகக் கொண்டாடிய நாடக விழா பல வகைகளில் முக்கியத்துவம் பெற்றதாகி விட்டது.

எனக்குத் தெரிந்து முழுக்க முழுக்க அமெச்சூர் பெண்கள் பங்கு கொண்டு நடித்த நாடகங்கள் தில்லி 'ஸவுத் இந்தியன் தியேட்டர்ஸ்' நடத்திய நாடகங்கள்தாம்.

அமெச்சூர் அளவில் வெற்றி பெறுவதற்கு நல்ல தலைமை வேண்டும். ''நான்'' என்ற எண்ணமின்றித் தனி ஆள் ஒவ்வொருவரும் பரஸ்பரம் விட்டுக் கொடுத்து, ஒத்துழைக்கும் மனப்பக்குவம் பெற்றிருக்க வேண்டும். இந்தத் தலைமைத் திறமையும், ஒத்துழைப்பு மனப் பக்குவமும் ஸவுத் இந்தியன் தியேட்டர்ஸ் உறுப்பினரிடையே நிறைய இருப்பதைக் காண முடிந்தது. அந்த நிறைவுதான் நாடக விழாவின் வெற்றி ரகசியம்.

இந்தக் குழுவினர் சென்னையில் ஆறு நாட்களில் ஐந்து நாடகங்களை நடித்துக் காட்டினார்கள். மூடுபனி, மிஸ். ஜானகி, மணியோசை, அண்டர் செக்ரடரி, 'டால்ஸ் ஹவுஸ்' என்ற பொம்மை வீடு — ஆகிய ஐந்து நாடகங்கள். மிஸ். ஜானகி மட்டும் இரண்டாம் முறையாக நடிக்கப்பட்டது.

மூடுபனி : ''சேஸ் ஏ குருக்கட் ஷாடோ'' (ஒரு கோணல் நிழலைத் துரத்திக் கொண்டு) என்ற தலைப்பில் வந்த ஒரு சினிமாப் படத்தின் கதையைத் தமிழ் நாடகமாக அமைத்து டைரக்ட் செய்தவர் பி. ஏ. கிருஷ்ணமூர்த்தி. இவர் தில்லியில் அகில இந்திய ரேடியோவில் பணி புரிகிறவர். இந்த நாடகத்தின் அமைப்பும், டைரக்ஷனும் சிறப்பாக இருந்தன. இந்த நாடகத்தில் மொத்தமே ஏழு பாத்திரங்கள்தாம். அவற்றிலும் மூன்று தான் நாடகக் கதையின் முக்கியமான முப்புரிகள். மற்ற நான்கும் கதை வடத்துக்கு வலுச் சேர்ப்பவை.

திரை உயருவதிலிருந்து கடைசியில் நீதியின் வெற்றியுடன் அது இறங்கும் வரை சுமார் இரண்டரை மணி நேரம் மேடை மேல் காட்சியளிக்கும் ஒரு பாத்திரம் அந்தப் பெண் லலிதாதான். லலிதாவாகத் தோன்றிய குமாரி லட்சுமியின் நடிப்பைக் காவியத் தரமானது (க்ளாஸிக்) என்றுதான் சொல்லுவேன். நாடகக் கலையில் தேர்ந்த தொழில் நடிகர் நடிகையர்கூட இந்த அளவுக்கு அந்தப் பாத்திரம் தாங்கித் தாக்குப் பிடித்திருக்க முடியுமா என்ற வியப்பு எனக்கு.

குமாரி லட்சுமியின் இந்தச் சாதனை ஒரு தனித் திறமைதான். ஆனால் அதற்கு முழுக்க முழுக்கப் பக்கபலமாக, அந்தத் திறமையை எடுத்துக் காட்டும் சாதனமாக அமைந்திருந்தது லலிதாவின் அண்ணன் என்று சொல்லிக் கொண்டு சர்வதேச போலீஸ் அதிகாரியாக வந்த குமாரின் நடிப்பு. குமாரின் குரலில் அந்தப் பாத்திரத்துக்குரிய ஒலிக் கனம் அமைந்திருப்பது ஒரு தனிச் சிறப்பு.

மேல் பார்வைக்கு விகடமும், வேடிக்கையுமாகத் தோன்றும் வகையில் கனமான உண்மைகளை அள்ளி வீசிக் கொண்டேயிருந்த குழந்தைவேலு முதலியாரின் நகைச்சுவை நாடகத்தின் படைப்பைச் சிறிதுகூடக் குறைக்காமல் உயர்த்திக் காட்டியது குறிப்பிட வேண்டிய ஒரு சிறப்பு இந்த நாடகத்தில்.

இரண்டாவது நாடகம் மிஸ் ஜானகி. இது ''தேவன்'' எழுதிய ஒரு நாவலின் கதையைத் தளமாக வைத்து ஆக்கப்பட்ட ஒரு நாடக அமைப்பு. நாடகத்தில் மூலக் கதையின் பங்கு ஒரு சிறு அளவுதான். அந்தக் கதாபாத்திரங்கள் நாடகப் பாத்திரங்களாக மாறிய போது, அவற்றில் சில பிரமிக்க வைக்கும் அளவுக்கு வளர்ந்து மேடையை நிறைத்து விட்டன. இருபதுக்கு மேலிருந்த நாடக பாத்திரங்களில் மங்களம், ஜகதீசன், சுந்தரம்



'மூடுபனி'யில் குமாரி லட்சுமி தோன்றும் ஒரு காட்சி.



திரு ஆர். கே. ராவ், கப்புடு, திரு பி. ஏ. கே.

ஆகிய மூன்று பாத்திரங்களாக நடித்த ஐயா ஸ்ரீநிவாஸன், கோபு, மாப்பிள்ளை கிருஷ்ணன் மூவரும் தனியாகவே நாடக மேடையை நிறைத்துக் காட்டும் திறமை பெற்றவர்கள். அவர்களில் இருவர் சேர்ந்து தோன்றி விட்டால் கேட்க வேண்டுமா! மூன்று மணி நேரத்துக்குள் கொட்டகை பலமுறை அதிர்ந்து ஆடியது.

இந்த நாடகத்தின் கதாநாயகி மிஸ் ஜானகியாக நடித்த குமாரி பிரேமாவின் நடிப்பில் இருந்த அடக்கம், வரம்புக் கட்டுப்பாடு ஆகியவைதாம் அதிலிருந்த தனி அழகு.

நாடகத்தை டைரக்ட் செய்த கப்புடு ஆழ்வார் செட்டியாக மூன்றே மூன்று நிமிஷங்கள் மேடை மேல் தோன்றி நடித்து ஒரு கரகோஷத்தைத் தட்டிக்கொண்டு போனார்.

மிஸ் ஜானகி மறுமுறை நடத்தப்பட்டது.

மூன்றாவது நாடகம் மணியோசை. இது ''தி பெல்'' என்ற ஆங்கில நாடகத்தின் தமிழ் வடிவம். இது ஸவுத் இந்தியன் தியேட்டர்ஸாரின் வெற்றி நாடகம் என்றுசொன்னார்கள். ஆனால் நாடகத்தன்று ஏற்பட்ட சில கோளாறுகளினால் நாடகம் சோபிக்கவில்லை.

நான்காவது அண்டர் செகரட்டரி: ரோமேஷ் மேத்தா என்பவர் எழுதிய ஹிந்தி நாடகத்தின் தமிழ்த் தழுவல். தமிழ் சமூகப் பழக்க வழக்கங்களுக்காக இதைத் தமிழாக்கிய பூர்ணம் விசுவநாதன் சில மாறுதல்கள் செய்திருக்கிறார். இல்லாத பெருமைக்கு ஆசைப்படும் பெண் மன இயல்பின் கோளாறினால் ஏற்படும் நிலைமைச் சிக்கல்கள், விசித்திரங்களை வைத்து எழுதப்பட்ட நாடகம். இதில் மிஸ் ஜானகியில் பார்த்த எட்டுப் பேர்கள் தான் பங்கு கொண்டார்கள். ஆனால் அதற்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்! நடிப்பில்தான் சொல்லுகிறேன். இவர்களில் ஒவ்வொருவரும் சொந்தக் கற்பனையுடன் நாடகப் பாத்திரத்தைப் புரிந்து கொண்டு, அதை மேடை மேல் வாழ்ந்து காட்டும் தனித் திறமை பெற்றவர்கள் என்பதை இந்த நாடகத்தில் ருசுப்படுத்தி விட்டார்கள். கப்புடுவுக்கு இந்த நாடகம் ஒரு தனி டைரக்ஷன் வெற்றி!

ஐந்தாவதுதான் இந்த விழாவின் வெற்றிச் சிகரமாக அமைந்த ''டால்ஸ் ஹவுஸ்'' என்ற பொம்மை வீடு. இது இப்ஸன் என்ற ஐரோப்பிய நாடக ஆசிரியனின் மேதைப் படைப்பு. ஐரோப்பாவின் சமூக வாழ்க்கைப் போக்கிலேயே ஒரு பெரிய புரட்சியை விளைவித்து விட்ட நாடகம் இது. அந்தச் சமூகத்தில் பெண்களின் நிலையைப் பாதாளத்திலிருந்து மேட்டுக்குத் தூக்கிவிட்ட புரட்சியில் இந்த நாடகத்துக்குப் பங்கு உண்டு.

அந்த நாடகத்தை அப்படியே மொழி பெயர்த்து விடாமல் அதன் அடிப்படைக் கருத்தைத் தளமாக வைத்து பி. ஏ. கிருஷ்ணமூர்த்தி தமிழில் ஒரு வேகம் நிறைந்த நாடகத்தை எழுதி அமைத்திருக்கிறார். இந்த நாடகத்தை டைரக்ட் செய்தவரும் அவரே.

இதில் மொத்தமே ஏழு பாத்திரங்கள் தாம். அதிலும் ஒன்று ''அம்மா, அப்பா'' என்று மட்டும் பேசும் ஒரு குழந்தை. மீதி அறுவரில் வேலைக்காரன் குண்டலமும், பாலு மாமாவும் பக்கபலங்கள் அளவுதான். மற்ற நால்வரில் லீலாவும் மனோஹரும்தான் நாடகத்தின் உயிர் நாடிகள்.

லீலாவாக நடித்த குமாரி லக்ஷ்மி நடித்தார் என்று சொல்வது தவறு. லீலா என்ற பாத்திரம் ஒரு கற்பனைப் படைப்பு என்பதைக் கூட நம்ப முடியாது போலிருந்தது நாடகத்தின் போது. நம் கண் முன் ஒரு லீலா வாழ்ந்து, சிரித்து, அழுது, பொருமிப் பெருமூச்செறிந்து நம்மைத் துடிக்க வைத்துவிட்டாள். குமாரி லக்ஷ்மியின் இந்த அதிசய சாதனைக்கு முழுக்க முழுக்க ஈடுகொடுத்து இட்டு நிரப்பியதோடு தம் அளவிலும் மிகச் சிறந்த முறையில் நடித்தார் மனோஹராகத் தோன்றிய ராஜகோபால்.

இவற்றில் நடித்தவர்களில் பலர் ஆண்களும், பெண்களும் நாடகத்தின் இடையில் அந்த நொடியில் ஏற்படும் நிலைமைக்கு ஏற்பப் பளிச்சென்று ஒரு வெட்டுப் பேச்சையோ அல்லது ஒட்டுப் பேச்சையோ வீசி நாடக ரசிகர்களைக் குலுங்கிச் சிரிக்க வைக்கும் வாக்கு வன்மை பெற்றவர்கள். அப்படி ஏதாவது பேசிவிட வேண்டும் என்ற பரபரப்பை மூட்டும் நிலைமைகள் இந்த ஐந்து நாடகங்களிலும் ஏராளமாக இருக்கின்றன. ஆயினும் ஒரு நடிகர் ஒரு நடிகைகூடத் தன்னை மறந்து அந்தப் பரபரப்புக்கு ஆளாகிவிடாமல் ஜயித்துக்கொண்டு போனதைக் குறிப்பிட்டுப் பாராட்ட வேண்டும்.

சென்னையில் அமெச்சூர்நடிகர்கள், தொழில் நடிகர்கள் ஆகிய இருசாராரிடமும் எனக்கு நிறையப் பழக்கம் உண்டு. அதனால் தில்லி அமெச்சூர்கள் மேடைக்கு வெளியே எப்படி இருக்கிறார்கள், ''நான்'' எந்த அளவில் இருக்கிறது என்று அறியும் குறுகுறுப்புடன் அவர்களுடன் பேசினேன். அவர்களில் பலருக்கு மேடைக்கு வெளியே தாங்கள் அமெச்சூர் நடிகர்கள் என்ற பிரக்ஞையே இல்லை!

குழுவைச் சேர்ந்த நடிகையர்கள் முன் நானே வலுவில் போய்க் கைகுவித்து வணக்கம் சொன்ன போது அவர்கள் எல்லாரும் கூச்சத்துடன் தலையைக் குனிந்து கொண்டது தில்லிக்குப் போய் அரசாங்க அலுவலகங்களில் உத்தியோகம் செய்தாலும், அமெச்சூர் நாடகங்களில் நடித்தாலும் இவர்கள் இன்னும் தமிழ் நாட்டுப் பெண்மணிகள் தான் என்பதை எனக்கு நினைவூட்டியது.

# சூரன் பீட்டர் 4

வால்ட் டிஸ்னி

வான வீதியிலே விட்டு வந்தோமே, பீட்டரையும் அவன் தோழர்களையும் – அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று பார்ப்போமா? பீட்டர் அவர்களைத் தன் இருப்பிடமான அந்த அதிசய உலகத்துக்கு மேலே அழைத்து வந்து விருந்தினன். வெண்டியுடன் பேச்சு சுவாரசியத்தில் ஆழ்ந்து போன பீட்டர் கீழே கொள்ளைக் கப்பல் இருப்பதையும் தன்னைப் பகைவன் ஹூக் கண்டு பிடித்து விட்டதையும் கவனிக்கவில்லை. பஞ்சுப் பொதி போன்றதொரு மேகத்தில் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

வெண்டி அதோ பார் என் உலகம்

நான் கனவில் உருவாக்கி இருந்த அதே மாதிரி...

கடல் கன்னிகள்.. பழங்குடி.. தெய்வ தேவதைகள்.. ஆஹா.. ஹா... ஹா..!

காப்டன் ஹூக்கும் கொள்ளைக் கப்பலும் கூட அங்கே.

அதோ என்ன காட்சி? பயல் வகையாகச் சிக்கிக் கொண்டான்..!

இனி தவறவே கூடாது..ம். ஜாக்கிரதை ஸ்டெடி... ரெடி...!

ஆ! பீரங்கிக் குண்டு.

பூம்..ம்

டிங்கர், இவர்களை நமது தீவிலுள்ள பத்திரமான இடத்துக்கு அழைத்துச் செல். நான் பின்னால் வருகிறேன்.

2-15

டிங்கர் ப்ளீஸ்! அத்தனை வேகமாகப் போகாதே

டிங்கர் பெல், மெல்லப் போ. எங்களால் உன் வேகத்துக்கு வர முடியாது.

குட்டி வனதேவதை 'டிங்கர் பெல்' வெண்டியின் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. வெகு வேகமாக ஒளிப்பொறியாகப் பாய்ந்தோடியது. அதற்கு வெண்டியிடம் பொறாமை. பீட்டர் தன் அன்புக்குத்தான் பாத்திரமானவன் என்று அது பெருமையுடன் எண்ணி

இருந்தது. இப்போது அதற்கு வெண்டியும் பங்குக்கு வரவே அவளிடம் அந்தக் குட்டித் தேவதைக்குக் கோபமும் பொறாமையும் ஏற்பட்டதில் வியப்பில்லை. பீட்டர் தனியாக நின்று ஹூக்கின் பீரங்கிக் குண்டுகளைச் சமாளித்துக்கொண்டிருந்த போது, தேவதை அவர்களை ஆகாயத்தில் தனியே தவிக்க விட்டு மறைந்தது.






கீழேயிருந்து இவர்களை நோக்கிக் கற்களும் கிளைகளும் பறந்து வந்தன.























# ஊர் வம்பு

- தமிழ்த் தாத்தாவின் தொண்டு
- புத்தாண்டுப் பரிசு
- தலைக்கு வந்தது தொப்பியோடு போச்சு!
- பழச் சாதனங்கள் தயாரிப்பாளர்கள் நிலம்

**ப**ழைய ஏட்டுச் சுவடிகளைத் தேடிச் சென்ற தமிழ்த் தாத்தா ஒரு முறை மாட்டு வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். மோசமான சாலையில் ஆட்டம் மிகுதியாக இருந்தது. ஆட்டம் அதிகமாக உள்ளதே என்றார் உடனிருந்தவர். 'இது ஆடுதுறை அல்லவா அதனால்தான் வண்டி இத்தனை ஆட்டம் ஆடுகிறது!' என்றார் உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள். இந்தச் சம்பவத்தைக் கூறிய நாவலர் நெடுஞ்செழியன் இப்படியெல்லாம் அல்லல்பட்டுச் சென்ற அவரென்ன டி. ஏ. (பிரயாணப்படி) பெற்றுக் கொண்டாரா? சொந்தப் பணத்தைச் செலவு செய்து தமிழார்வம் காரணமாக மேற்கொண்ட பயணங்கள் அவை. எத்தனை டி. ஏ. கொடுத்தாலும் ஆர்வம் எங்கிருந்து வரும்? யார் கொடுக்க முடியும்? என்று கேட்டார்.

திருவான்மியூர் உ. வே. சுவாமிநாதய்யர் நூலகத் திறப்பு விழாவில் அமைச்சர் நிகழ்த்திய உரை பல காலம் நினைவில் இருக்கக் கூடிய அரியதோர் உரை. தமிழின் தொன்மையையும் பெருமையையும் தமிழரின் பண்பாட்டுச் சிறப்பையும் விளக்கிய ஆழ்ந்த கருத்துரை.

''மேனாடுகளில் ஷேக்ஸ்பியர் போன்ற அறிஞர்கள் வாழ்ந்த இடத்தை எவ்வளவு ஒரு புனித உணர்ச்சியோடு போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள்? அதே போல் இந்த நூலகத்திலும் அய்யர் அவர்கள் தேடித் தந்த ஓலைச் சுவடிகள் முதலானவற்றுடன் அவரது சொந்த உடைமைகள் சிலவும் வைத்துப் பாதுகாக்கப்பட வேண்டும். அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் சென்னையில் நடைபெறப் போகும் தமிழ் விழாவில் பங்கு பற்ற வரும் அயல்நாட்டு அறிஞர்கள் மட்டுமின்றித் தமிழார்வம் மிக்க அனைவருமே வந்து காணக்கூடிய ஒரு முக்கியமான இடமாக இந்த நூலகம் அமையும்'' என்றார் திரு நெடுஞ்செழியன்.

**ஆ**ங்கிலப் புத்தாண்டுப் பரிசாக மவுண்ட் ரோட்டில் ஒரு சுரங்கப் பாதையைத் தந்தது சர்க்கார். இப்போது தமிழ்ப் புத்தாண்டில் மற்றொரு பரிசாக சென்ட்ரல் ரயில் நிலையத்தருகே ஒரு சுரங்கப் பாதையைத் தந்துள்ளது தமிழக அரசு. தமிழ் நாட்டிலேயே மிகப் பெரிய புகை வண்டி நிலையமும், மிகப் பிரும்மாண்டமான ஆஸ்பத்திரியும் எதிரெதிரே அமைந்துள்ள இந்தப் பகுதியில் போக்குவரத்து நெருக்கடி அதிகம். மணிக்குச் சுமார் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட நடை ராஜாக்கள் இந்தப் பாதையைக் கடக்கின்றனர். ரயிலைப் பிடிக்கக் காரில் விரையும் மக்களும் இனி போக்குவரத்து நெருக்கடியினால் அல்லலுற வேண்டியிராது. ரயிலைக் கோட்டைவிட வேண்டிய அவசியமுமிராது. இந்தச் சுரங்கப் பாதையைத் திறந்து வைத்த திரு அண்ணாதுரை அவர்கள், ''பொதுப் பணித் துறையில் நிர்மாணிக்கப்படும் கட்டடங்கள்தான் சில மக்களின் கோபங்களுக்கு உள்ளாக நேரிடுகிறது. பிறரைப் பற்றி வசைபாடும் மொழிகளும் இந்தக் கட்டிடச் சுவரில் இடம் பெற்று வருகின்றன. இந்நாட்டு மன்னர்களில் சிலர் தங்கள் வெற்றிலைச் சாற்றைச் சுவர்களில் துப்பி மகிழும் துர்ப்பாக்கியமும் நிகழும். இத்தகைய செயலைச் செய்ய வேண்டாமென மக்களைப் பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்'' என்றார். மராமத்து மந்திரி திரு கருணாநிதி இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்தார். சுரங்கப் பாதையில் முதன் மந்திரி திரு அண்ணாதுரை நுழைந்தவுடனேயே ஒரு பெரும் கூட்டம் முட்டி மோதிக் கொண்டு, நெருக்கி யடித்துக் கொண்டு சுரங்கப் பாதையில் நுழைந்தது. என்னையும் அந்தக் கூட்டத்தின் வேகம் தள்ளிக் கொண்டு போய் அடுத்த வாசலில் கொண்டு போய்ச் சேர்த்தது. அந்தப் பக்கமாக வந்த ஒரு பெருங்கூட்டம் என்னைப் புறப்பட்ட இடத்துக்கே அழைத்து வந்து விட்டது! 'சுரங்கப் பாதை எப்படி?' என்றார் ஒருவர். 'அதிருக்கட்டும், மக்களின் உற்சாகம் எப்படி இருக்கிறது பார்த்தீர்களா?' என்று திருப்பிக் கேட்டேன் நான், கலைந்த தலையைக் கோதியபடி, கிழிந்த சட்டையைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே!

**மோ**ட்டார் சைக்கிள், ஸ்கூட்டர் ஓட்டிகளும் அவர்களோடு அமர்ந்து செல்பவர்களும், 'இரும்புத் தொப்பி அணிய வேண்டுமா?' — இது இன்று எழுந்துள்ள பிரச்னை.

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் மனிதத் தலை, மூளை ஆபரேஷனில் பிரசித்தி பெற்ற டாக்டர் பி. ராமமூர்த்தி 'தலைக்கேற்படும் விபத்துக்களைத் தடுக்கும் பகுதி'யை ஜெனரல் ஆஸ்பத்திரியில் தொடங்கிவைத்த நாளன்று இந்தப் பிரச்னைக்கு விளக்கம் தந்தார்.

''இன்று ஏற்படும் மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர் விபத்துக்களில் நூற்றுக்குத் தொண்ணூறு சதவிகிதம் தலைக்குத்தான் பேராபத்தாக முடிகிறது. வேகமாகப் போகும் மோட்டார் சைக்கிளிலோ ஸ்கூட்டரிலோ செல்லுபவர் ஒரு கோழியோ, சிறுவனோ திடீரென்று பாதையில் குறுக்கிடும் போது 'பிரேக்'கைப் பலமாக அழுத்துகிறார். உடனே அத்தனை வேகத்தில்

செல்லும் வண்டி நிலைகுலைந்து அவர் தூக்கி எறியப்படுகிறார். உடலில் கனமான பாகமான தலையே முதலில் தரையைத் தாக்குகிறது. தலைக்குப் பலத்த காயம் ஏற்படுகிறது......

''மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர் ஓட்டிகளும், கூடச் செல்பவர்களும் கட்டாயம் இரும்புத் தொப்பிகள் அணிய வேண்டியது அவசியம். அவர்களுக்கு விபத்து ஏற்பட்டால் 'தலைக்கு வந்தது தொப்பியோடு போச்சு' என்ற கதையாகத் தொப்பி இலேசாக நசுங்கினாலும், தலைக்கு ஒன்றும் நேர்ந்து விடாது. மிகப் பெரிய ஆபரேஷன் சங்கடங்களிலிருந்தெல்லாம் தப்பலாம். நாகரிகம் மிகுந்த ஐரோப்பா, ஜப்பான் நாடுகளில் இரும்புத் தொப்பி அணிவதைக் கட்டாயமாகக் கொண்டிருக்கிறார்கள். நம் நாட்டில் அணிவதற்குத் தயங்குவானேன்? இரும்புத் தொப்பி அணிவது வீரத்துக்கு



அழகல்லவா?'' என்றார் டாக்டர் ராமமூர்த்தி.

''இரும்புத் தொப்பிகள் விலை ரூபாய் நூறோ, இருநூறோ அது அதிகப்படிச் செலவு என்று சிலர் கருதுகிறார்களாம்'' என்று ஒரு நிருபர் சொல்லி வைத்தார்.

''என்ன ஸார் வேடிக்கை! மூவாயிரம், நாலாயிரம் போட்டு ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள் வாங்குகிறார்கள். பிரேக் கம்பி அறுந்து போகிறது. மூவாயிரம் செலவழித்து விட்டேனே, பிரேக் கம்பி போடச் செலவழிக்க வேணுமே என்று ஒருவர் மூக்கால் அழ முடியுமா? அவர்களை உயிராபத்தான விபத்துக்களிலிருந்து தடுக்கும் அத்தியாவசியத் தேவையான இரும்புத் தொப்பி வாங்கப் பின்வாங்கக் கூடாது. இதனால் 'எத்தனை விபத்துக்களைத் தவிர்க்கலாம் தெரியுமா?''

அருகில் நின்ற டாக்டர் கலியாண ராமன், ''ஸார்! 1951ம் வருஷத்தில் ஏற்பட்ட விபத்துக்களில் 49 தலைக்காயங்கள் ஏற்பட்டன. 1965ம் ஆண்டில் 686 தலைக் காயங்களுக்கு மேல் ஏற்பட்டு அவற்றைச் சிகிச்சை செய்ய வேண்டியிருந்தது. எங்கள் சர்ஜரி யூனிட்டில் இந்தச் சதவிகிதத்தில் தலை விபத்துக்களின் எண்ணிக்கை ஏறியிருக்கிறது!'' என்று அடுக்கினார்.

''தலைக்காயங்களுக்கு உடனே சிகிச்சை அளித்தாக வேண்டும். மூளையில் இரத்தம் கட்டி விட்டால் பேராபத்து. ஜெனரல் ஆஸ்பத்திரியில் இருபத்துநான்கு மணி நேரமும் இந்த விபத்துக்களினால் ஏற்பட்ட காயங்களுக்குச் சிகிச்சை செய்யத் தயாராக ரண சிகிச்சை நிபுணரும், நர்ஸ்களும் காத்திருக்கிறோம். தலைக் காயம் பட்டவர்களுக்கு மூச்சு விடுவது துர்லபமாகி விட்டால் உடனே செயற்கை முறையில் 'பேர்ட் ரெஸ்பிரேட்டர்' மூலமாகப் பிராண வாயுவைச் செலுத்துவோம். அடிபட்டதினால் ஜுரம் 107, 108 என்று ஏறிவிடும். அவர்களுக்கு ஜுரத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமல்லவா? அதற்காக ரப்பர் பிளாங்கெட்டுக்குள் அடிபட்டவரை வைத்து பிரிஜிடயர் இயந்திரத்திலிருந்து நன்கு குளிராக்கப்பட்ட 'ஆல்கஹாலை' ரப்பர் பிளாங்கெட்டில் செலுத்தி ஜுர வேகத்தைக் கட்டுப்படுத்துவோம். மூளை வீங்கிப் போனால் எல்லா வேலைகளும் நின்று விடும். மூளையைக் குளிரச் செய்தால் இந்த வீக்கம் இறங்கிவிடும்'' என்று டாக்டர் ராஜகோபால் விவரித்துச் சொன்னார்.

திடீர் இட்லி, திடீர் ரவா தோசை, திடீர் போண்டா, திடீர் தக்காளி சூப்.... இப்படித் திடீர் திடீரென்று புதுப் புது திடீர்த் தயாரிப்புகள் மார்க்கெட்டில் விற்பனைக்கு வருகின்றன. இப்பொழுதெல்லாம் தோசை, இட்டிலிக்கு மாவரைத்துக் கலந்து சிரமப்பட வேண்டியதில்லை! ஒரு கப் திடீர் இட்டிலி அல்லது திடீர் தோசை பவுடரில் தண்ணீரைக் கலந்தவுடன் இட்டிலியும், தோசையும் செய்து கொள்ளலாம்!

'பருத்தி புடவையாகக் காய்க்க வேண்டும்' என்று விரும்பும் மக்களுக்கு இப்படி அரிய சாதனங்கள் எல்லாம் தயாராகின்றன. பழச் சாதனங்கள் தயாரிப்போர் சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் தங்கள் தயாரிப்புக்களைக் கண்காட்சியாக வைத்ததோடு, தங்கள் தயாரிப்புகளின் சுவையறியச் சிற்றுண்டி விருந்தும் அளித்தார்கள். ரோஜா குல்கந்த், ஊறுகாய்கள், சூப், இனிய பானங்கள் ஆகியவற்றைச் சுவைத்துப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. நம் தமிழகத்திலிருந்து பழச் சாதனங்கள் சிறிய பெரிய டப்பிகளில் அடைக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டு அந்நியச் செலாவணி சம்பாதிக்கின்றன. மகாராஷ்டிரத்தில் இந்தப் பழச் சாதனங்களை அதிகமாகப் பயன்படுத்தி வருகிறார்களாம். இந்த வைபவத்துக்கு வந்திருந்த தொழில் மந்திரி திரு நெடுஞ்செழியனிடம் தங்கள் பழச் சாதனங்கள் தயாரிப்புத் தொழிலுக்குத் தேவையான சர்க்கரை வழங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள் பழச் சாதனங்கள் தயாரிப்போர். மத்திய சர்க்கார் சர்க்கரைப் பங்கீட்டில் 'வெட்டு' செய்துள்ள கசப்பான விஷயத்தை இந்த இனிப்பான வைபவத்தில் வெளியிட்டார் தொழில் மந்திரி. அம்பத்தூர் தொழிற்பேட்டையில் இந்தப் பழச் சாதனங்கள் தயாரிப்புத் தொழிலுக்கு இடங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன என்னும் நற்செய்தியையும் தெரிவித்தார்.

## சுத்தமான சாக்கடை நீர்!



சாக்கடை நீரைச் சுத்தப்படுத்தும் நிலையம் மேற்கு ஜெர்மனியில் ஒரு நகரில் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. சுமார் 4½ மிலியன் டாலர் செலவில் உருவாகியிருக்கும் விஞ்ஞான அற்புதம் இது. உலகில் வேறெங்குமில்லாத இந்த அதிசய நிலையம் 840,000 கன அடி நீரை ஒரு நாளில் சுத்திகரிப்புச் செய்யும். தண்ணீர்ப் பஞ்சம் மிகுந்துள்ள இடங்களில் இது ஒரு வரப்பிரசாதம் போல் அமையுமல்லவா?

- ஜெர்மன் இன்டர்நேஷனல்

[illegible] பக்கம் - 1



கடவுளுக்குப் பயந்து வாழ்பவன் எவ்வளவு அதிகாரம் படைத்த மனிதனுக்கும் பயப்பட வேண்டியதில்லை. ஆனால் கடவுளுக்குப் பயப்படாதவன் அற்பமான மனிதர்களுக்கெல்லாம் பயந்து தீர வேண்டும்.

— தாந்தே

அனுப்பியவர்: 'முருகு'

உடலைவிட நீண்ட கால்களையும் கைகளையும் கொண்ட அதிசயமான "கிப்பான்" ரக குரங்குக்கு 15 சென்டிமீட்டர் குட்டி பிறந்திருக்கிறது. ஜெர்மனியில் கோலோன் நகரில் காப்பி ஹோட்டல் நடத்தும் ஜெர்மானியர் ஐந்து குரங்குகளை வளர்க்கிறார். பிறந்த சிறிது நேரத்திற்கெல்லாம், குரங்குக் குட்டி தாயின் வயிற்றைக் கட்டி அணைத்துக் கொண்டது. "குரங்கு சேஷ்டைகள்" செய்து, தாய்க் குரங்கு தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டது.

(டாட் - யூ. பி. எஸ்.)





### பொன்மொழிகள்

கடவுளைப் பார்ப்பது போல் எண்ணி மனிதரோடு வாழ்க; கேட்பவர் மனிதன் என்று எண்ணிக் கடவுளோடு பேசுக.

- செனேகா

☐

அடக்கத்தையும் அன்பையும், துன்பம் கற்றுக் கொடுக்கும். - ஜார்ஜ் எலியட்

☐

ஒரு மனிதனின் வாழ்வில் மூன்று விஷயங்கள் முக்கியமானவை. பிறப்பு - இறப்பு - வாழ்க்கை ஆக மூன்று. பிறப்பதை நாமறியோம். துன்பத்தோடு இறக்கிறோம். வாழ்வதற்கு மறந்துவிடுகிறோம்! - ஜீன் புருயர்

ஆதாரம்: சுதாரானியா

தகவல்: எறும்பு

☐

### ஒன்றல்ல!

எழுத்தாளர் ஏகநாதனின் மனைவி உடுத்தியிருந்த புடவையைப் பற்றி, "ஒரு கவிதையைப் போலிருக்கிறது" என்று யாரோ சொன்னார்கள். அதற்கு அவர் சொன்னார். "ஒரு கவிதையா? நான்கு சிறு கதைகள், இரண்டு கவிதைகள், ஒரு கட்டுரை என்று சொல்லுங்கள்." - இரா. சண்முகம்

## ஏமாறச் சொன்னது

வட இந்தியாவில் குல்ஜாரிலால் என்பவர் தம் பெயரோடு எம். பி. என்ற எழுத்துக்களைச் சேர்த்துக் கொண்டு பல காரியங்களை நடத்திக்கொண்டு வந்தார். அவர் பாராளுமன்ற உறுப்பினர் அல்ல என்பது கடைசியில் போலீசாருக்குத் தெரிந்துவிடவே அவரைக் கைது செய்யப் போனார்கள். ''நான் செய்தது தவறு இல்லை; என் பெயர் குல்ஜாரிலால். அதோடு என் சொந்த மாகாணமாகிய மத்தியப் பிரதேசத்தை எம். பி என்று சேர்த்துக்கொண்டேன்'' என்றார் அவர். போலீசாரால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

ஆதாரம்: 'தி ஸ்டேட்ஸ்மன்' அனுப்பியவர்: விஜயா



நானா?

## வெட்டுக்கிளிக்கு எத்தனை கண்கள்?

1. மொகலாய மன்னர்களில் ஒருவர், 'போலோ' விளையாட்டில் ஆர்வம் காட்டியிருக்கிறார். அந்த மன்னர் பெயர் என்ன?

2. ரயிலே இல்லாத நாடு! 'நாடோ' கூட்டில் அங்கம் வகிக்கும் இந்த நாட்டிற்குச் சொந்தமான ராணுவம் கிடையாது. நாடு எது?

3. வெட்டுக் கிளிக்கு எத்தனை கண்கள் உண்டு? 2? 3? 5?

4. நோபல் பரிசு பெற்ற ருட்யார்ட் கிப்ளிங் இந்திய நகரமொன்றில் பிறந்தவர். இம்மூன்றில் எது அந்நகரம்? ஆக்ரா, ஆஜ்மீர், பம்பாய்?

5. ஆடியில் ஆஸ்திரேலியாவிலிருந்து வந்ததாகக் கூறப்படும் தாவர இனம், புல் இனத்தைச் சேர்ந்தது. சென்னை எலியட்ஸ் கடற்கரையில் இதை மிகுதியாகக் காணலாம். தமாஷான பெயர் படைத்த இந்தத் தாவரத்தைத் தெரிகிறதா?

6. மனிதனால் கண்கள் திறந்தவாறிருக்கத் தும்முதல் சாத்தியமா?

7. பாரதத்தின் முதல் பெண் ஹைகோர்ட் ஜட்ஜ் என்ற பெருமை ஒரு தென்னகப் பெண்மணியைச் சாரும். நினைவிருக்கிறதா? அவர் பெயர்?

8. நாகாலாந்து ராஜ்யத்துக்குத் தனி ஹைகோர்ட் உண்டா? - பரணி

(விடை 50ம் பக்கம் பார்க்க)

பக்கம் - 2















## ஆழம் மாறும் நீச்சல் குளம்!

பெரிய நீச்சல் குளத்தில் வயது வந்தவர்களுக்கும் குழந்தைகளுக்கும் தனித்தனியே வெவ்வேறு ஆழங்கள் அமைந்திருக்கும். ஆழம் குறைந்த பகுதியில் சிறுவரும் ஆழம் மிகுதியாக உள்ள பக்கத்தில் பெரியவர்களும் நீந்தலாம், குளிக்கலாம்.

இப்படி வெவ்வேறு ஆழங்கள் அமைக்க முடியாத அளவுக்கு நீச்சல் குளம் சிறியதாக இருந்தால் என்ன செய்வது? அக்குளத்தில் பெரியோர் சிறியோர் அனைவருமே குளிக்கவேண்டுமென்றால் வழி என்ன?

நீச்சல் குளத்தின் அடிப் பாகத்தை [தரை மட்டத்தை] மேலே உயருமாறும் கீழே தாழுமாறும் விசையுடன் அமைப்பது! ஒரு விசையைத் திருப்பினால் தேவையான நிலைக்கு அடிமட்டம் உயரவோ தாழவோ செய்கிறது. இந்த வசதி காரணமாகப் பெரியோர் சிறியோர் இரு சாராரும் மாறி மாறி ஒரே நீச்சல் குளத்தில் அச்சமின்றிக் குளிக்கலாம். தற்போது இத்தகைய நீச்சல் குளங்கள் பல, ஏழு சத விதம் அதிகச் செலவில் மேற்கு ஜெர்மனியில் பல இடங்களில் நிறுவப்பட்டு வருகின்றன.

- ஜெர்மன் இன்டர்நேஷனல்

## துரதிருஷ்டம்!

உலக சரித்திரத்தில் 1883 ஆகஸ்டு 27ந் தேதி துரதிருஷ்டம் பிடித்த நாள். அன்று தான் இந்தோனேஷியாவைச் சேர்ந்த 'க்ராக்கட்டோவா' என்ற எரிமலை வெடித்தது. அதனால் அந்த மலையும் அதன்மேல் உள்ள 14 க்யூபிக் மைல் கனம் கொண்ட பாறைக் கூட்டங்களும் ஒரு நொடியில் 30 மைல் தூரம் உயரத் தூக்கி எறியப்பட்டன. இதன் ஒலி 3000 மைல் அப்பால் இருக்கும் மடகாஸ்கர் தீவிலும் பயங்கரமாகக் கேட்டது. இந்த மலை வெடித்ததால் கடலில் 135 அடி உயரத்துக்கு அலைகள் கிளம்பி 36 ஆயிரம் மனித உயிர்களைப் பலி கொண்டது. பல கப்பல்கள் மூழ்கின. ஏராளமான பொருட்கள் கடல் கொந்தளிப்பால் அழிந்தன. இந்து மகா சமுத்திரம், அட்லாண்டிக் சமுத்திரம், இங்கிலீஷ் கால்வாய் - இங்கெல்லாம் பேரலைகள் தோன்றின: சுருங்கச் சொன்னால் முப்பத்திரண்டரை மணி நேரத்தில் பூமியின் சுற்றளவில் பாதிப் பாகம் பாதிக்கப்பட்டது.

மூலம்: 'மாத்ருபூமி' தகவல்: அபிஜோன்



## மணமகன் தேர்தல் (நாடகம்)

சங்கரன் என்னும் பணக்காரரின் மகளான விஜயாவை மணக்கக் குமரன், கணேசன், நாதன் என்னும் மூவரிடையேயும் பலத்த போட்டி ஏற்படுகிறது. இந்த மூவர் போதாக் குறைக்கு ஒரு கம்பவுண்டர் வேறு நான்காவது வேட்பாளனாகச் சேர்ந்து கொள்கிறான். நவநாகரிக நங்கையான விஜயா எல்லாருக்கும் தூக்கிவாரிப் போடும்படியாக மனைவியை இழந்த ஒரு டாக்டரைக் கணவனாகத் தேர்ந்தெடுக்கிறாள். அவர் குழந்தைகளுக்குத் தாயாக இருக்கவே விஜயா விரும்பினாள் என்பது நாடகத்தின் 'சஸ்பென்ஸ்!' நாடகத்தின் புதுமையான கருத்துக்கு நாடக ஆசிரியர் ஸ்ரீ ஆர். பானுவைப் பாராட்ட வேண்டியதுதான்.

நாடகத்தை டைரக்ட் செய்த எம். எஸ். எஸ். மணி தம் பணியை நன்றாய்ச் செய்திருந்தார்.

விஜயாவாக நடித்த குமாரி ஜயந்தி பல உடைகளில் தோன்றி எல்லாரையும் கவர்ந்து விட்டார். குமரனாக நடித்த டி. ஆர். முரளி மனோகர், கணேசனாக நடித்த கே. வைத்தியநாதன், நாதனாக நடித்த எம். எஸ். எஸ். மணி ஆகிய மூவரும் தங்கள் நடிப்பினால் நாடகத்துக்குப் புத்துயிர் கொடுத்தனர்.

கொசுவம் புடவை மாமியும் அவள் கணவனும் நாடகத்தில் சம்பந்தம் இல்லாத பாத்திரங்களாயினும் அவர்கள் வந்தபோதெல்லாம் கொட்டகையில் கலகலப்பு உண்டாயிற்று. (இருந்தாலும் அந்தமாதிரி மாமி இப்பொழுதெல்லாம் எல்லா நாடகங்களிலும் வருகிறாள். அவளைப் பார்த்துப் பார்த்து அலுத்து விட்டது!)

நாடகத்தின் தலைப்பு "Choice" என்று இருப்பதைத் தமிழிலேயே தந்தால் நல்லது. எல்லாமே தமிழாக மாறி வரும் இந்நாளில்! நவநாகரிகப் பெண்ணொருத்தி, தன்னை மணக்க விரும்பும் வாலிபர்களைத் தள்ளிவிட்டு, தாயில்லாக் குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காக ஒரு வயதானவரை மணக்க முற்படுவது நாடகத்தில் மட்டுமே நிகழக்கூடிய அதிசயம்! இதை இன்னும் யாவரும் ஒப்புக் கொள்ளும் விதத்தில் காட்டியிருந்தால் நாடகம் பிரமாத வெற்றியைப் பெற்றிருக்கும்.

## ஸகாய் (ஹிந்தி)

ராஜஸ்ரீ, பிஸ்வஜித் இருவரும் பிரதான பாத்திரம் ஏற்று நடிக்கும் இந்த ஹிந்திப் படத்துக்கு 'நிச்சயதார்த்தம்' என்று பொருள். என்னதான் மேல்நாட்டு நாகரிகங்கள் பல பயின்றாலும், பாரதப் பெண் பாரதப் பெண்ணாகவே இருக்க வேண்டும், கணவன் என்று ஒருவனை வரித்த பின் மனத்தில் சஞ்சலத்துக்குச் சிறிதும் இடம் கொடுக்கக் கூடாது என்னும் உயரிய கருத்தைப் போதிக்க முயலும் இப்படத்தில் ஒரு வேடிக்கை என்னவென்றால், ஆபாசக் காட்சிகளுக்கும் அங்க நெளிவுகளுக்கும் குறைவில்லை. ஹாஸ்யம் என்னும் போர்வைக்குள் புகுந்து ராஜேந்திர நாத்தைக் கொண்டு 'பணம் பண்ண' முயன்றிருக்கிறார்கள். அதுவெறும் கேலிக்கூத்தாக முடிந்திருக்கிறது.

ஹெலன் மட்டும் என்ன, கதாநாயகியான ராஜஸ்ரீயைக் கூடக் குலுக்கல் மினுக்கலுக்கு ஆளாக்கிப் பாத்திரத்தின் பெருமையைக் குறைத்திருக்கிறார்கள். ஆயினும் ராஜஸ்ரீ தம் நடிப்பினால் உயர்ந்து நிற்கிறார். கதாநாயகனாக வரும் பிஸ்வஜித்தைக் காட்டிலும் அவர் தந்தையாக வரும் ஜயந்தின் உணர்ச்சி பூர்வமான நடிப்பே மனத்தைக் கவருகிறது. அடுத்தபடியாக வில்லனாக வரும் பிரேம் சோப்ராவின் நடிப்பைக் கூற வேண்டும்.

இந்தக் காலத்தில் தான் திரைப்படக் கதைகளில் எந்த விதமான புதுமையையும் காண முடிவதில்லையே! இந்தக் குறையை நீக்க எண்ணியோ என்னவோ, விபத்து மயமாக்கி ரசிகர்களைக் கவர நினைந்து 'விபத்தை' விலைக்கு வாங்கிக் கொண்டிருக்கிறார்கள் தயாரிப்பாளர்கள்! இவ்வளவு முயன்றும் கதை வட்டத்துக்குள் ஒரு வட்டமடித்து முடிந்து விடுகிறது!

என்னதான் வண்ணத்தை அள்ளி வீசினாலும் திரையுலகம் கற்பனைப் பஞ்சத்தில் சிக்கித் திணறுகிறது என்பதற்கு இந்தப்படமும் ஒரு விதிவிலக்கல்ல. ஹிந்திப் படங்களுக்கே உரிய பழைய பாட்டையில் செல்கிறது. உணர்ச்சிபூர்வமாகப் படமாக்க வேண்டும் என்ற எண்ணம் என்றைக்குத்தான் இந்தத் தயாரிப்பாளர்களிடையே எழுமோ, தெரியவில்லை!



## மகராசி

எம்.எம்.ஏ. சின்னப்பா தேவர் தயாரித்த படம் என்பதற்கு அடையாளமாகக் காளை மாட்டுச் சண்டையிலிருந்து பலவிதமான கும் கும் குத்துக்களும், 'நாக் அவுட்டு'களுமாகப் படம் முழுவதும் நிறைந்திருக்கும் சண்டைக் காட்சிகளுடன் போட்டி போட்டுக் கொண்டு காதல் காட்சிகளும் நிறைய வருகின்றன.

ரவிச்சந்திரனும், ஜெயலலிதாவும், ஆடாத ஆட்டமெல்லாம் ஆடித் தீர்த்து விடுகிறார்கள். உடலைக் கவ்வும் 'சிக்' உடையுடன் ஜெயலலிதாவும், மனோரமாவும் அடிக்கும் கேலிக் கூத்துக்கள் ரொம்ப 'ஓவர்.'

பேப்பர் பாயாக வரும் ரவிச்சந்திரன், கதையைப் பற்றியோ தாம் ஏற்ற பாத்திரத்தைப் பற்றியோ கொஞ்சம்கூடக் கவலைப்படாமல், சைக்கிளில் போகிறார், சண்டை போடுகிறார், காதல் காட்சிகளில் கட்டிப் புரளுகிறார். போதாக் குறைக்குப் பெண் வேஷம் வேறு போட்டுக் குதிக்கிறார்.

இதையெல்லாம் பார்க்கும் போது தமிழ்ப் படங்களின் துர்ப்பாக்கிய நிலையை எண்ணித் தலையில் அடித்துக் கொள்ளத் தோன்றுகிறது!

நாகேஷின் தமாஷ்களும், நடிப்பும் நன்றாயிருக்கின்றன. படத்துக்கு உயிர் கொடுப்பவரே அவர்தான். ''அழகு சாதனம். எல்லாம் நூதனம்'' என்று கூவிக் கொண்டே சைக்கிளில் சோப் பவுடர் முதலியவைகளை விற்கும் அழகு ஒன்று போதும்.

முதலாளியின் மகளான ஜெயலலிதா மானேஜர் நம்பியாரிடம் பொய்யாகக் காதல் புரிய ஆரம்பித்த கட்டத்தில் நம்பியாரின் நடிப்பு நன்றாயிருக்கிறது.

புதிய இரட்டையர்களான சங்கர் — கணேஷின் இன்சயமைப்பில் ஏனோ சுவையில்லை. ஒரு பாட்டுக்கூட நன்றாயில்லையே.

நம்ப முடியாத ஏதோ ஒரு நிகழ்ச்சியைத் திரைக் கதையின் அடிப்படையாக வைத்துக் கொண்டு ஏதோ கதைபண்ணியிருக்கிறார்கள். தயாரிப்பாளர்கள் சார்பில் கதையில் ஏதோ கருத்து இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் எந்தக் கருத்தும் படத்தில் புலனாகவில்லையே !

''மகராசி'' — தயாரிப்பாளர்களின் மூக ராசியினால்தான் வெற்றி பெற வேண்டும்.

## அராபெஸ்க் (ஆங்கிலம்)

ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்துள்ள கோலங்களை — நுணுக்கமான சித்திரவேலைப்பாடுகளை — கொண்ட தொன்மையான அராபியக் கலையை அராபெஸ்க் என்றே அழைப்பார்கள். அதுபோலவே இந்தத் திரைக் கதையிலும் பல வளைவு நெளிவுகளும், சுளிவுகளும், திருப்பங்களும், சிக்கல்களும் நிரம்பியுள்ளன. எனினும், கதை நம்பும்படியாகவும் தெளிவாகப் புரிவது போலவும் அமைந்திருப்பது கதாசிரியரின் திறமையைக் காட்டுகிறது. ஓர் அராபியப் பிரதம மந்திரியைக் கொல்ல நடக்கும் சதிச் செயல் பற்றிய கதை என்பதாலும் பெயர் பொருத்தமாக உள்ளது.

துப்பறிவோரையும் ஒற்றர்களையும் கதாநாயகர்களாகக் கொண்ட எத்தனையோ திரைப்படங்கள் வந்து போகின்றன. எல்லாமா மனத்தில் பதிந்து விடுகின்றன? நெஞ்சில் இடம் பெறும் சொற்பப் படங்களுள் ஒன்று அராபெஸ்க். கிரிகோரி பெக், ஸோபியா லாரென் ஆகிய இருவருடைய உயர்தரமான நடிப்பும் நல்ல டைரக்ஷனும் சேர்ந்து படத்தின் தரத்தை உயர்த்துகின்றன; மூன்றாம்தரத் துப்பறியும் குப்பையாக மாறிவிடாமல் காத்து விடுகின்றன. இதற்கும் மேலாகக் காமிராவைக் கையாண்டவர் பயன்படுத்தியுள்ள சில நூதன உத்திகளால் படம் தனிச் சிறப்பு பெறுகிறது. ஓரிடத்தில் மயக்க மருந்து, ஊசி மூலம் செலுத்தப்பட்டுத் தடுமாறும் கதாநாயகனின் கண்களாகவே காமிரா மாறுகிறது. மற்றொரு சிறப்பான கட்டம் மிருகக் காட்சிச் சாலைக்குள் நடைபெறும் மனித வேட்டை!

இப்போதெல்லாம் ஆங்கிலப் படங்களில் தயாரிப்பாளர், நடிகர்கள் முதலியோரின் பெயர்களை ஆரம்பத்தில் காட்டும்போது கலை மணம் கமழும் நூதன பாணிகளைக் கையாளுகிறார்கள். இந்த ஆரம்பக் காட்சியை மட்டும் குறைந்த கட்டணத்தில் நின்று கொண்டே பார்த்து விட்டுப் போக அனுமதித்தால் உண்மைக் கலாரசிகர்கள் அந்த வாய்ப்பைக்கூடப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சொல்லுமளவுக்கு உயர்தரமாக அமைகின்றன. 'அராபெஸ்க்' இதற்கு விதிவிலக்கு அல்ல.



மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்



பி.வி.ஆர்

## அத்தியாயம் 5

பாரதியால் ஜானுவின் கெஞ்சலுக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. இருந்தாலும் ''அப்போ நீ எதை வேணுமானாலும் உன் இஷ்டத்துக்குச் செய்துவிட்டு அப்புறம் இப்படிக் கெஞ்சுகிறாய்!...'' என்று இரைந்தாள். தாயாருக்கு மூச்சு வாங்கியது.

''ஜானு உன்னைப் பேச்சிலே மயக்கப் பார்க்கிறாள் அம்மா! நீ நம்பாதே!'' என்றாள், கமலா.

''நீ பேசாம இருடீ..., ஏண்டி ஜானு போன வாரம் முப்பது ரூபாய் கேட்டதற்கு இல்லேன்னு .போனியே, இதுக்கு ஏதுடீ பணம்?''

''மொதல்லே என்ன . விலைன்னு கேளு, அம்மா!'' என்றாள் கமலா.

சந்தானம் வாய் விட்டுச் சிரித்தான். அவன் ஆமோதிக்கிறான் என்று எண்ணிய கமலா தன் கண்களாலே அவனுக்கு நன்றியைச் செலுத்தினாள்.

''என்ன விலையடீ, இது?''

''இருநூறு ரூபாய்!''

''அப்பாடீ... டூ ஹண்ட்ரட் ருபீஸ்!'' என்று வியந்தாள் கமலா.

''ஏது பணம்...?''

''என் பணம் அம்மா...''

''அப்படீன்னு?''

''நான் சம்பாதிச்ச பணம். அலவன்ஸ் அரியர்ஸ் கிடைத்தது. அதைத் தவிர கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்து வைச்சிருந்தேன்...''

''நீ சம்பாதிக்கிறே என்ற ஒரு காரணத்தினாலே அந்தப் பணமெல்லாம் உன்னுடையது இல்லியா?''

ஜானு இனிமேல் அம்மாவிடம் கெஞ்சியோ, கொஞ்சியோ பிரயோசனமில்லை என்பதைப் புரிந்து கொண்டாள். கடிகாரம் வாங்கினதையே அவள் கண்டிக்கும் தோரணையில் பேசியிருந்தால் கெஞ்சித் தப்பிக்க வழியுண்டு. அம்மா அதை விட்டுவிட்டுப் பெண்ணின் உரிமையையே தகர்க்கப் பார்க்கிறாள். இதை ஜானு விடக் கூடாது. அம்மாவுக்குப் பெண்ணின் உரிமையைப் பற்றி ஏதாவது பத்தாம் பசலி அபிப்பிராயம் இருக்குமானால் அதை இப்போதே முளையிலேயே கிள்ளி எறிந்து விட வேண்டும்.

''ஏன், அதிலே உனக்கு என்ன சந்தேகம்?''

''அப்போ, உன் பணம், என் பணம் என்கிற பேதம் உன் மனசில் பட்டுவிட்டது இல்லையா?''

''நான் உழைச்சுச் சம்பாதிக்கிறது என் பணம். இதை நான் உழைக்க ஆரம்பிச்ச அன்னிக்கே நம்ப ஆரம்பித்து விட்டேன்!''

''அப்போ உனக்கும் இந்த வீட்டுக்கும் பந்தமில்லையா?''

''அது இருக்குன்னுதான் இங்கே இருக்கேன்...''

''உன்னை வளர்த்து ஆளாக்கியதற்கு நல்ல கைம்மாறு...''

''அதுதான் மாதாமாதம் சம்பளத்திலே பெரும் பகுதியை உன்கிட்டே தரேனே!''

''ஓ. நீ சாப்பிடறதுக்கும்...''

''நீ என்னை வளர்த்த கடமைக்கும்தான்...''

''அதை நீயே இவ்வளவுன்னு நிர்ணயம் பண்ணிவிட்டாய், இல்லையா?''

''ஆமாம்...''

''உன்னைப் போல அவளும் ஒரு பெண். அவள் இப்படியெல்லாம் இல்லையே? உனக்கு மட்டும் குயுக்தியான எண்ணமெல்லாம் எப்படி உதிக்குது?''

''நீ பெற்ற மூணு பெண்ணும் ஒரே மாதிரியே இருக்கணும்னு எந்த சாஸ்திரத்திலே சொல்லியிருக்கு?''

''அப்போ...?''

''ஆமாம்...எனக்கு வயசு இருபத்தி ரெண்டு ஆயிடுச்சு, நாலஞ்சு வருஷமா குமாஸ்தாவா உழைக்கிறேன்; கிடைக்கிற சம்பளத்திலே எனக்குன்னு தனியே ஒதுக்கி வைச்சுக்கிறேன். இதுலே என்ன தப்புன்னு எனக்குத் தெரியவில்லை...''

''இது வரையிலே எத்தனையை சேர்த்து வைத்திருக்கே ஜானு!''—கமலாவின் குரல் அசுருதியாக எழுந்தது.

''ஏய், நீ கொஞ்சம் வாயை மூடு. அம்மா கேட்கிறாள், நான் சொல்லிக் கொள்ளுகிறேன்!''

திடீரென்று பாரேதியின் ஆத்திரமும் கோபமும் மறைந்தன. இதுவரை அவள் உணர்ந்தறியாத வேதனையும் ஏமாற்றமும், ஒருவித விரக்தியும் மனத்தில் பிரவாகம் எடுத்தன.

''ஜானு, நான் இதுவரையில் கேட்டதெல்லாம் தப்பு, என்னை மன்னிச்சுடு... நீ இன்னும் சின்னப் பெண் இல்லை என்பதைச் சாட்டையால் அடிச்சுச் சொல்லிவிட்டாய்!''

ஜானு பதில் சொல்லவில்லை. ஒரு கைக்கடிகாரம் வாங்கிக் கொண்டதால் எந்த விதமான குற்றத்துக்கும் தான் இலக்காகி விடவில்லை என்ற எண்ணம் அவளுள் உறுதியாய் எழுந்தது. அம்மா இன்னும் பழங்காலத்தில் இருந்து வந்தால், அவள் கால வெள்ளத்தில் அம்மாவைப் பிடிக்கப் பின் நோக்கி நீந்த வேண்டும் என்று யார் சொன்னார்கள்? அந்த வீட்டில் அவள் ஒரு பெண். அவள் செய்ய வேண்டிய கடமைகள் பல இருக்கின்றன. வீட்டில் யாரும் துணிக்கும் சோற்றுக்கும் கஷ்டப்படாமல் இருக்க வேண்டும் என்று சீதா எத்தனை தூரத்துக்குப் பாடுபடுகிறாளோ, அவ்வளவு தூரத்துக்கு ஜானுவும்தான் உழைக்கிறாள். உண்மையைச் சொல்லப் போனால், சீதா சென்னை அரசாங்கத்தில் குமாஸ்தா; அவள் மத்திய சர்க்கார் குமாஸ்தா. வீட்டு வாடகை, அலவன்ஸ் அதிகமாகவே அவளுக்குக் கிடைக்கின்றன. அதற்கேற்ப அவள் வீட்டுக்குச் சீதாவைக் காட்டிலும் அதிகமே கொடுக்கிறாள்!

இவ்வளவெல்லாம் அவள் கொடுத்து எஞ்சியிருப்பதை எதிர்கால அவசியத்துக்கு என்று சேமித்து வைத்துக் கொண்டால் அது தப்பா? எத்தனையோ நாள் ஆசைப்பட்டுக் கடைசியில் ஆசை தீரக் கடிகாரம் ஒன்றை வாங்கிக் கொண்டது குற்றமா? அப்படியானால் அவள் ஆசைப்பட்டதே மன்னிக்க முடியாத தவறுதான்! ஏன், பெண்ணாகப் பிறந்ததே பெரிய தப்புதான்!

அம்மாவின் பேச்சுக்குப் பிறகு நீண்ட நேரம் மௌனம் நிலவியது. வாயைத் திறக்காத சீதா மெள்ள எழுந்து பைல்களை ரேடியோ அருகே வைத்துவிட்டு, வாசற் பக்கம் சென்றாள். கமலா அம்மாவின் பின்னாலேயே சமையற்கட்டை நோக்கி நடந்தாள்.

ஜானு தனிமையில் கைக்கடிகாரத்தை உள்ளங் கையில் வைத்துக் கொண்டு அதையே பார்த்தவளாய் உட்கார்ந்திருந்தாள். அப்போது அவளுடைய வதனமே அலாதி அழகுடன் விளங்கியது, சந்தானத்தின் கண்களுக்கு!

அழகில் ஜானு லட்சத்தில் ஒருத்தி. ஒரே வயிற்றிலிருந்துதான் மூன்று பெண்கள் விழுந்திருந்தாலும், ஜானு இரு சகோதரிகளை எதிலும் கொள்ளவில்லை. சீதா ஒல்லி, உயரம், கொஞ்சம் நீளமான முகம். அடர்த்தி இல்லாத கேசம். தளர்ந்த நடை, சோகை நிறம். கமலா அவசியத்தை விட அதிகமாக வளர்ந்தவள். இயற்கையான சோம்பல் வேறு சதையை அள்ளித் தள்ளியது. மாநிறம் கூட இல்லை. சற்றுக் குறுகிய நெற்றி. உருண்டைக் கண்கள் முகத்தின் அகலத்துக்குப் பொருத்தமில்லாத சிறு மூக்கு. அருவருப்பைத் தராவிட்டாலும் அழகில்லாதவள். அவளுடைய உடம்பின் யௌவனமும் யௌவனத்தின் பூரிப்பிலே தோன்றிய கவர்ச்சியும்தான் கமலாவிடம் மிகையாக இருந்தன.

ஆனால் ஜானு?

அவள் அழகின் அர்த்தமாய் விளங்கினாள். பெண்கள் எவ்வளவு உயரமாக இருந்தால் கண்ணுக்கு இனிமையோ அவ்வளவுதான் இருந்தாள். பட்டுப் போன்ற சிவந்த நிறம். அவள் எண்ணெய் ஸ்நானம் செய்துவிட்டு முடியாத, பின்னாத, ஈரம் போகாத கூந்தலைக் கையாலே அளைந்து கொண்டு வருவாள். கைக்கு அடங்காத கரும் குழல் முழங்கால் வரை புரளும். ஜானுவின் இரு கண்களும் வாழ வேண்டும் என்ற துடிப்பைக் கக்கும் கனல் கட்டிகள். அவளுடைய கண்கள் சிரிக்கும், பேசும், அழும். முகத்தில் சற்று அவசரமாக இறங்கிய மூக்கு எடுப்பாக இருந்தது. அம்மா எத்தனையோ கெஞ்சியும் மூக்குக் குத்திக் கொள்ள மறுத்து விட்டாள். சீதாவின் வெள்ளைக் கல் மூக்குத்தியும் பேஸரியுமே பார்ப்பதற்கு அநாகரிகமாகவும் அசிங்கமாகவும் இருக்கின்றன. அது போலத் தனக்கு என்றுமே இருக்கக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்.

ஜானு பேசினால் அவளுடைய உதடுகள் அசைவது தெரியாது. ஆனால் குரல் என்னவோ கணீரென்று

BENSONS/NGB-102C TAM

# உங்கள் பிரியமுள்ள......

புதிய மணப் பெண்ணாகிய நான் எனது பெற்றோர்களுக்கு எழுதும் இக்கடிதத்தில் நிறைய சமாசாரங்கள் இருக்கின்றன. எனது புக்ககம், புதிய வாழ்க்கை எல்லாவற்றையும் பற்றித்தான். ஆம், அதோடு மட்டுமில்லை, நான் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் புதியதாக ஆரம்பித்திருக்கும் சேவிங்ஸ் பாங்கு கணக்கைப் பற்றியும்தான் எழுதியிருக்கிறேன். நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் எப்போதும் நட்புரிமையுடன் கூடிய நம்பகமான சேவை எனக்கு கிடைக்கிறது. மணமாகிய இதர பெண்களும் நேஷனல் கிரிண்ட்லேஸ் பாங்கில் சேவிங்ஸ் பாங்கு கணக்கை ஆரம்பிக்கவேண்டுமென்பதுதான் எனது அவா.



*நீங்களும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கும் உற்ற நண்பர்களாகி விடுவீர்கள்!*

## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

பிரிட்டனில் இணைக்கப் பெற்றது . அங்கத்தினர்களின் பொறுப்பு-அளவிடப்பட்டது.

அசோஸியேடட் பாங்குகள் : லாயிட்ஸ் பாங்க் லிமிடெட். நேஷனல் புரொவின்ஷியல் பாங்க் லிமிடெ

கிளைகள் : சென்னை : 3, நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு. (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு.

தூத்துக்குடி : 44, பீச் ரோடு. ஹைதராபாத் : அபித் ரோட்

# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?

## இன்றே **ஸில்விக்ரின்** உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு. உச்சந்தலையிலே தினவு. நார்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மைதான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின்—கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று செறிந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி, ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றாடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன் பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள்— ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

**ஸில்விக்ரின்**

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

LPE-Aiyars S. I TAM

கேட்கும். சிரித்தால் சின்னஞ் சிறு பற்களின் வெண்மை, வரிசை அழகை ஒளியிட்டுக் காட்டும்.

இப்பேர்ப்பட்ட அழகி, ஆசைகளைப் பற்றி நினைப்பதில் என்ன தப்பு இருக்க முடியும்?

வெகுநேரம் அவளையே பார்த்துக் கொண்டு அறை வாசலிலேயே நின்ற சந்தானம், மெள்ள அவளை அழைத்தான்.

''ஜானு!''

''கூப்பிட்டீர்களா?''

''நான் அந்தக் கடிகாரத்தைப் பார்க்கலாமா?''

''உங்களிடம்தான் முதலில் காட்ட வேணும்னு நேத்தே வந்தேன். ஆனால் நீங்கள் எங்கேயோ அவசரம் அவசரமாகக் கிளம்பி விட்டீர்கள்...''

சற்று முன்தான் வீட்டில் ஒரு பிரளயம் நடந்திருக்கிறது என்ற சிந்தனையே இல்லாமல் ஜானு அவனை நோக்கி வந்தாள். இதைப் பற்றி அவன் சிந்திக்கவோ, ஆச்சரியப்படவோ தேவையில்லை. இது அவளுடைய குணம், சுபாவம் என்றெல்லாம் அவனுக்குத் தெரியும். பளிங்கு போன்ற அவள் மனத்தில் எதுவுமே ஒட்டிக் கறைப்படுத்தாது.

''ஃபேவர் லூபாவா!''

''ஆமாம்...''

''நல்ல உசத்தி கடிகாரம்..''

''உங்களுக்குப் பிடிச்சிருக்கா?''

''ரியலி எ குட் வாட்ச்...ஆனாலும் உன் அம்மாவின் மனசு இது விஷயமாகப் புண்பட்டிருக்க வேண்டாம்..''

''அவ மனசு புண்படக் கூடாது, அவ கோவிச்சுக்கக் கூடாதுன்னுதான் நானும் எத்தனையோ நெனைச்சேன். ஆனால் கமலா வேறு தூபம் போட்டு விட்டாள்!''

''அதுதான் இல்லை!'' என்ற சந்தானம், தாழ்ந்த குரலில் ''உண்மையிலே உன் அம்மா இப்படிப் பேசியதற்குக் காரணம், உன் கடிகாரமோ, கமலாவின் தூபமோ இல்லை ஜானு!'' என்றான்.

''பின்னே?'' ஆச்சரியம் கண்களில் பிளையாடியது.

''சீதாதான்...''

''சீதாவா அவள் என்ன செய்தாள்? வாயைக்கூடத் திறக்கவில்லையே!''

''நேத்து ராத்திரி அவளுக்குப் பார்த்திருக்கிற வரன் சம்பந்தமாகத்தான் நான் அப்படி அவசரமாக வெளியே போனேன்...''

''உம்...''

''அம்மாவுக்கு இந்த வரனை ரொம்பப் பிடிச்சிருக்கு!''



''அப்படியா! சீதாவுக்கு?''

''அவளுக்கு இன்னும் விஷயமே தெரியாது... எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. வெட்டு ஒன்று துண்டு ரெண்டா நான் இது வேண்டாம்னு உன் அம்மாகிட்டே காலங்காத்தாலே சொல்லி விட்டேன். என்கிட்டே உன் அம்மாவுக்கு இது விஷயமா கொஞ்சம் அதிருப்திதான்...''

''அப்படியா சமாசாரம்?''

''ஆமாம்...''

''அது சரி இனம் இனம் இந்தக் கடிகாரத்துக்கு நீங்க கொஞ்ச நாளைக்குக் 'கீ' கொடுக்கிறீர்களா? எனக்கு என்னவோ பயமா யிருக்கு, எங்கேயாவது அழுத்திக் கொடுத்து 'ஸ்பிரிங்'கை ஒடிச்சுடுவேனோன்னு!''

''ஓ, யெஸ்!'' என்றான் சந்தானம். பிறகு, ''மணி எட்டரை ஆயிடுத்தே!'' என்றான்.

''எட்டரை ஆயிடுத்து!'' என்று ஜானு தன் கடிகாரத்தைப் பார்த்துச் சொன்னாள்.

''அம்மா அப்பவே வெந்நீர் ஆறிப் போறதுக்கு முன்னாலே குளின்னு சொன்னாள். இப்போ அது ஐஸா மாறியிருக்கும்!'' என்றான் சந்தானம்.

''சரி சரி, நீங்க போய்க் குளியுங்கள். 'ஹிந்து' எங்கே? எடுத்துக்கொள்ளட்டுமா?'' என்றாள் ஜானு.

''உம்...'' என்ற சந்தானம் குளிக்கச் சென்றான்.

ஜானு இவ்வளவு பேச்க தாயாரிடம் பேசியும் கூட —அவள்மீது அவனுக்கு இம்மியளவு கூடக் கோபமோ, வெறுப்போ உண்டாகவில்லை.

இதற்குக் காரணம், பேசியவள் ஜானு என்பதுதானோ? கேள்விக்கு, சந்தானத்தின் மனச்சாட்சியால்கூடப் பதில் சொல்ல முடியவில்லை.

ஒன்பது மணிக்கு ஜானு கைப் பையுடன் புறப்பட்டாள்.

''மிஸ்டர், சந்தானம்! இப்போ நான் டீச்சர் விசாலத்தின் வீட்டுக்குப் போகிறேன். நானும் அவளுமாக சினிமாவுக்குப் போகலாம்னு இருக்கிறோம்!'' என்றாள்.

''அம்மாகிட்டே சொல்லவியா?''

''ஊஹூம் அவளுடைய கோபம் இன்னும் அடங்கவில்லை. நான் போனப் புறம் நீங்களே சொல்லி விடுங்கள். சாப்பிட வரப் பன்னிரண்டு மணியாகும்.''

''என்ன சினிமா?''

''எனக்கே தெரியாது. மூந்தா நாளே விசாலம் போகலாம்னு சொல்லியிருந்தாள். ஏதாவது ஒரு இங்கிலீஷ் படம்தான்!''

''உனக்கு அதிலே என்ன புரியும்?''

பதில் சொல்லாமல் ஜானு சிரித்துக்கொண்டே கிளம்பினாள்.

ஒன்பதரை மணிக்குச் சந்தானமும் சிநேகிதன் ஒருவனைப் பார்த்துவிட்டு வரலாம் என்ற எண்ணத்துடன் கிளம்பினான்.

அவனுக்குச் சகுனமாக அலமேலு அம்மாள் திண்ணையிலேறி வந்து கொண்டிருந்தாள்.

அவள் ரகுபதியின் அத்தை என்று சந்தானத்துக்குத் தெரியும்! பாகீரதி அம்மாளைத் தன்வசம் 'இழுக்கத்தான் அவள் வந்திருக்கிறாள் என்பதை அவன் ஊகித்தான். ஆனால் இனி அவனால் என்ன செய்ய முடியும்?

அலமேலு அம்மாளைக் கண்டதும் பாகீரதிக்குக் கைகால் ஓடவில்லை. ஒரு நிமிஷம் எப்படி வரவேற்பது என்று கூடப் புரியாமல் நின்று விட்டாள். காலையில் என்னதான் சந்தானத்தின் அபிப்பிராயங்களையோ, கருத்துக்களையோ அவளால் ஏற்றுக் கொள்ள முடியவில்லையாயினும், ஒரேமுகமாகத் தன் அங்கீகாரத்தையும் வெளியிடச் சக்தியற்றவளாகி விட்டாள்.

''வாருங்கோ, மாமி! அம்மா, அம்மா, அலமேலு மாமி!'' என்று கமலா வரவேற்றாள் வந்தவளை.

சீதா கூடத்துக்கு வந்தவள் ஒரு கணம் தயங்கி நின்றுவிட்டு வாசற்பக்கம் சென்றாள்.

''என்ன அம்மா, சீதா! சௌக்கியமாக இருக்கிறாயா?''

''இருக்கிறேன், மாமி!'' என்று சீதா நின்றாள்.

''உன்னை உத்தேசித்துத்தான் இப்ப நான் ஓடோடியும் வந்தேன். வீட்டிலே ஒரு காரியம் ஆகவில்லை. எல்லாம் போட்டது போட்டபடியே இருக்கு!''

''அப்படியா! நீங்கள் சிரமம் எடுத்துக் கொண்டிருக்க வேண்டாம்!''

சொல்லிவிட்டு அடுத்த கணமே சீதா விரைந்து வெளியேறினாள்.

அவளுடைய செய்கை அலமேலு அம்மாளுக்கு முகத்தில் அறைந்தாற் போல் இருந்தது. தாயாருக்கும் சீதாவின் நடத்தை ஆச்சரியத்தையும், ஏன், வேதனையையும்கூடக் கொடுத்தது.

பாகீரதியைப் பார்த்து, ''பார்த்தாயா, பாகீரதி? நான் என்ன துடிப்போடு, உற்சாகத்தோடு வந்திருக்கிறேன். இவள் சரசரன்னு போயிட்டாளே!'' என்றாள்.

''நீங்க ஒண்ணும் வித்தியாசமா நினைச்சுக்காதீங்கோ, மாமி!'' என்றாள் பாகீரதி. பிறகு, ''கமலா, மாமிக்குக் கொஞ்சம் காப்பி கலந்துண்டு வாயேன்!'' என்று கமலாவைச் சமையலறைக்கு அனுப்பினாள்.

கமலாவின் தலை மறைந்ததும் அலமேலு தாழ்ந்த குரலில், ''ஏன், பாகீரதி! நேத்து சந்தானத்தை அனுப்பினாயே? அவன் துருவித் துருவிக் கேள்விகளெல்லாம் கேட்டானாமே? ஏற்கனவே இரண்டு பேருக்கும் பரிச்சயம் இருந்ததினாலே ரகு பொறுமையாகப் பதில் சொன்னானாம்!'' என்று ஆரம்பித்தாள்.

''ஏதோ அனுப்பினேன்—'' பாகீரதி சமாளிக்க முயன்றாள்.

''அப்போ? என் மீது உனக்கு நம்பிக்கை இல்லேன்னுதானே அர்த்தம்? பத்து வருஷங்களா ஒத்தைக் காலிலே இரண்டாம்தரம் தாலி கட்டமாட்டேன்னு நின்னவன், மனசு மாறி விட்டானேன்னு தெரிஞ்சதும் உன்கிட்டே ஓடோடி வந்து சொன்னேன். ஏன்? பிறத்தியார் யாரும் அவனை வளைச்சுப் போட்டுடக் கூடாதுன்னு. நீ என்னடான்னா, துப்பறிய ஆளை அனுப்பறே?''

''இல்லே, மாமி! அப்படியெல்லாம் எனக்குச் செய்யணும் என்கிற எண்ணமே இல்லே.....''



# ஏன் இத்தனை அலுப்பு ?

## உடல் நலமும், சக்தியும் பெற உங்கள் குழந்தைக்கு

## க்ளுகோவிடா கொடுங்கள்.

பால், பருகும் நீர், பழரசம் எதிலாவது ஒரு ஸ்பூன் அளவு க்ளுகோவிடா கலந்து கொடுங்கள். கால்ஷியமும், வைடமின் டி யும் செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர்தான் க்ளுகோவிடா. விரைவில் சக்தியைத் தருகிறது. பிணியாறுபவர்களுக்கும் சாலச் சிறந்தது.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரைவேட் லிட்.**








SHBI-CP-50 TAM



## சில சமயங்களில் வலியிலிருந்து நிவாரணம் பெற்றுல் மட்டும் போதாது என்பதைப் பெண்மணிகள் அறிவார்கள் ...

ஸாரிடான் தரும் இதமும், புத்துணர்ச்சியும் சில சமயங்களில் பெண்மணிகளுக்குத் தேவைப்படுகிறது. அதிமந்தமான உணர்ச்சி, சோர்வு அல்லது வலியிலிருந்து நிவாரணமளித்து, உங்களுக்கு தெம்பான உணர்ச்சியையும் மனே உல்லாசத்தையும் அளிக்க ஒரே ஒரு ஸாரிடான் போதுமானது. ஸாரிடான் சாப்பிட்ட மாத்திரத்திலேயே அன்றைய அலுவல்களைத் திறம் படச் சமாளிக்கக்கூடிய வலுவையும், தெளிவாகச் சிந்திக்கும் திறனையும், உல்லாச உணர்ச்சியையும் பெறுவீர்கள்.

ஒரே ஒரு ஸாரிடான், வலியிலிருந்து நிவாரணம் அளித்து, சோர்வைப் போக்கி, புத்துணர்ச்சியளிக்க வல்லது. தலைவலி, பல்வலி மற்றும் உடல் வலியிலிருந்து நிவாரணம் பெற எப்பொழுதும் ஸாரிடான் தயாராக வைத்திருங்கள்.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்ர்ஸ்: வால்டாஸ் லிமிடெட்

VT. 5530 (A)

''நீ அனுப்பின ஆள் உன் பிள்ளையோ, இல்லே தம்பியோ — இல்லே அதுவும் வேண்டாம். ஏதாவது உறவுக்காரனாக இருந்திருக்கக் கூடாதா? ஏதோ உன் வீட்டிலே ஒரு அறையிலே இருக்கிறவன். முன்னே பின்னே பந்தமோ, பாசமோ இல்லாதவன். அவனையா அனுப்பறது?''

தான் செய்து விட்டது பெருந் தவறுதானோ என்று தன்னுள்ளேயே பாகீரதி அங்கலாய்த்துக் கொண்டிருக்கையில் கமலா காப்பியும் கையுமாக வந்தாள்.

காப்பியை வாங்கிக் கொண்டே, ''கமலா! நீ கொஞ்ச நேரம் திண்ணையிலே இரும்மா. பெரியவா பேசிண்டிருக்கிறோம்!'' என்றாள் அலமேலு.

கலகலவென்று சிரித்த கமலா, ''ரகசியமா, மாமி! நன்னா நிறையப் பேசுங்கோ!'' என்று கூறி அகன்றாள்.

'மடக், மடக்' என்று காப்பியைக் குடித்துத் தம்ளரையும் 'டொக்'என்று வைத்த அலமேலு புடவைத் தலைப்பால் வாயைத் துடைத்துக் கொண்டாள். வியர்வையில் நெற்றிக் குங்குமம் கரைந்து கலைந்தது. இத்தனை நேரம் சரமாரியாகக் கேட்டதற்குப் பாகீரதி பதில் சொல்ல முடியாமல் தவிக்கிறாள் என்பதைக் கண்டு, அலமேலுவுக்குத் திருப்தியும் புது உற்சாகமும் பிறந்தன.

''என்ன இருந்தாலும் நேத்து நீ சந்தானத்தை அனுப்பி யிருக்கப்படாது.''

பாகீரதிக்கு இப்போது அலமேலுவின் மீது ஆத்திரம் உண்டாயிற்று. ஆனால் அவளுடைய குடும்ப நலனைக்கருதி அல்லவா அலமேலு வந்திருக்கிறாள்? ஆத்திரத்தைக் காட்டினால் காரியமே குட்டிச்சுவராகப் போய்விடுமே ?

பதில் சொல்லாமல் இருந்தாள் அவள்.

''இன்னிக்குக் காலங்கார்த்தாலே ரகு டாக்ஸியிலே பறந்து வந்தான். வந்தவன் நான் கொடுத்த காப்பியைக் கூடக் குடிக்கவில்லே. தன் ஆத்திரம் தீரக் கொட்டினான்.''

''எதுக்கு?''

''என்ன பாகீரதி இது! விடிய விடியக் கேட்டுவிட்டு 'ஏதுக்கு'ன்னு கேட்கிறியே? ஏதுக்கு.... இந்தச் சந்தானம் போய் நேரடியா விசாரித்ததற்குத்தான்.....!''

''சரி, மேலே சொல்லுங்கோ!''

''அவன் கத்தறதெல்லாம் கத்தியாகட்டும்னு கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தேன். அப்புறம், அவன் குரல் அடங்கி ஓய்ந்தப்புறம் இரண்டு வார்த்தைகளால் சமாதானப்படுத்தினேன். நல்ல பிள்ளை இந்த ரகு.




கோபம் இவனுக்கா வந்ததுன்னு தெரியாமல் காப்பியைக் குடிச்சுட்டுக் கலியாண விஷயத்தைப் பேசினான். தனக்கு என்னதான் இந்த நாற்பது வயசிலே கலியாணம் பண்ணிக்கணும்'னு ஆசை யில்லாட்டாலும், வீடும் வாசலும் கேட்பாரற்றுப் போகிறதைப் பார்க்கச் சகிக்கலையாம்.''

''அப்படியா ?''

''கோட்டை மாதிரி வீடு. அந்தக் காலத்திலே கிரவுண்டுக்கு இருநூறு ரூபாய் இருக்கிறப்போ எட்டு கிரவுண்டு வாங்கி மாடி வீடாகக் கட்டினான் அவனுடைய அப்பன். அதுதான் என் அண்ணா. கட்டினவன் நாலு வருஷங்கள் வாழ்ந்திருந்தாலாவது திருப்தியாயிருந்திருக்குமே. ஏதோ அவன் தலைஎழுத்து. அதுதான் போகட்டும்.... அந்தப் பெண்ணாவது வீடு ஏறி விளக்கு ஏற்றினாளா...?''

அலமேலு கூறியதெல்லாம் காதில் விழ விழத் திடீர் என்று ஒரு புது பயம் பாகீரதியின் உள்ளத்தில் எழுந்தது. வீட்டின் ராசி மோசம்! ரகுபதியின் தாய் தந்தையர் அதிக நாட்கள் உயிரோடு இருக்கவில்லை. கட்டின பெண்ணும் மணக் கோலம் அழியுமுன்னே வீட்டு வாசற்படிகூட மிதிக்காமல் மறைந்து விட்டாள். சீதாவையும் அந்த வீடு பாதித்து விடுமோ ? **(தொடரும்)**

#### அத்தியாயம் பதினேழு

## பொய் வாழ்க்கை

திரிவேணியின் கண்களில் நீர் முட்டியது. மணலை உதறிவிட்டு எழுந்த ரங்கமணி அவள் கண்ணீரைக் கண்டுவிட்டான்.

''என்ன வேணி, நான் என்ன சொல்லிவிட்டேன்? இவ்வளவுதானா நீ? ஏதோ விளையாட்டுக்குச் சொன்னால்... பெண்களைப்பற்றிப் பொதுப் படையாகச் சொன்னால்..... இப்படியா?'' என்றான்.

''கண்ணில் மணல் விழுந்துவிட்டது'' என்று கூறிச் சமாளித்து விட்டாள்.

''ஐயோ, கண்ணைக் கசக்காதே. இரு. இரு.... நான் ஊதி விடுகிறேன்'' என்று கூறி அவள் கண்களைத் தன் விரல்களால் விரித்து வாயினால் ஊத அவள் முகத்துக்குப் பக்கத்தில் குனிந்தான். அவள் கண்கள் படபடத்தன.

''வேண்டாம்' என்றாள். வெட்கம் சூழ்ந்து கொண்டது.

''ஊஹூம்... மணல் உறுத்தும். பேசாமல் இரு'' என்று கூறிவிட்டுக் குனிந்தான். அவள் கண்களை நோக்கி அவன் உதடுகள் நெருங்கின. அவளுடைய கண்கள், அவன் கண்களை உற்றுப் பார்த்தன. மெதுவாக ஊதினான். அவள் உடல் சிலிர்த்தது. முகமெல்லாம் சிவந்து விட்டது. நெஞ்சு படபடத்தது.

''இப்போது போய் விட்டதா?'' என்று கேட்டான் ரங்கமணி.

''இல்லை'' என்று கூற மனம் துடித்தது. ஆனால் வாய், ''போய்விட்டது'' என்று முந்திக் கொண்டது.

இருவரும் பேசிக் கொண்டே வீட்டை நோக்கி நடந்தார்கள்.

அவன் ஒரு புதிர்தான்! அவனை எடை போட முடியவில்லை. எப்படி எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் அவனைப் புரிந்து கொள்ள முடியவில்லை. பாதரசத்தைக் கைக்குள் வைத்து மூடினால் அது விரல் இடுக்கு வழியாக வெளியே வந்துவிடும். அது மாதிரிதான், அவனை ஒரு இட்டமான முடிவுக்குள் அடக்க முடியவில்லை. அவனுடைய எண்ணம் அதுதான் என்று முடிவு கட்டுவதற்குள் அவன் தப்பி விடுகிறான்....?

ஒன்று மட்டும் நிச்சயம்! திரிவேணியின் துணையை அவன் மிகுந்த வேட்கையோடு தேடுகிறான். அவளிடம் பேசத் துடிக்கிறான். அவள் சிரிப்பதைப் பார்க்க வேண்டும் என்றே கேலி செய்கிறான். ஆனால் அந்தக் காதல்?

''நான் ராமனும் இல்லை, நீ சீதையும் இல்லை, இது மிதிலையும் இல்லை'' என்றானே, அதன் அர்த்தம்?

பேசிய வார்த்தைகளுக் கெல்லாம் வியாக்கியானம் செய்து கொண்டிருக்க




முடியுமா? விளையாட்டுக்காக அவன் ஏன் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது?

அந்தப் பழைய நினைவுகளில் திரிவேணியின் மனம் லயித்துக் கிடந்தது. நினைக்க நினைக்க அந்தச் சம்பவங்கள் திரிவேணியின் நெஞ்சில் இனிமையைப் பொழிந்து கொண்டிருந்தன.

சிறு குழந்தை முதலே உடனிருந்து விளையாட ஒரு தோழியோ, தோழனோ அவளுக்கு இல்லை. அத்தையின் செல்லத்திலும், தந்தையின் கண்டிப்பிலும் வளர்ந்தாள். சர்தாரிடம் கண்டிப்பிருந்தாலும் அவள்மீது அவருக்கு அளவுகடந்த பிரியம் என்பதை அவள் உணராமல் இல்லை. பனி உறைந்த நீர்ப்பரப்பு மேலோட்டத்தில் கடினமாயிருந்தாலும் உள்ளுக்குள் கட்டிப்படாமல் நீராக இருக்கிறதே அது மாதிரிதான் சர்தாரின் குண விசேஷமும். திரிவேணி தன் தாயைப் பார்த்ததில்லை. ஆனால் தாயன்பு எப்படி இருக்கும் என்பதை அத்தையிடம் தெரிந்து கொண்டாள். அதனால் தாயில்லை என்ற குறையை அவள் உணரவில்லை. திரிவேணியை வெளியே எங்கும் விடவே மாட்டாள் அத்தை. திரிவேணிக்கு வெளியே தெருவிலிருந்து விளையாடும் வாய்ப்பே இல்லை.

மற்றப் பிள்ளைகள் திரிவேணியின் வீட்டுக்கும் வர மாட்டார்கள். சர்தாரைக் கண்டாலே பிள்ளைகளுக்குப் பயம். அவருடைய மீசையும் கணீரென்ற குரலும், கண்டிப்பும் மற்ற குழந்தைகளுக்குப் பயத்தைக் கொடுத்தன.

குழந்தைப் பருவத்தில் தோழமை இல்லாமலே கழிந்துவிட்ட திரிவேணிக்கு அது குறையாகப் பிற்காலத்திலும் தெரிய வில்லை. அவள் கல்லூரிக்குள் நுழைந்ததுமே காந்தியின் பாதையில் இறங்கி விட்டாள். விடுதலை இயக்கத்தில் ஈடுபட்ட பிறகு அவ ளுக்கு விளையாடப் பொழுதேது?

ஆனால் ரங்கமணியோடு இப்படித் தனியே குறும்பாக விளையாடச் சந்தர்ப்பம் கிடைத்த போது தோழமையின் இனிமையை அவள் உணர்ந்தாள்.

மனிதனுக்கு என்றுமே துணை வேண்டி யிருக்கிறது. குழந்தைப் பருவத்தில் பொம்மைத் துணை, வாலிபத்தில் காதல் துணை, முதுமை யில் மக்கள் துணை, இப் படி ஏதாவது ஒரு துணை இருந்து கொண்டே இருக்க வேண்டி யிருக்கிறது. இது இல்லை யென்றால் மனிதன் வாழ முடியாது என்ப தல்ல; மலர் இல்லாத சோலைமாதிரி இருக்கும்.

இப்போது திரிவேணியின் சோலை மலர்ந்து விட்டது!

விளையாடத் தோழன் கிடைத்து விட் டான். ஆனால் எப்போதும் சண்டை இட்டுக் குறும்பு செய்யும் தோழனைப் போல் திரிவேணி யோடு எதையாவது தர்க்கம் செய்து அவளைச் சீண்டிக் கொண்டே யிருந்தான்.

அவனிடம் எதையாவது பேசி அவனிட மிருந்து வட்டியும் முதலுமாக வாங்கிக் கட்டிக் கொள்வதிலும் ஓர் இனிமையை உணர்ந்தாள். பல ஆண்டுகளாகக் குழந்தை



இல்லாதவள், கடைசியாக அருமையாகப் பெற்ற குழந்தை அவளிடம் முரண்டிக் காலாலும் கையாலும் அடிக்கும்போது எப்படி ரசிக்கிறள்! ரங்கமணியின் நட்பும் அப்படித்தான் திரிவேணிக்கு ரசித்தது!

இது வெறும் நட்புத்தானு?

'இல்லே, இது வெறும் நட்பு மட்டும் இல்லே' என்று முணு முணுத்த படியே திரிவேணி தன் கன்னத்தைத் தடவிக் கொண்டாள். அப்படியே தூங்கியும் விட்டாள்.

காலேயில் எழுந்ததும் முதன் முதலில் அவள் பார்வை ரங்கமணியின் அறைக்குள்தான் சென்றது. அவனுடைய பெட்டி தான் இருந்தது; படுக்கை இல்லே. அவன் அந்த வீட்டில் இல்லே என்பதையே அவளால் நினைத்துப் பார்க்க முடியவில்லே.

தலேயில் வலி குறைந்து விட்டது. ஆனல் கையில் இன்னும் வலி இருந்ததால் கையில் மட்டும் கட்டுப் போடப்பட்டிருந்தது. அத்தை அவளேப் படுக்கையை விட்டு நகரவிடவில்லே. ஆனல் திரிவேணிக்கோ படுத்திருக்கவே முடியவில்லே. காலேயில் பத்து மணி இருக்கும். திரிவேணி எழுந்து ரங்கமணியின் அறைக்குள் நுழைந்தாள். அவன் படுக்கும் கட்டில், உட்கார்ந்து எழுதும் மேஜை எல்லாவற்றையும் அவள் பார்வை துளேத்தது. அந்தந்த இடங்களில் அவள் கண்கள் ரங்கமணியைத் தான் தேடின.



இழந்த பொருள் மீதுதான் ஆசை அதிகமாகும். பிரிந்த நபரைத்தான் மனம் தேடித் தேடி அலேயும்.

''இங்கே நின்று கொண்டு என்ன செய்கிறய் திரிவேணி? உடம்பை அலட்டிக் கொள்ளாதே, போய்ப் படு'' என்று கூறிக் கொண்டே அங்கு வந்தாள் அத்தை. அவளேக் கண்டதும் திரிவேணிக்கு வெட்கம் வந்து விட்டது. முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டே சமாளிக்க முயன்றாள்.

''பெட்டியை வைத்துவிட்டுப் போய் விட்டாரே?'' என்றாள்.

''வேறு ஒரு பெட்டியைக் கொண்டு போயிருக்கிறன்'' என்று கூறிக் கொண்டே திரிவேணியைக் கட்டிலுக்கு அழைத்துச் சென்று படுக்க வைத்தாள் அத்தை.

தன் மன உணர்ச்சிகளே அத்தையிடமிருந்து ஒளிக்கப் படாத பாடு பட்டுக்

கொண்டிருந்தாள் திரிவேணி. அவ்வளவு கஷ்டம் அவள் பட்டிருக்க வேண்டியதில்லே. அத்தைக்குத் தெரியாத இரகசியமா இது? சாடைமாடையாக இதை அவள் உணராமலா இருந்திருப்பாள்? ஆனால் இதைத் தெரிந்து கொள்ளாதவள் போல் நடித்தாள் அத்தை.

ரங்கமணியைக் காணுமல் திரிவேணி தவிப்பதை அத்தை உணர எவ்வளவு நேரம் ஆகிவிடும்? அத்தைக்கு ஒரே ஒரு ஆற்ருமை தான். ஊருக்குப் போகுமுன்பு இந்தக் குழந்தைகள் இரண்டும் கொஞ்ச நேரம் மனம் விட்டுப் பேச முடியாமல் போய்விட்டதே என்றுதான் ஆற்ருமைப்பட்டாள்.

என்னதான் நினைத்துக் கொண்டாளோ, திடீரென்று பூஜை அறைக்குள் நுழைந்து திருநீற்றை எடுத்து வந்து திரிவேணியின் நெற்றியில் பூசினுள்.

''ஏன் அத்தை?'' — திரிவேணி வியப்புடன் கேட்டாள்.

''சும்மாத்தான்!'' என்று கூறிக்கொண்டே போய் விட்டாள் அத்தை.

ஃ ஃ ஃ

சிவானந்தம் நடந்து வந்த விதத்திலிருந்தே மனக் குழப்பத்தில் இருக்கிருன் என்பதைக் கமலா புரிந்து கொண்டாள். வீட்டுக்குள் நுழைந்தவன் முன் அறைக்குள் வந்து சோபாவில் உட்கார்ந்தவாறு பூட்ஸைக் கழற்றத் தொடங்கினுன். பக்கத்து சோபாவில் அன்றைய செய்தித் தாளேப் படித்துக் கொண்டிருந்த கமலா, ஓரக் கண்ணுல் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அவனே ஒன்றும் பேசாமல் எதையும் கவனியாமல் பூட்ஸைக் கழற்றுவதில் ஈடுபட்டிருந்தான். முக பாவத்திலிருந்தே அவன் மனநிலே சரியில்லே என்பதை உணர்ந்து கொண்டாள் கமலா.

''டி. ஐ. ஜி. போய்விட்டாரா?'' — கமலா பேசத் தொடங்கினுள்.

''இருக்கிருன். சாயங்காலம்தான் போகப் போகிருன்'' என்ற சிவானந்தம் எரிச்சலுடன் பூட்ஸைக் கழற்றி வைத்து விட்டுச் சோபாவில் சாய்ந்தான்.

''என்ன சொன்னுர்?'' — என்று கமலா கேட்டாள்.

''என்னத்தையோ வாயில் வந்ததையெல்லாம் உளறினுன்.''

''உங்களைக் குற்றம் சாட்டினுரா?''

''அவன் வேலேயே அதுதானே? ஊர்வலத்தையே நடத்த விடாமல் அடித்து விரட்டியிருக்க வேண்டுமாம். இரண்டு போலீஸ்காரர்கள் அடிபட்டது அவனுக்கு அவமானமாகி விட்டதாம்.''

''நான் சொன்னதைத்தான் அவரும் சொல்லியிருக்கிருர். ஊர்வலத்தையே நடத்த விடாமல் தடுக்கச் சொன்னேன், கேட்டீர்களா? கூட்டத்தைத்தான் கலேத்தீர்களே, துப்பாக்கியால் சுட்டுக் கலேத்திருந்தால், இவ்வளவு குழப்பம் வந்திருக்காது'' என்ருள் கமலா.

''அந்த வெள்ளை மூஞ்சி மிருகமும் உன்னைப் போலத்தான் சொல்லுகிறது. சுட்டிருக்க வேண்டுமாம். மக்களை யெல்லாம் வெறும் பன்றிகளாக நினைத்து விட்டான்.''

''நீங்கள் தவறு செய்து விட்டு மேலதிகாரியை ஏசுவானேன்? கூட்டத்தை உருப்படியாகக் கலேக்கத் தெரிய வில்லே....'' என்று குத்திப் பேசினுள் கமலா. அவளைக் கோபத்துடன் ஏறிட்டுப் பார்த்தான். இந்தச் சமயத்தில் வெங்கு அங்கு வந்து நின்ருன்.

''இன்று இரவு பொதுக் கூட்டம் நடக்கப் போகிறது'' என்ருன் வெங்கு.

''பூனே மெலிந்தால் எலி, தொட்டுக்கூட விளேயாடும். உங்களுடைய இரக்கம்தான் அவர்களுக்குத் தெம்பாகி விட்டது. எவ்வளவு திமிர் இருந்தால் இன்று பொதுக் கூட்டம் போடுவார்கள்'' என்று எரிச்சலுடன் சொன்னுள் கமலா. ''என்ன செய்வதாக உத்தேசம்?''

''ஒன்றும் செய்யப் போவதில்லே'' என்ருன், சிவானந்தம், கண்களை மூடிக்கொண்டு.

கமலா படபடப்புடன் பொரிந்து தள்ளினுள்: ''பின்னே மேலதிகாரி உங்களைக் குறை கூறியதில் என்ன தவறும்? பொதுக்கூட்டம் நடக்க விடாமல் தடுக்க வேண்டும். மீறினுல் சுட்டுத் தள்ளுங்கள். அடிபட்டுச் செத்தால் ஒழிய இந்தக் காந்திக் கூட்டத்துக்குப் புத்தி வராது.''

''ஏன்தான் உன் புத்தி இப்படிப் போகிறதோ?'' என்று அலுத்துக் கொண்டான் சிவானந்தம்.

''கிளர்ச்சிகளே யெல்லாம் முளேயிலேயே கிள்ளி எறியா விட்டால் பிறகு அடக்க முடியாமல் போய்விடும். பிறகு பழியெல்லாம் உங்கள் மீதுதான் விழும்.''

''விழட்டுமே, அப்படியாவது நாடு சுதந்திரம் அடையட்டும்.''

''அட கருமமே! போலீஸ் அதிகாரியின் வாயிலிருந்து வரும் வார்த்தையா இது? உண்மையில் நீங்கள்தான் ராஜத் துரோகி'' என்ருள். பிறகு சொன்னுள்: ''இந்த நாடு சுதந்திரம் அடைந்தால் உருப்படுமா? ராட்டினத்தைச் சுற்றிக்கொண்டு 'ராமா ராமா' என்று பஜனே செய்யும் இந்தக் காங்கிரஸ் கூட்டத்திடம் நாடு அகப்பட்டுக் கொண்டால், விமோசனம் ஏது?''

''என் பெயர்கூட இன்றையப் பத்திரிகையில் வந்திருக்கிறது பார்'' என்று பெருமையோடு கூறினுன் வெங்கு.

''பேப்பரில் உன் பெயர் வந்திருக்கிறதா, ஏன்?'' என்று அதிசயத்துடன் கேட்டுவிட்டுக் கையிலிருந்த பத்திரிகையைப் புரட்டினுள் கமலா.

''இவனுக்கு இருக்கிற உணர்வுகூட உனக்கு இல்லேயே. நேற்று மட்டும் இவன் இல்லேயென்ருல், திரிவேணியின் மண்டை பிளந்திருக்கும்'' என்ருன் சிவானந்தம்.

பேப்பரை விரித்துக் கையில் பிடித்தபடியே ஒன்றும் புரியாமல் ஒரு முறை சிவானந்தத்தைப் பார்த்து விட்டுப் பிறகு பத்திரிகையைப் படித்தாள் கமலா. வெங்குவின் தீரச் செயலேப் பற்றிப் பத்திரிகை புகழ்ந்து எழுதியிருந்தது. படித்து முடித்து விட்டுத் தலேநிமிர்ந்த கமலா, பத்திரகாளியாக மாறினுள்.

''ஏண்டா மண்டு, உன்னே யாரடா அங்கே யெல்லாம் போகச் சொன்னது? யார் அடி

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள்
# நாள்முழுவதும் சுறுசுறுப்பாக
# இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு
# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்.—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!








## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.



பட்டுச் செத்தால் உனக்கு என்னடா?'' என்று இரைந்தாள். அவளுடைய கோபத்தைக் கண்டு பயந்து நடுங்கிச் சிவானந்தத்தின் பின்னால் பதுங்கிக் கொண்டான், வெங்கு.

''இவன் வந்ததால் ஒரு உயிர் பிழைத்தது'' என்றான் சிவானந்தம்.

''சாகட்டுமே. காந்திக் கூட்டத்தில் ஒரு நபர் குறைந்தது என்றிருக்கும். இந்த அசடு ஏன் அங்கு போனான்? அதுவும் போலீஸ் அதிகாரி வீட்டுப் பையனே இப்படி எதிராளிக்கு உதவினான் என்றால், இதைவிடக் கேவலம் என்ன? நல்லவேளை வெங்கு இந்த வீட்டில் இருக்கிறான் என்பதைப் பேப்பரில் போடவில்லை.... பேய் மண்டு. இனி இந்த மாதிரி நடந்தால் அப்புறம் நான் பொல்லாதவளாகி விடுவேன்'' என்றாள். அவளுடைய பேச்சில் கசப்பு பூரணமாக இருந்தது. சிவானந்தம் வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டான். பிறகு போனைக் கையில் எடுத்துச் சுயேச்சைப் பத்திரிகை அச்சுக் கூடத்துக்குப் போன் செய்தான்.

''ஹலோ... சிவானந்தம் பேசுகிறேன். சர்தார் பிள்ளையா பேசுகிறீர்கள்? திரிவேணிக்கு எப்படி இருக்கிறது? பரவாயில்லையா?.... அடி பலமில்லையே...ஆமாம் ஆமாம்... வெங்கு இல்லையென்றால் கஷ்டம் தான்... இதோ பக்கத்தில்தானிருக்கிறான். முன்பே அவளுக்கு எச்சரித்திருந்தேன்.... அது சரி, நீங்கள் சொல்வதையே அவள் கேட்க மாட்டாளே. இந்தக் காந்திக்கு வேறு வேலை இல்லை... சரி, வைக்கட்டுமா?'' போனைக் கீழே வைத்துவிட்டுத் தலை நிமிர்ந்தான் சிவானந்தம்.

''ஏன், நேரேயே போய், அவளுக்குப் பணிவிடை செய்வதுதானே!'' என்றாள் கமலா எரிச்சலுடன்.

''உயிரையே துரும்பாக மதித்து ஒரு பெண் போராட்டத்தில் இறங்கியிருப்பதே ஓர் அதிசயம்தான். அந்தத் துணிவும், தியாகமும், பொறுமையும் உனக்கு வருமா?''

''எனக்கு ஏன் வரவேண்டும்? இந்த மாதிரி வக்கிர புத்தியெல்லாம் எனக்கு வரவேண்டாம். எங்கோ ஒரு பல் போன கிழவர் வயதுக் காலத்தில் புத்தி பேதலித்துப் போய் உளறுகிறார். அதை வேத வாக்காக நினைத்துக் கொண்டு இவளெல்லாம் கூத்தடிக்கிறாள். குண்டாந்தடி அவள் தலையைப் பதம் பார்த்திருந்தால் தெரிந்திருக்கும், அவளுடைய துணிவும் தியாகமும். அதற்குள்தான் இந்த மண்டுப் பயல் அவளைக் காப்பாற்றி விட்டானாமே'' என்றாள் ஆவேசத்துடன்.

''தடியடிக்குப் பயந்தவளா திரிவேணி? ஐந்து முறை சிறை சென்றிருக்கிறாள்.''

''பெரிய சிறை. உட்கார வைத்து ராஜ உபசாரம் செய்வதற்குப் பெயர், சிறைத் தண்டனை. சாப்பாட்டுக்கு இல்லாதவனெல்லாம் கூடக் காந்தி பெயரைச் சொல்லிக் கொண்டு சிறையில் வயிற்றை நிரப்பப் புறப்பட்டு விட்டான். இவனுக்கெல்லாம் தியாகி என்ற பட்டம் வேறு. மகா கேவலம். இதைவிடக் கேவலம், நீங்கள் இப்படியெல்லாம் பேசுவது'' என்றாள் கமலா. பதில் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான் சிவானந்தம். இன்னும் பேசினால் கமலாவின் கோபமும் படபடப்பும் அதிகரிக்கும் என்பது அவனுக்குத் தெரியும். அவளுடைய கொள்கையிலிருந்து அவளை மாற்ற முடியாது என்பதையும் உணர்ந்திருந்தான். அவளுடைய உள்ளத்தில் ஏன் அப்படிப் பழி வாங்கும் உணர்ச்சி புகுந்து கிடக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினான். சில சமயம் அவளுடைய பேச்சுக்குப் பதில் சொல்ல முடியாமல் திகைப்பான். ஒரு சமயம் அவள் சொன்னாள்: ''இந்த நாடு முன்னேற இப்போது அவசரமாகத் தேவைப்படுவது சுதந்திரம் இல்லை, சவுக்கு.''

''இந்த நாட்டின் முதல் துரோகி நீதான்!'' சிவானந்தம் எரிச்சலுடன் கூறினான்.

''முதல் தேசாபிமானியின் அருமை மனைவியாக இருக்கிறேனே அது போதும்'' என்று கூறிக் கொண்டே அவன் கழுத்தை அணைத்துக் கொண்டாள் கமலா. அவன் கோபப்படும்போதெல்லாம் அவள் பிரயோகிக்கும் ஆயுதம், இந்த அன்பு அணைப்புத்தான்.

அன்று காலையில்தான் அதிகாரியின் ஏச்சுக்கு ஆளாகியிருந்தான் சிவானந்தம். ''இந்தக் கூட்டத்தைக் கலைக்கத் தெரியாமல் கடைசியில் அடிபட்டு வந்தோம் என்று கூற வெட்கமாக இல்லை'' என்று மேலதிகாரி கேட்டபோது அவனுடைய தன்மானம் கொதித்தது. இரக்கத்துடன் நடந்து கொண்டதாக அவன் மனமே அவனைக் குற்றம் சாட்டத் தொடங்கியது. ஆனால் அறிவு அதை ஒப்புக் கொள்ளவில்லை. 'மேலதிகாரி ஒரு வெள்ளைக்காரன். எத்தனை இந்தியர்கள் செத்தால் தான் அவனுக்கென்ன?' என்று அறிவு சமாதானம் கூறியது. இந்த மனக் குழப்பத்தோடு வீடு திரும்பியபோது, கமலவாசினியின் கடும் சொல்லும் சேரவே மனம் சோர்ந்து போனான்.



## எழுதவே அறியாத மேதைகள்!

வரலாற்றில் நிலையான புகழ் பெற்றுவிட்ட எழுத்தாளர்கள் ஹோமரும், சாக்ரடீஸும். பல நூல்களை அவர்கள் இயற்றியுள்ளனர். ஆனால் ஒரு வரிகூட அவர்கள் எழுதியதே கிடையாது. அவர்களுடைய நூல்கள் அனைத்தும் மனப்பாடம் செய்யப்பட்டுப் பரப்பப்பட்டவைகளே யாகும். அவர்களுடைய வாய்மொழியாகக் கேட்டுப் பலர் அதைச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறார்கள். பின்புதான் அவை எழுத்தில் இடம் பெற்றன.



ஆதாரம்: 'அதிசயச் செய்திகள்'

தகவல்: ப. கந்தசாமி



'உண்மையிலேயே போலீஸ் அதிகாரி என்ற முறையில் நேற்று நான் கடமையைச் செய்யத் தவறிவிட்டேனா? நான் இந்த உத்தியோகத்துக்கே லாயக்கற்றவன்தானா? இந்தப் பதவி எனக்கு லாயக்கில்லை, அவ்வளவுதான்.'

மனம் பேசிக் கொண்டது. தரையைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான்.

வேலைக்காரனைக் கடைக்கு அனுப்பி விட்டு ஒரு கோப்பையில் ஓவல்டினுடன் அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள் கமலவாசகி. ஓவலை அவனிடம் நீட்டினாள். அதைக் குடித்துவிட்டுத் தலை நிமிர்ந்தான், சிவானந்தம். இந்த மாதிரி மனம் குழம்பித் தவித்து மௌனத்தை அடைக்கலம் தேடும் போதெல்லாம் கமலவாசகியின் பணிவிடை அவனுக்கு இதமாயிருக்கும். அவனைக் கிண்டிக் கிளறிவிட்டு விட்டு அவன் மனக் குழப்பத்தில் தவித்தபோது ஆறுதலாக அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டாள் அவள்.

''என்மீது கோபமா?'' — மெதுவாக அவன் தலையை வருடிக் கொண்டே கேட்டாள்.

''நீ இப்படியெல்லாம் பேசினால் மனத்துக்கு எவ்வளவு சங்கடமாக இருக்கிறது தெரியுமா?''

''நான் என்ன பேசிவிட்டேன்? உங்களுக்கு உத்தியோக உயர்வு கிடைக்க வேண்டிய இந்த நேரத்தில் இப்படிக் கோழை மாதிரி இருந்தீர்களே என்றுதான் கூறுகிறேன். இதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையே? சுதந்திரம் வெறும் பகற் கனவு. உங்களுடைய கடமையைச் செய்து நல்ல பெயர் வாங்கினால்தானே சீக்கிரம் ஜில்லா அதிகாரியாக மாறலாம். அதில் எனக்கு ஆசை இருக்கக் கூடாதா?'' என்று அவன் கழுத்தை அணைத்தவாறே கொஞ்சினாள். இதமான அணைப்பிலும், இனிமையான பேச்சிலும் சிவானந்தம் ஆறுதல் அடைந்தான்.

அப்போது அவனைக் கூப்பிட்டு மேலதிகாரியிடமிருந்து ஆள் வரவே, பரபரப்புடன் புறப்பட்டான்.

''எதற்குக் கூப்பிட்டுத் தொலைக்கிறானோ, தெரியவில்லையே'' என்று முனகிக்கொண்டே வெளியேறினான். அவன் போவதையே பார்த்துக் கொண்டு சோபாவில் சாய்ந்து கிடந்தாள் கமலவாசகி. அவள் மனம் எதையெல்லாமோ எண்ணிக் குழம்பியது.

உண்மையிலேயே அவளுக்குச் சத்தியாக்கிரகிகளைக் கொன்று குவிப்பதில் ஒரு வெறியா? சிவானந்தத்தை இந்த விஷயத்தில் தூண்டித் தூண்டி ஒரு வெறியனாக்க முயலுகிறாளே, உண்மையிலேயே அவள் அதை விரும்புகிறாளா? சிவானந்தம் பதவியில் உயர்வதில் அவளுக்கு உண்மையிலேயே அக்கறை இருக்கிறதா? அல்லது அவ்வளவும் கபட நாடகம்தானா? யார் மீதோ ஏற்பட்ட கோபத்தை உள்ளத்தில் வைத்துக் கொண்டு இப்படிக் கொதிக்கிறாளே. இந்த ஆட்டத்துக்குச் சிவானந்தத்தைத் துணையாக்க நினைக்கிறாள். அடேயப்பா, அவனிடம் அவள் செய்யும் தர்க்கமும், வியாக்கியானமும் சிவானந்தத்தைத் திணற வைத்துவிடும்.

இந்த நாடு சுதந்திரம் பெற்றாலும் சரி, அடிமையாகவே யுக யுகமாக ஆழ்ந்து கிடந்தாலும் சரி, அவளுக்குக் கவலையில்லை. ஆனால் அக்கறையிருப்பதாகக் காட்டிக் கொண்டு சிவானந்தத்தையுமல்லவா தன் பாதைக்கு இழுக்கிறாள்.

யாரையோ பழி வாங்கத் துடிக்கும் அவள் மனம், சிவானந்தத்தைக் கருவியாக்கிக் கொண்டிருக்கிறது. ஒரு க்ஷத்திரியன் மீது ஏற்பட்ட கோபத்தைத் தணிக்க க்ஷத்திரிய வம்சத்தையே அழிக்க முற்பட்ட பரசுராமரைப் போலத்தான் அவளுடைய கோபமும் எத்தனை பேரைத் தாக்குகிறது!

சிவானந்தத்தை எண்ணியபோது அவளுக்குப் பச்சாதாபம் ஏற்பட்டது. அவனுடைய அன்புக்கும் பாசத்துக்கும் தான் அருகதை உள்ளவள்தானா என்ற சந்தேகம் அவளை உறுத்தியது. அவள்மீது உயிரையே வைத்திருந்தான் சிவானந்தம். அன்பினால் அவளைத் திணற அடித்துக் கொண்டிருந்த அவனுக்கு அவள் ஏற்ற மனைவிதானா...?

இந்தச் சந்தேகம் முன் மாதிரி உள்ளத்தில் உறுத்திக் கொண்டேயிருந்தது. அவள், விரும்பித்தான் அவனை மணந்தாள். ஒரு விதத்தில் காதல் என்றுகூடச் சொல்லலாம். சிவானந்தம் அப்படித்தான் நினைத்திருக்கிறான். ஆனால் அவள் மனம் இதைக் காதல் என்று ஏற்கவில்லை. பசி இருந்தாலும் இல்லாவிட்டாலும், அந்தந்த நேரத்தில் சாப்பாட்டை முடிப்பதைப் போலத்தான் இந்தக் கலியாணமும் ஒரு கடமையை முடித்து வைப்பதற்காக நடந்ததா...? திருமணத்தில் விருப்பமிருந்ததோ இல்லையோ, சிவானந்தத்தைக் கைப்பிடிக்கும்படியான சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. மனிதனே சூழ்நிலையின் விளையாட்டுப் பொம்மைதானே—

அந்த அறையில் வடக்குப் பக்கத்தில் மாட்டியிருந்த ஒரு படத்தின் மீது அவள் கவனம் சென்றது. அந்தப் படத்தைப் பார்த்தபோது அவள் கண்கள் கலங்கின. கண்ணீரின் ஊடே அந்தப் படத்தையே உற்றுப் பார்த்தாள். அந்தப் படத்திலிருந்த நபரும் அவளையே உற்றுப் பார்ப்பதுபோல் இருந்தது. அவருடைய பருத்த சரீரமும், பரந்த முகமும், முகத்துக்கு ஏற்ற பெரிய கறுப்புப் பிரேம் மூக்குக் கண்ணாடியும், களை சொட்டும் முகமும் யாரையும் முதல் சந்திப்பிலேயே ஆட்கொண்டு விடும்.

கமலா சோபாவிலிருந்து எழுந்து படத்துக்குப் பக்கத்தில் வந்து நின்று கொண்டு அதையே வெறிக்கப் பார்த்தாள்.

''கமலா, உன்னையே ஏமாற்றிக்கொண்டு வாழ்கிறாயே அம்மா!'' — படம் கேட்பது போலிருந்தது.

''அப்பா...'' கமலாவின் உதடுகள் முனகின.

பொங்கி வந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மீண்டும் சோபாவில் வந்து அமர்ந்தாள்.

(தொடரும்)




## அவனுக்கு போர்ஹான்ஸ் கொண்டு பற்களைத் தக்கபடி பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க வேண்டிய காலம்

உங்கள் குழந்தை தூரத்து இடங்களைப் பற்றி அறிய ஆவலாயிருக்கும் போது உங்களை நாடுகிறான். உங்களிடமிருந்து அவன் கற்கும் முக்கியமான விஷயங்கள் பல. அவற்றில் ஒன்று போர்ஹான்ஸ் பற்பசையினால் பற்களைத் தக்கபடி பராமரித்தல். போர்ஹான்ஸ் ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும், தடுக்க உதவுகிறது.

பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹான்ஸ் ஈறுகளைப் பாதுகாக்கும் விசேஷப் பொருள் கொண்டது. அது உங்களுக்கு மட்டுமின்றி உங்கள் குழந்தைக்கும் நல்லது. எனவே இன்றும், என்றும் பற்கோளாறுகளைத் தடுப்பது எப்படியென்று அவனுக்குக் கற்றுக் கொடுங்கள். அவனை இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் உபயோகிக்கச் செய்யுங்கள். இப்பொழுதே, அவனுக்கு ஆயுட்கால முழுதும் பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்றுக் கொடுங்கள்.



**போர்ஹான்ஸினால்**
**பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க இதுவே சிறந்த சமயம்**




இலவசம்! "பற்களையும், ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற விவரமான வண்ணப் புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது. தபால் செலவுக்கு 10 பைசா தபால் தலைகளை அனுப்பவும்: மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்-1.

பெயர் ..............................................................

முகவரி ..............................................................

*வேண்டிய மொழியைக் கோடிட்டுக் காட்டுக: தமிழ், ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, வங்காளம், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்
உங்கள் குழந்தை படிக்க வேண்டிய முக்கியமான புத்தகங்களுள் இதுவும் ஒன்று.

K 6

**போர்ஹான்ஸ்** பற்பசை—பல்வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பெற்றது

CMGM-188 TM

## அத்தியாயம் 4

# சிறைக்கூடம்!

"இந்தக் கிழவன் இங்கே எப்படி வந்து குதித்தான் என்று திகைக்கிறீரா தானைத் தலைவரே!" என்று கேட்டார் செவ்வந்தி அடிகள் வேலவனைப் பார்த்து.

"திகைப்புத்தான்! ஆனாலும் எத்தனை மகிழ்ச்சி தரக்கூடிய திகைப்பு இது!" என்று களிப்போடு சொன்னான் வேலவன்.

# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு



"சேரலாத மன்னனைப் பார்க்க வேண்டும் என்று திடீரென்று ஒரு விருப்பம் உண்டாயிற்று. இந்த உலகில் ஒருவரைப் பார்க்க வேண்டும் என்று விருப்பம் உண்டாகி விட்டால் உடனே அதை நிறைவேற்றிவிட வேண்டும். உலகத்தின் தன்மை அப்படி! அதனால் உடனே புறப்பட்டு வந்தேன்" என்றார் அடிகள்.

வேலவனுக்கு அந்தச் சொற்கள் உள்ளத்தில் ஒருவகை அச்ச உணர்ச்சியை எழுப்பின.

"அடிகளே! மூன்று காலமும் கருத்திலே உணர்ந்த முனிவர் தாங்கள். என்னுடைய மனக் குழப்பத்தை "—

"குழப்பமா! உமக்கு ஏன் ஐயா இப்போது குழப்பம் ஏற்பட வேண்டும்? எத்தனை பெரிய வெற்றியைக் கடல் மீது நிலைநாட்டிவிட்டு வந்திருக்கிறீர் நீர்? உவகை அடைய வேண்டிய வேளையில் குழப்பமாவது குழப்பம்!"

''அடிகளே, தங்களைக் காண்பதும், கண்டு தங்கள் வாழ்த்தைப் பெறுவதும் தவிர நான் தங்களோடு பேசுவதற்குரிய தகுதியேயில்லாதவன். நாளாக நாளாக அந்த உணர்ச்சிதான் உள்ளத்தில் மேலிடுகிறது.



இந்நிலையில் புன்னாட்டுக்கு நான் புறப்படுகிற வேளையில் தங்களுடைய சந்திப்புக் கிடைத்ததே என்று—''

''புன்னாட்டுக்கா? புன்னாட்டுக்குச் செல்கிறீரா தானைத் தலைவரே இப்போது?''

''அடிகளே! புன்னாட்டுக்குச் சென்று நீலவல்லியைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும் என்பது மன்னரின் கட்டளை!''

''நீலவல்லியா? அவள் புன்னாட்டிலா இருக்கிறாள்?'' என்று கேட்டார் செவ்வந்தி அடிகள்.

''அடிகளே மேலும் குழப்புகிறீர்களே என்னை!''

''வேலவரே, நீலவல்லி வெள்ளைத் தீவில் இருந்தாளே, அவள் எப்போது புன்னாட்டுக்கு வந்தாள் என்று தெரிந்து கொள்வதற்காகவே கேட்டேன்.''

''அண்ணலே! தாங்கள் என்னைப் புன்னாட்டுக்குப் போகும்படி சொன்னால் போகிறேன். இல்லையென்றால்...''

''நான் சொல்வதாவது? வேடிக்கையாக இருக்கிறதே! சேர மன்னனுடைய கட்டளைக்கு அடி பணிய வேண்டிய தானைத் தலைவர் நீங்கள்! நான் யார் உமக்குக் கட்டளை இடுவதற்கு? என்னைக் கேட்டால் மன்னரின் ஆணையையே முழு முதற் கடமையாக நீர் கருத வேண்டும் என்றே சொல்லுவேன்!''

வேலவன் ஏதும் மறுமொழி பேசவில்லை. ஏதேதோ கேள்விகள் உள்ளத்தில் எழுந்தன. அவற்றைக் கேட்பதற்குத் தயக்கமாக இருந்தது. அப்போது அடிகள் சொல்லுவார்:

''தானைத் தலைவரே! சேரலாத மன்னரின் கட்டளைப்படியே நடக்க வேண்டும் நீர்! நேரே புன்னாடு சென்று நீலவல்லியைத் தேடுகிற முயற்சியிலே ஈடுபட வேண்டும். ஏனெனில் மலர் வேணிய மன்னனிடம் உமது திருமண உறவை நிலைநாட்டுவது என்பது இப்போதுள்ள சூழ்நிலையில் மிகவும் அவசியமான செயலாகும். அதற்கு நான் தடை சொல்லவில்லை. ஆனாலும் நன்னரின் அழிவு ஏற்படுகிறவரை தமிழ் நாட்டைச் சூழ்ந்துள்ள அந்தக் கருமேகம் கலைகிறவரை, தானைத் தலைவராகிய நீர் உமது தனிப்பட்ட இல்லற வாழ்வுக்கு இரண்டாம் இடந்தான் தர வேண்டும்! ஏற்கனவே உமக்குச் சொல்லியிருக்கிறேன். அரசப் பணியிலே ஈடுபடுகிற ஒருவனுக்கு முதன்மையான கடமை அந்த அரசப் பணிதான். அதை இப்போதும் நினைவு படுத்துகிறேன். நன்னர்களுடைய அழிவுக்குப் பிறகுதான் புன்னாட்டுக்கும் சேர நாட்டுக்கும் இடைய்ய உம்

# நவீன வாழ்க்கைக்கு ஏற்றது நெஸ்கா:பே



நெஸ்காஃபே மட்டும்தான் அலாதி
சுவையின்பத்தை அளிக்கவல்லது






தேர்ந்தெடுக்கப்பட்ட தென்னிந்திய பிளான்டேஷன் பீபெரி காபிக்கொட்டையைப் பதமாக வறுத்து அதன் இயல்பான மணம் கெடாமல் தயாரிக்கப்பட்டதுதான் நெஸ்கா:பே — உடனே கரையக்கூடிய நூற்றுக்கு நூறு அசல் காபி! ஒரே சமயத்தில் தனித்தனியாக 'ஸ்ட்ராங்'காகவோ 'லைட்'டாகவோ காபியைத் தயாரிக்கமுடிவதால் நெஸ்கா:பே மிகவும் சிக்கனமானதும்கூட!




ஒரு நெஸ்லே
தயாரிப்பு

5 விநாடிகளில் தயார்! ஒரு சிறு டீஸ்பூன் நெஸ்காஃபேயை கோப்பையில் போட்டு வெந்நீரை ஊற்றி ருசிக்கேற்றபடி சர்க்கரையும் பாலும் சேர்க்க வேண்டியது தான். சரி தயார்!

**NESCAFÉ***




நெஸ்கா:பே — தனிச்சிறப்புள்ள தரமான காபி

*நெஸ்கா:பே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட் காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

JWT-NCE-5144 A

முடைய திருமண உறவு ஏற்படப் போகிறது. என்ற உறுதி இருந்தால் தான் புன்னாட்டு அரசர்களுக்கு இந்தப் போரிலே ஒரு வேகமும் ஆர்வமும் இருக்கும். அதை மறந்துவிடக் கூடாது நீர்!'' இவ்வாறு சொல்லிவிட்டு நகர்ந்தார் செவ்வந்தி அடிகள்.

''அண்ணலே! இடைமறிப்பதற்கு என்னை மன்னிக்க வேண்டும். தாங்கள் வந்து தோன்றியது எப்படித் திகைப்பாக இருந்ததோ அப்படியே—''

''நான் உம்மிடம் விடைபெற்றுச் செல்லுவதும் திகைப்பைத் தருகிற தாக்கும். கவலைப்படாதேயும். நான் அவசரமாக வந்தவன். அவசரமாகவே புறப்பட்டு விடவேண்டும். உமக்கு என் வாழ்த்துகள்.''

இப்படிச் சொல்லிவிட்டு ஏதோ முகிலுக்குள்ளே மறையும் மின்னலைப் போல மாயமாக மறைந்தார் அந்த விந்தைச் சித்தர்.

அ ர ச ரை ப் பார்க்க வேண்டும், பார்த்துவிட வேண்டும் என்று, எப்படியோ ஒரு வகையான அவசரத்தோடு சொன்னாரே, அடிகள், அந்தச் சொற்களை எண்ண எண்ண உள்ளம் சுட்டது வேலவனுக்கு. வயது முதிர்ந்த மன்னர் தாமே சென்று சோழனோடு போரிடப் போவதாகச் சொன்னாரே, அந்த நிலையில் சேரலாத மன்னரைப் பற்றி இப்படி ஒரு சொல்லைச் சொன்னாரே, மன்னருக்கு ஏதாவது இடையூறு நேர்ந்துவிடுமோ என்று வேலவனுக்கு உள்ளம் படபடத்தது. எந்தச் சந்தேகத்தைக் கேட்க வேண்டும் என்று நினைத்தாலும், முயன்றாலும், எப்படியோ வேறு எதையோ பேசிப் பிடிகொடாமல் ஓடி விடுகிறாரே இவர்!- ஞானச் சித்தர்களின் தன்மையே இப்படித்தான் போலும் என்று எண்ணிக் கொண்டே மேலே நடந்தான், புன்னாட்டுக்குச் செல்ல வேண்டும் என்ற தீர்மானத்திலே!

ஆனால் அந்த வேளையில் புன்னாட்டு நிலைமை எப்படி இருந்தது?

தமக்கையை எ ப் ப டி யு ம் அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரிட மிருந்து மீட்டுவிட வேண்டும் என்று அதே கவலையாக இருந்த மலர்வேணிய மன்னனிடம் வந்து, புன்னாட்டு மரக்கல வீரர்கள் எத்தகைய அதிர்ச்சி தரும் செய்தியைச் சொன்னார்கள்! வெள்ளைத் தீவுக் கோட்டைக்குள்ளே சேரத் தலைவர்கள் நுழைந்து செல்வதற்கு முன்பே நீலவல்லி அங்கிருந்து மறைந்துவிட்டாள் என்றும், வெள்ளைத் தீவுக் கோட்டைக் குள்ளே எங்கெங்கு தேடியும் நீலவல்லியைக் காணவில்லை என்றும், அந்த வீரர்கள் சொன்ன போது மலர்வேணியனுடைய உள்ளத்திலே பேரிடி விழுந்தது.

புன்னாட்டு நீலக்கற் சுரங்கத்தின் ஒப்பற்ற நீலக் கற்களையெல்லாம் விட விலை மதிப்பற்ற ஓர் அரிய இந்திர நீலமாக அல்லவா தமக்கை நீலவல்லியை மதித்தான் அந்த மன்னன்! சுரங்கத்தைக் காப்பாற்ற வேண்டியது புன்னாட்டு அரசன் என்ற முறையிலே தனது ஆட்சிக் கடமைதான். ஐயமே இல்லை. ஆனாலும் ஒரு மன்னனுக்கும் இதயம் இருக்கிறதே! அந்த இதயத்துக்குள் பாசம் சுழல்கிறதே! சகோதர பாசம் என்பது மலர்வேணியனுடைய உள்ளத்தில் கரை காணாக் கடலாக அல்லவா அலைவீசிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது! அந்த வெள்ளைத் தீவைச் சூழ்ந்துள்ள ஆழ்கடலைப் போல! அந்தப் பாச ஆழியிலே, அந்த நேசக் கடலிலே இப்போது வீரர்கள் கொணர்ந்த துயரச் செய்தி எத்தகைய புயலைக் கிளப்பியது.

செவ்வந்தி அடிகளை மனத்துக்குள் நினைத்துப் பார்த்தான். முக்காலமும் தெரிந்த அந்த முனிவர் அனுப்பினார் வேலவன் கோதையை. அந்த ஒரு காரணமே போதும், முன் பின் அறியாத அந்தத் தானை வீரனிடம் அத்தனை அன்பு செலுத்தினான் மலர்வேணிய மன்னன். வேலவனுடைய விருப்பத்தின்படியே வெள்ளைத் தீவிலிருந்து வெளியேறித் தப்புவதற்காக மரக்கல ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தான். ஆனால் அந்த முயற்சி தோற்றுப் போயிற்று. இப்போது சேர இளவரசன் செங்குட்டுவனும் சென்றான். சென்றும் என்ன ஆயிற்று? நீலவல்லியை மீட்க வேண்டும் என்ற தன்னுடைய குறிக்கோள் நிறைவேறாமல் போயிற்றே என்று வருந்தினான் மலர்வேணியன்.

எங்கே போயிருக்கக் கூடும் நீலவல்லி? இந்த விநாடிவரை ஒரு செய்தியும் இல்லையே. ஒருவேளை வான மண்டலக் கடம்பன் தான் அழியப் போவதை உணர்ந்து நீலவல்லிக்கு, ஏதாவது தீங்கு செய்துவிட்டானோ?

இராது, என்னதான் கொடிய அரக்கனாக இருந்தாலும் வளர்த்த பாசம் என்று ஒன்று இல்லாமலா போகும்?

இ வ் வா று மனமன்றத்திலிருந்து குமுறிக் கொண்டிருந்த மலர்வேணிய மன்னனிடம் விரைந்து வந்தான் புன்னாட்டு அரசவிடுதியின் தொடர்பாளன்.

''மன்னர் பெருமானே! துளு நாட்டு நன்ன வேந்தனிடமிருந்து தானைத் தலைவன் மிஞிலி வந்திருக்கிறான். முதன்மையான செய்தி என்று அறிவிப்பு!''

## விடைகள்



1. அக்பர்
2. ஹாலந்து
3. 5
4. பம்பாய்
5. ராவணன் மீசை
6. சாத்தியமே இல்லை
7. அன்று சாண்டி (கேரளா)
8. கிடையாது; அஸ்ஸாம், நாகாலாந்து இரு ராஜ்யங்களுக்கும் பொதுவானது ஹைகோர்ட்.

''மிஞிலியா! நம்மைக் காணவா?'' என்று கேட்கும்போதே மலர்வேணியனுக்குச் சீற்றம் உண்டாயிற்று. என்றாலும் சினத்தை அடக்கிக் கொண்டு துளு நாட்டுத் தானைத் தலைவனை அழைத்து வரும்படி கட்டளையிட்டான். பின்னர், திருவோலக்கம் சென்றான் மலர்வேணியன், குழம்பிய உள்ளத்தோடு!

எத்தனை பகைமை உணர்ச்சியும், சீற்ற வேகமும் இருந்த போதிலும் ஒரு பெரிய நாட்டின் தானைத் தலைவனுக்குத் தரவேண்டிய சிறப்புகளோடு மிஞிலியைத் திருவோலக்கத்திலே வரவேற்றான் மலர்வேணியன்.

''தங்கள் வரவு நலமே தருவதாக!'' என்று முகமன் நல்கினான் மன்னன்.

''நீலக்கல் மன்னா! உங்களுடைய எதிர்கால அரசியல் நடப்புக்களிலே சிக்கல் ஏதும் விளையக்கூடாது என்று பெரிதும் விரும்புகிறார் எங்கள் நன்னவேந்தர். இந்நிலையில் நம்முடைய— சிறப்பு மிக்க துளு நாட்டுக்கும் உங்கள் புகழ் மிக்க புன்னாட்டுக்கும் ஒரு திருமண உறவையே நிலைநாட்டி இரு நாடுகளுக்குள்ளும் ஒரு பெரிய இதயத் தொடர்பையே இணைக்க வேண்டும் என்பது எங்கள் மன்னரின் அன்பெண்ணம்! இதைக் கருதியே வேறு யாரையும் அனுப்பாமல் நானே நேரில் இங்கு வர நேர்ந்தது. அது என் மகிழ்ச்சியும் பணியுமாகும்.''

சொற்களை நீட்டியும், உயர்த்தியும் வஞ்சகக் குரலில் பேசினான் மிஞிலி.

''துளுநாட்டு இளவரசராகிய எங்கள் இளநன்னருக்கு உங்கள் அரண்மனையிலேயே பெண் கொள்ள மனம் ஒப்பியிருக்கிறார் எங்கள் நன்ன வேந்தர்!'' என்று மேலும் தொடர்ந்தான் மிஞிலி.

''எங்கள் அரண்மனையிலே பெண் கொள்ளவா? நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே!'' என்று திகைப்போடு கேட்டான் மலர்வேணியன்.

''மலர்வேணிய மன்னரே! புன்னாட்டு இளவரசி நீலவல்லி—''

''நீலவல்லியா? அவளை எங்கே என்று தானே தேடுகிறோம், குழம்புகிறோம்!''

இப்படி மலர்வேணிய மன்னன் சொன்னதும் மிஞிலியினுடைய முகத்திலே வஞ்சகம் படர்ந்தது. முறையற்ற ஒரு சிரிப்புச் சிரித்தான்! சிரித்துக்கொண்டே சொன்னான்:

''நீலக்கல் மன்னரே! உங்கள் புன்னாட்டு இளவரசியும், வெள்ளைத் தீவு மன்னன் கடம்பனுடைய வளர்ப்பு மகளுமான நீலவல்லி, இப்போது கடம்பனுடைய மறைவுக்குப் பின்னர் எங்கள் துளு நாட்டு அரண்மனையிலே வாழ்கிறாள் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று எண்ணினேன். தெரியாது என்றால் இப்போது தெரிந்து கொள்ளுங்கள் என்பது எங்கள் அரசரின் விருப்பம்! நீலவல்லியை நமது துளுநாட்டு இளவரசருக்குத் திருமணம் செய்து வைப்பதில் நமது மன்னருக்கு முழு மகிழ்ச்சி. மறைந்து சென்ற கடம்ப மன்னரின் நெடு நாளையக் கனவும் அதுதான்! அந்த உறவை நமக்குள் நிலைபெறச் செய்து விட்டால் தமிழக வேந்தர்கள் யாரும் இனிமேல் நீலக்கல் சுரங்கத்தின் அருகிலேயே அடியெடுத்து வைக்கக் கூசுவார்கள்! புன்னாடு என்று நினைத்தாலே அவர்கள் அஞ்சுவார்கள்! தங்களுடைய ஒப்புதலைத் தெரிவித்தீர்களானால் எல்லாம் நல்ல முறையிலே நடைபெறும். இல்லையென்றால் தங்களுடைய விருப்பத்தையும் மீறி இந்தத் திருமண உறவை நிறைவேற்ற வேண்டியிருக்குமே என்றுதான் எங்கள் மன்னர் சற்றுச் சிந்தனை செய்கிறார்.''

மிஞிலியின் சொற்களிலே ஒலித்த செருக்கும் சூதும் மலர்வேணியனுக்கு ஆத்திரம் ஊட்டின.

''தானைத் தலைவரே! பெண் கொள்வது, பெண் கொடுப்பது என்பதெல்லாம் ஏதோ நீலக் கல் வாணிபம் என்று நினைத்துவிட்டாரா உங்கள் மன்னர்? ஒத்த நலனும், ஒத்த பண்புகளும், ஒத்த எழிலும் உள்ள ஒருவனும் ஒருத்தியும் தங்களுக்குள் மனம் ஒத்த முறையிலே திருமணம் புரிந்து கொள்வது என்பதுதான், தமிழ் மன்னர்களுடைய மரபு. அதை விடுத்து—''

மிஞிலி இடைமறித்தான்.

''வேந்தே! உங்களுடன் உறவு பேசுவதற்காக வரவில்லை நான். உறவு முடிப்பதற்காகவே வந்தேன்! இல்லையென்றால் நான் வந்திருக்க வேண்டியதே இல்லை. நீங்கள் ஒப்பினாலும் ஒப்பாவிட்டாலும் நீலவல்லி துளு நாட்டுக்கு உரியவள். வளர்த்த தந்தை தனது முடிவுக் காலம்

# சக்திக்கும், வலிமைக்கும்!




கேட்பரீஸ்

# போர்ன்விடா

ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச் சுவையாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்

# உடனடி நிவாரணம்!



## அஜீரணத்திலிருந்து நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் விடுதலை பெற





இனிமையான சுவையுள்ள பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னிஷியா சில விநாடிகளில் "உடனடி" நிவாரணமளிக்கிறது. ஏனெனில் அவை பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னிஷியாவினுடைய பூரண சாரத்தையும் கொண்டது. ஒவ்வொரு மாத்திரையும் தன்னுடைய எடைக்கு 189 மடங்கு எடையுள்ள வயிற்றுப் புளிப்பை அகற்றுகிறது.

இப்பொழுது மெல்லிய தகடுகளில் 10 மாத்திரைகளாகவும் 4 மாத்திரைகளாகவும் கிடைக்கிறது. குடும்பத் தேவைகளுக்கு சிக்கனமான முறையில் 75 மற்றும் 150 மாத்திரைகள் கொண்ட பாட்டில்களில் தயாராகக் கிடைக்கும்.

இன்றே வாங்குங்கள், எப்பொழுதும் பிலிப்ஸ் மாத்திரைகள் கைவசம் வைத்திருங்கள். வயிற்றில் கோளாறு ஏற்படும் போது சில மாத்திரைகளை சுவைத்து "உடனடி" நிவாரணம் பெறுங்கள்.

# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

மான்யுபாக்சரர் : ரிஜிஸ்டர்ட் யூஸர்
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்)
பிரைவேட் லிமிடெட்,
62, பண்டல் ரோட், கல்கத்தா-19



நெருங்குவது கண்டு, எங்களிடம் அவனை அடைக்கலமாக அனுப்பியிருக்கிறார். வளர்த்த தந்தைக்கு இல்லாத உரிமை வேறு யாருக்கு உண்டு? சொல்லப்போனால், உங்கள் தமக்கை கருப்பா சிவப்பா என்றுகூடத் தெரியாத நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களிடம் இந்தத் திருமண உறவு பற்றிக் கேட்க வேண்டிய முறையே இல்லை. ஆனாலும் எங்கள் அரசர் மிகவும் பெருந்தன்மையோடு புன்னாட்டின் எதிர்கால நலனைப் பாராட்டித் தங்களிடம் என்னை விடுத்தார்! நீங்கள் சரி என்றால் உங்கள் நாட்டுக்கும் எங்கள் துளுநாட்டுக்கும் அரசியல் உறவு இணையும். இல்லையென்றால் நீலவல்லியை இழப்பதோடு நீலக் கல் சுரங்கத்தையுமே நீங்கள் இழக்க வேண்டிய நாள் வந்தது என்பதை உங்களிடம் அறிவிக்க வேண்டிய கடமை எனக்கு உண்டு.''

இவ்வாறு கூறினான் மிஞிலி.

மலர்வேணியனுக்குச் சீற்றம் பொங்கிற்று.

''துளு நாட்டுத் தானைத் தலைவரே! மன்னர்கள் மன்னர்களோடு பேசவேண்டிய அரச முறை என்பதாக ஒன்று இருக்கிறது. அந்த அரச மரபை மீறிய பேச்சாக இருக்கிறது உங்கள் பேச்சு என்பது குறித்து நான் வருந்துகிறேன். இதன் விளைவு என்ன ஆனபோதிலும் சரி, அச்சுறுத்தும் சொற்களுக்கு அடிபணிகிற செங்கோல் இல்லை இது! பண்போடு நடந்து கொள்ளுகிற தன்மை துளுநாட்டின் வரலாற்றிலேயே இல்லை என்பதை நான் அறிவேன். ஆனாலும் தூதாக வந்த உம்மிடம் அறமற்ற சொற்களைச் செலவு செய்ய விருப்பமில்லை எனக்கு!''

மலர்வேணியன் இப்படிச் சொல்லி முடிப்பதற்கு முன்பு மிஞிலி எழுந்தான்.

''புன்னாட்டு வேந்தே! அரசியல் வாழ்விலே முதிராத இளங் கன்று நீங்கள். நான் வருகிறேன்!''

''சென்று வாருங்கள் தானைத் தலைவரே! மண மன்றலில் சந்திப்பதற்கு மாறாகப் போர்க் களத்தில் சந்திக்கவும் நான் ஆயத்தமாக இருக்கிறேன். ஏற்கனவே எதிர்பார்த்த நிகழ்ச்சிதான் இந்தப் போர். ஆனால் இத்தனை வேகமான விரைவை நான் எதிர்பார்க்கவில்லை. ஒன்று மட்டும் சொல்லுகிறேன். கேளுங்கள். நீலக்கல் சுரங்கத்தையே இழந்தாலும் எங்கள் நீலவல்லியை இழக்க நான் ஒப்ப மாட்டேன் என்று உங்கள் மன்னனிடம் நீங்கள் தெரிவிக்கலாம்!''

மிஞிலி எழுந்து சென்றான். மிகக் குறிய நேரத்தில் நேர்ந்த வேகத்தின் அந்த வெம்மையைத் தாங்காமல், மலர்வேணியனும் அங்கிருந்து எழுந்து வேனில் மாடத்து உம்பரிலே நடந்தான்.

ஃ ஃ ஃ



எப்படிப்பட்ட வேளையில் வேலவன் கோதை புன்னாட்டு மண்ணிலே அடியெடுத்து வைக்கிறான்! ஆகா! இது என்ன விபரீதம்! நகரத்தில் எங்கே பார்த்தாலும் ஒரு பரபரப்பு. எங்கெல்லாம் மனிதர்கள் கூடினாலும் ஒருவரையொருவர் சந்தேகக் கண்ணோடு பார்க்கிறார்கள். என்ன நேர்ந்தது இந்த நீலக் கல் நாட்டுக்கு!

வேலவன் கோதை ஒரு விநாடியில் நிலைமையை ஊகித்து விட்டான். எந்த நேரமும் போர் மூளலாம் என்று எதிர்பார்த்து அந்தக் குமைவுப் போர்வையினாலே தன்னைப் போர்த்தி மூடிப் புழுங்குகிறது புன்னாடு! நகரத்தின் மேனி முழுவதும் வியர்வை துளி துளியாக நிற்பது போல இருந்தது அந்தக் காட்சி. அச்சத்தினால் அல்ல, போருக்கு ஆயத்தம் செய்து கொள்ளுவதினால் ஏற்படுகிற ஒரு மன வேகம் அது என்பது வேலவன் கோதைக்குப் புரிந்தது.

தெருக்களில் எல்லாம், வீதிகளில் எல்லாம், அங்காடிகளில் எல்லாம், கட்டுக் காவல் மும்முரமாக இருந்தது. சேர நாட்டுத் தலைவர்களிலே ஒருவன், புன்னாட்டின் நட்புக்குரிய நேயர்களிலே ஒருவன், என்பதற்குரிய தனது விற்கொடி தாங்கிய அரச இலச்சினையை அடிக்கொரு தடவை காவற் சாவடிகளிலே காண்பித்துக் காண்பித்து முன்னேற வேண்டிய ஒரு சூழ்நிலை அது. அதையெல்லாம் கடந்து வேலவன் புன்னாட்டு அரச விடுதிக்கு வந்த போது இரவாகி விட்டது. இலச்சினையைக் காட்டியதும் அந்த விடுதியிலே அன்புக்கும் உபசரிப்புக்கும் குறைவில்லை. மறுநாள் விடிந்ததும் மன்னனைக் காணலாம் என்று எண்ணித் தனக்கென்று தரப்பட்ட மாபெரும் மாடத்திலே வந்து தங்கினான் வேலவன். பயணத்தின் களைப்பு ஒருபுறம். புதுமைச் சூழ்நிலையின் போர்க் குறிகள் தந்த குமைவு ஒரு புறம். எல்லாமாகச் சேர்ந்து, உணவு உண்டதும், நன்றாக உறங்கி விட்டான் வேலவன் கோதை. ஆனாலும் எத்தகைய உறக்கம்!-

திடீரென்று பதறிக் கொண்டே விழித்தான் வேலவன். என்ன ஓசை அது?

''கணையவன் காவல்! யார் அங்கே?'' என்று ஒலித்தது உரத்த குரல்.

''சூலப் படையோன் பகற் காவல் வந்திருக்கிறேன்!'' என்று அதிர்ந்தது மறு குரல்.

'நன்னன் புகழ் வாழ்க! நன்னர் கோன் காவல் வெல்க!'' என்று இணைந்து ஒலித்தன எல்லாக் குரல் களும் சேர்ந்து.

இந்தப் பெரிய ஓசை கேட்டுத்தான் பதறி விழித்தான் வேலவன்! சிறைக் கூடத்துக்கு வெளியே இரவுக் காவ லாளர்கள் மாறிப் பகற் காவலாளர்கள் பணிமாற்றம் செய்கிறார்கள்!

வேலவனுக்கு உடம்பு சிலிர்த்தது. புன்னாட்டு விடுதியிலே உறங்கியவன் இப்போது துளு நாட்டுச் சிறைக்கூடத் திலே கண் விழித்திருக்கிறான்! (தொடரும்)

# தண்ணீரில் ஆராய்ச்சி

அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் தண்ணீ ரைக் கொண்டு சில அற்புதமான சாதனை களைச் செய்து வருகிறார்கள். தண்ணீரில் திரவத் தன்மையைக் குறைத்து, சுருங்கி விரியும் தன்மையை ஏற்படுத்தி விடுவதன் மூலம், பள்ளத்திலிருந்து மேட்டுக்கு ஏறும் குணமாறுபாட்டைச் செய்ய இயலும். சிறி தளவே ''பாலிஎதிலின்'' ஆக்ஸைட் துகளைத் தண்ணீரில் கலந்தால், தண்ணீருக்கு விநோத மான குணங்கள் உண்டாகின்றன. உதாரண மாக ஒரு டம்ளரிலிருந்து வேறொன்றில் சிறிது நீரை ஊற்றிவிட்டு, முதலாவது டம்ளரை நிமிர்த்தியபின்னரும் நீர் வழிவது நிற்பதில்லை. தன்னுடைய கன பரிமாணத் தினாலும் அசைவுணர்வாலும், தன்னைத் தானே இயக்கிக் கொள்ளும் ''ஸைபன்'' ஆக ஆகிவிடுகிறது. முன்பு கலந்த துகளில் காணப்படும் பாலிமர் அணுக்கள் நீரின் அணுக்களை இணைத்து, நீரைத் திரவத் தன்மையினின்றும் ஜவ்வு போன்ற நிலைக்கு மாற்றி விடுவதே இதற்குக் காரணம். கலி போர்னியா நுண் இயல் கழகத்தைச் சேர்ந்த டேவிட் ஜேம்ஸ் என்னும் விஞ்ஞானி இச் சோதனையில் வெற்றி கண்டுள்ளார்.

பாலிமர் பசையால் ஆன வடிகட்டி ஒன்றின் உதவியால் நீரின் மூலம் பரவும் விஷக் கிருமிகளைத் தடுத்து நிறுத்த முடியும். தண்ணீரின் ஓட்டம், அல்லது நீர்நிலையின் அமுக்கத்துக்குத் தகுந்த அளவில் பசை வடிகட்டி ஒன்றைத் தண்ணீருக்குள் இறக் கினால், எந்தவிதமான கிருமிகளையும் அது தன்னிடம் இழுத்துத் தண்ணீரைச் சுத்த மாக்கி விடுகிறது. புதிதாக முன்னேறும் நாடுகளில் சுத்தமான குடிதண்ணீர் கிடைக்க வழி செய்யும் இம்முறையை உருவாக்கிய வர்கள் மான்ஸாண்டோ ரஸாயனச் சாலை யைச் சேர்ந்த விஞ்ஞானிகள்.

## தண்ணீரால் ஆன ரம்பம்

மிச்சிகன் சர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் நார்மன் பிரான்ஸ் என்பவர் ஓர் அங்குல கனமுள்ள காங்க்ரீட் பலகை களைப் பதினைந்தே நிமிஷங்களில் இருபதுபி ரளம் அறுக்கவல்ல தண்ணீரால் ஆன ரம்பம் ஒன்றைச் சமைத்துள்ளார். இதே ரம்பத்தைத் துணி ஆலைகளில் சோதனை செய்துபார்த்ததில் 55 அடுக்குகள் வைக்கப் பட்ட பருத்தி, நைலான் துணிகளை நிமிஷத் துக்கு 150 அங்குலம் வெட்டித் தள்ளியது. .005 அங்குல விட்டமுள்ள பீச்சாங்குழல் வழியாகச் சதுர அங்குலத்துக்கு 50,000 பவுண்டு அமுக்கத்தில் மணிக்கு நாற்பது காலன் தண்ணீரைப் பாய்ச்சி, இந்த ரம்பத்தை இயக்க வேண்டும். இதே கருவியை இருபது அங்குல கனமுள்ள கான்க்ரீட் பலகைகளை அறுக்குமளவுக்குத் திருத்திக் கொண்டிருக்கிறார்கள்.

அடேயப்பா, தண்ணீருக்கு இத்தனை சக்தியா என்று மலைக்காதீர்கள், ஐயா, எல் லாம் விஞ்ஞானத்தின் விந்தை!

ஆதாரம்: ''சாமர்ஸ்''

தகவல்: மீனாட்சி கிருஷ்ணா

## காலால் இயங்கும் மைக்ராஸ்கோப்

இதுவரை கையால் இயக்கக்கூடிய 'மைக் ராஸ்கோப்' தானே புழக்கத்திலிருந்து வந்தது; இப்பொழுது காலால் இயக்கக்கூடிய மைக் ராஸ்கோப் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது ஜெர்மனியில்! கண், காது முதலிய ஆப ரேஷன் செய்யும் பொழுது டாக்டர்க ளுக்கு மிகத் தேவை யான கருவி மைக் ராஸ்கோப். ஆப ரேஷன் செய்து கொண்டிருக்கும் பொழுது கண் காது களில் உள்ள நுணுக் கமான பகுதிகளை ஆராய அடிக்கடி



'மைக்ராஸ்கோப்'பை உபயோகிக்க வேண் டும். அப்பொழுது அதை இயக்கக் கையை உபயோகிக்க வேண்டியிருப்பதால், டாக்டர் களுக்கு ஆபரேஷன் செய்வதில் சில சங்கடங் களும் உள்ளன. இதை நிவர்த்தி செய்யு வகையில் காலாலேயே இயக்கக்கூடிய மைக் ராஸ்கோப் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது ஜெர்மனியில்!

ஆதாரம்: ''காங்கரர்''

தகவல்: ச. ஸ்ரீதரன்.




திருமுருக கிருபானந்த வாரியார்

# 53. மூல புருஷர்

"வாசி" என்பது பிராண வாயு. 'வாசி' என்பதில் உள்ள 'வா' என்பது நெடில். 'சி' என்பது குறில். வாசி பன்னிரண்டு அங்குலம் வெளியே செல்லுகின்றது. எட்டு அங்குலம் உள்ளே மீள்கின்றது. வா — எட்டு அங்குலம்; சி — நான்கு அங்குலம். எனவே, விரயம் பன்னிரண்டு அங்குலம்; ஆதாயம் எட்டு அங்குலம். நான்கு அங்குலம் அவமே கழிகின்றது. ஒவ்வொரு சுவாசத்திலும் நான்கு அங்குலம் போய் விடுகிறது. அதை அவ்வாறு கழிய விடாமல் காப்பவரே சிவயோகிகள். "வாசி" என்பது திரும்பும் போது, "சிவா" என்று பன்னிரு அங்குலமாகத் திரும்ப வேண்டும். அவ்வாறு "சிவா" என்று வாசியைத் திருப்பியவர்கள் உயிரைக் காக்க வல்லவராகிய சிவயோகிகள்.

கூட மெடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடில் கொளிற்கோல அஞ்செழுத்தாமே.

திருமூலநாயனார் பரம சிவயோகி. தமிழை ஓதி, தமிழால் இறைவனை ஓதுவதற்கே வந்தவர் அவர்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே!"

சைவ சமயத்துக்கே ஒரு கருவூலமானவர் திருமூல நாயனார். இவருடைய பெருமை அளவிடற்கரியது. நாயன்மார்களிலேயே காலத்தினும் முந்திய இவர், சீலத்தினாலும் உயர்ந்தவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருத்தொண்டத் தொகையுள் இவரைக் குறிப்பிடும் போது, "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று சிறப்பாகப் பாடுகிறார்.

பிறைமதியணிந்த நிமலனார் எழுந்தருளியுள்ள திருக்கயிலாய மலையின் திருக்கோயிலுக்கு முதற்பெருநாயகர் திருநந்தி தேவர். இவரது திருவருள் பெற்ற மாணாக்கர்களாகிய சிவயோகிகளுள் ஒருவர் சிவாகமங்களில் வல்லவராக விளங்கினார். அச்சிவயோகியாரது பெயரைச் சேக்கிழார் சொல்லவில்லை.

அச்சிவயோகியார் பொதியமலையில் எழுந்தருளியுள்ள அகத்திய முனிவருடன் சில நாட்கள் தங்கி அளவளாவ மகிழ விரும்பினார். திருக்கைலாய மலையினின்றும் புறப்பட்டுத் தென்திசை நோக்கி வந்தார். அவ்வாறு வரும் பொழுது, நிலைபெற்ற பெருமையுடைய திருக்கேதாரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானது பாதாரவிந்தங்களைப் பணிந்தார். நேபாளத்திலுள்ள பசுபதி நாதனை வணங்கினார். துங்கநீர்க் கங்கையில் ஆடி, காசிவிசுவநாதரைப் போற்றினார். திருப்பரு

பதம் எய்தி மல்லிகார்ச்சுனரை மன மகிழ்ந்து தொழுதார். திருக்காளத்தி, திருவாலங்காடு, திருக்காஞ்சி மாநகர், திருவதிகை, திருத்தில்லை முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு சிவ சிந்தையுடன் சென்று, காவிரி நதியின் அருகில் வந்து அன்புடன் மூழ்கினார். திருவாவடுதுறையை அடைந்து, திருக்கோயிலை வலம் வந்து சிவபெருமானை வந்தனை செய்தார்.

அடுத்துள்ள சாத்தனூர் கிராமத்துக்கு வந்தார். அங்கே பசு மேய்க்கும் குலத்திலே வந்த மூலன் என்பவன் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்தான். மூலமாய் இருக்கின்றவன் சிவ பெருமான். இவனோ மூலன். பசு மேய்க்கும் குலத்தில் தோன்றியவன். கண்ணபிரானும் அந்த மரபிலே வந்தவர். அந்த மக்களுக்குச் சூதுவாது தெரியாது. கறந்த பாலைக் கறந்தபடி கொடுப்பார்கள்!

பசு மேய்த்துக் கொண்டிருந்த மூலன் வினை வசத்தால் மாண்டான். அவன் மீதுள்ள அன்பு காரணமாக அவன் மேய்த்து வந்த பசுக்கள் அவனைச் சுற்றி மோந்தும், கதறியும், பதறியும், இங்கும் அங்குமாகத் திரிந்தும் வருந்தலாயின. பசுக்களின் துன்பத்தைக் கண்ட சிவயோகியார் சிவ பெருமான் திருவருளால், இப்பசுக்களின் துன்பத்தை நீக்க வேண்டும் என்று எண்ணினார். ''மாண்ட இவன் எழுந்தாலன்றி இப்பசுக் கூட்டத்தின் இடர் நீங்காது'' என்றும் அவர் எண்ணினார். தமது திருமேனியை வேறு ஒரு புறம் பாதுகாப்பான இடத்தில் மறைத்து விட்டு, தமது உயிரை மூலன் என்ற அந்த இடையன் உடம்பிலே புகுத்தினார். பசுக்களின் துன்பத்தை நீக்குவதுதான் அச்சிவயோகியாரின் நோக்கமாயிருந்தது. ஆனதாலே, அவர் திருமூலராய் எழுந்தார். பசுக்கள் அளவற்ற மகிழ்ச்சியடைந்தன. நாத் தழும்பேற மூலனை நக்கின; மோந்தன; கனைத்தன; வாலெடுத்துத் துள்ளிக் குதித்தன.

ஆவினங்களின் ஆனந்தத்தைக் கண்ட திருமூலர் அகமகிழ்ந்தார். பிறருடைய இன்பத்தைக் கண்டு இன்புறுவது தானே ஆன்றோர் மரபு? பசுக்கள் மேயச் சென்றன. திருமூலர் அப்பசுக்களின் பின் சென்றார். அவை புல் மேய்ந்து, காவிரி நீரைக் குடித்துக் குளிர்ந்த நீரில் இளைப்பாறின. கதிரவன் மேற்கடலில் மூழ்கினான். பசுக்கள் கன்றை நினைந்து மெல்ல நடந்து சாத்தனூரைச் சார்ந்தன. திருமூலர் அவைகளுக்குப் பின் சென்று பசுக்கள் தத்தம் வீடுகளுக்குச் செல்ல வீதியில் நின்றார்.

காலம் கடந்தும் கணவர் வராமையால் அச்சங் கொண்டாள் மூலனின் மனைவி. கணவனாரை நாடி வந்த அவள் வீதியில் நிற்கும் திருமூலரைக் கண்டு அவரை நெருங்கினாள். அவர் விலகி நின்றார். குழந்தைகளும், வேறு



சுற்றமும் இல்லாத அப்பெண்மணி, அஞ்சியும், மயங்கியும், ''இது என்ன விளையாட்டு? ஏன் இப்படி ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''அம்மா! நான் உன் கணவன் அல்லன். எனக்கும் உனக்கும் தொடர்பு இல்லை. சென்று சிவனை நினைந்து உய்வு பெறுவாய்!'' என்று கூறிவிட்டு ஒரு பொது மடம் புகுந்தார் திருமூலர்.

அன்றிரவு முழுவதும் அவள் தூங்காது துன்பக் கடலில் மூழ்கினாள்.

இந்தச் செய்தியை மறு நாள் அவ்வூரில் உள்ள ஆன்றோர்களிடம் கூறினாள். அவர்கள் திருமூலரைக் கூர்ந்து நோக்கினார்கள். ''அம்மா! இவர் பைத்தியமன்று. சித்தத்தைச் சிவனிடம் வைத்துச் சிவயோக நிலையில் இவர் நிற்கின்றார். இவர் தன்மையை நம்மால் அளவிட முடியாது. பற்றற்ற பரம ஞானியாகி முற்றும் உணர்ந்த முழு முனிவர் இவர். இவரை நீ அடைய முடியாது'' என்று கூறி அவளைத் தேற்றி அழைத்துச் சென்றனர்.

பசுக்கள் வந்த வழியே சென்றார் திருமூலர். அவர் முன்பு மறைத்து வைத்த இடத்தில் அவரது உடம்பு காணப்படவில்லை. 'சடை முடிப்பரமர் தாம் உரைத்த ஆகமங்களின் பொருளைத் தமிழினால் விளக்கும் பொருட்டு இவ்வாறு செய்தருளினார்' என்று தெளிந்தார். சிவபெருமானுடைய திருவருளைச் சிந்தித்து, திருவாவடுதுறையை அடைந்தார். அங்கே கண்ணுதற் கடவுளை மண்ணுற வீழ்ந்து வணங்கினார். ஆங்குள்ள கோயிலின் மேற்புறத்தில் உள்ள அரச மரத்தின் நிழலில் அமர்ந்தார். சிவயோகத்தில் நிலைத்து நின்று இதய கமலத்தில் விளங்கும் இறையுடன் ஒன்றி உணர்வு மயமாய் இருந்தார்.

ஊன உடம்பில் பிறவியாகிய நஞ்சு அஞ்சி அகல உலகத்தோர் உய்யும் பொருட்டு, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களையும் வகுத்தும், தொகுத்தும் திருமந்திர மாலை என்று ஆண்டுக்கு ஒரு பாடலாக, மூவாயிரம் மந்திரங்கள் பாடியருளினார். மூவாயிரம் ஆண்டுகள் இப்பூதலத்தில் இனிது இருந்து, பின்னர், கயிலை மலை சார்ந்து இறைவரைப் பிரியாத பெரு வாழ்வு பெற்றார்.

திருமூலநாயனார் பாடியருளிய திருமந்திரம் நவ ஆகமங்களின் சாரம்; ஒன்பது தந்திரங்களாக அமைந்துள்ளது. பன்னிரு திருமுறையில் பத்தாம் திருமுறையாக விளங்குவது. இது சைவசித்தாந்த சாத்திரங்கள் அனைத்துக்கும் முற்பட்டது.

'மந்' என்றால் நினைப்பவர் என்று பொருள். 'த்ர' என்றால் காப்பது என்று பொருள். ஆகவே, நினைப்பவரை எடுத்துக் காப்பது எதுவோ அது 'மந்த்ரம்' எனப்படும். 'திரு' என்பது தெய்வீகத்தைக் குறிக்கும். ஆக, இது தெய்வீக ஆற்றலுடன் விளங்கி நினைப்பவரைப் பவக்குழியிலிருந்து எடுத்துச் சிவகதி சேர்த்துக் காக்குந் தகுதியுடையதனால் 'திருமந்திரம்' எனப்பட்டது. சிவயோக நுணுக்கங்களை விளக்கமாகக் கூறுவது திருமந்திரம். இதற்கு நிகரான நூல்களே இல்லை என்பது உறுதி. இப்புனிதமான திருமந்திரத்தைக் காலையில் எழுந்து கருத்தறிந்து ஓதுவோர் பாசம் நீங்கிப் பதியைச் சாருவர்.

மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்
ஞால மறியவே நந்தி யருளது
காலை யெழுந்து கருத்தறிந்தோதிடில்
ஞாலத் தலைவனை நண்ணுவரன்றே.

# 54. கண்பெற்ற புண்ணியர்

**சோ**ழவள நாட்டிலே தலைசிறந்த நகரம் திருவாரூர். பெரு ஊர் பேரூர் என வந்தது போல், அரு ஊர் அரூர் என ஆயிற்று. திருமகள் பூசித்துப் பேறு பெற்ற அருமையுடைய அத்தலம் திரு ஆரூர் என்று பெயர் பெற்றுச் சிவயோகம் எனத் திகழ்வது.

முன் செய்த தவத்தினால் தண்டியடிகள் நாயனார் திருவாரூரில் அவதரித்தார். இவர் பிறவியிலேயே கண் இழந்தவர்.

அகக் கண்ணால் அரனாரைத் தரிசித்துத் துதிப்பார் தண்டியடிகள் நாயனார். சிவபெருமானுடைய திருத்தொண்டில் சிறந்த உறுதியும் ஊக்கமும் கொண்டவர் இவர். திருவாரூரில் எழுந்தருளியுள்ள புற்றிடங்கொண்ட புண்ணியரைப் போற்றி செய்து, தேவாசிரியன் மண்டபத்தில் வணங்கி, கோயிலை வலம் வந்து, ஐந்தெழுத்தை ஓதிக் கொண்டு சிறந்த திருத் தொண்டுகள் புரிந்து வந்தார்.

திருக் கோயிலுக்கு மேற்புறத்தில் உள்ள திருக்குளத்தின் பக்கமெங்கும் சமணர்களுடைய பாழிகளாகிக் குளம் பழுதுபட்டது. இதை அறிந்த தண்டி



**அவள் தந்தை அவளுக்கு ஹெர்குலிஸ் வாங்கினார்**

"பஸ்ஸுக்காக காத்துநிற்கவோ, கூட்டத்தில் இடிபட்டு பிரயாணம் செய்யவோ இனித்தேவையில்லை. குறித்தநேரத்தில், வகுப்புக்குச் செல்லவும், நண்பர்களுடன் கூடச் சேர்ந்துபடிக்கச் செல்லவும் முடிகிறது. அத்தனையும் ஹெர்குலிஸ் உதவியால். நல்லநிலையில் அது இருக்க நம் செய்யவேண்டிய பராமரிப்பும் மிகக் குறைவே."

**விலை, தரம், வலிமை, நேர்த்தி, உறுதி, ஆகிய எந்த வகையிலும் ஹெர்குலிஸ் ஐயமின்றி உங்கள் பணத்துக்கு மிக உயர்ந்த மதிப்பைக் கொடுக்கிறது.**



**சைக்கிள் வாங்குவது வாழ்நாள் முழுவதற்குமான ஒரு முதலீடு.
ஹெர்குலிஸ் உங்கள் பணத்துக்கு மிகச் சிறந்த மதிப்பைத் தருகிறது.**

மிக உயர்ந்த தரத்துடன் தயாரிக்கப்படும் ஹெர்குலிஸ், சகாயமாக விலையிடப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள 135 நாடுகளில் அமோகமாக விரும்பி வாங்கப்படுகிறது இது என்பதற்கு இந்தச் சிறப்புகள் தான் காரணம்.

தென் கிழக்கு ஆசியாவிலேயே மிகப் பெரியதும் மிகச் சிறந்த இயந்திர சாதனங்கள் நிறுவப்பட்டுள்ளதுமான, சென்னையிலுள்ள சைக்கிள் தொழிற்சாலையில், சர்வதேசத் தர நிர்ணயங்களுக்கு ஏற்றபடி தயாரிக்கப்படுகிறது இது.

ஹெர்குலிஸ், உலகிலேயே மிகப் பெரிய சைக்கிள் தயாரிப்பாளர்களாகிய ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட், யு. கே. அவர்களின் ஒத்துழைப்பைக்கொண்டு வெகு நுட்பமாக உருவாக்கப்படுகிறது.

# ஹெர்குலிஸ்®

**வெறும் சைக்கிள் மட்டுமன்று-வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறு துணை.**



® ஹெர்குலிஸ் சைக்கிள் அண்ட் மோட்டார் கம்பெனி லிமிடெட், யு. கே. அவர்களின் பதிவு பெற்ற டிரேட் மார்க்குகள். இந்தியாவில் தயாரிப்போர்: டி ஐ சைக்கிள்ஸ் ஆப் இந்தியா அம்பத்தூர் மதராஸ் 53. உரிமையாளர்கள்: ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்-1, பதிவு பெற்று உபயோகிப்போர்.

சிறு சேமிப்புகளில் முதலீடு செய்யுங்கள்.

TICH 3629

யடிகள் குளத்தைத் திருத்தி யமைத்துத் தொண்டு செய்ய வேண்டும் என்று கருதினர். குளத்தின் நடுவில் ஒரு தறியும், குளக்கரையின் மேட்டில் ஒரு தறியும் நட்டு, இரு தறிகளிலும் கயிறு கட்டினர். அக்கயிற்றைத் தடவிய வண்ணமாக, குளத்தில் இறங்கி மண்ணை ஒரு கூடையில் எடுத்துக் கரைமேட்டில் கொட்டுவார். அப்படி அப்பணியைச் செய்யும்போது இடையருது பஞ்சாக்கரத்தை ஓதியவண்ணமாக இருப்பார்.

இவ்வாறு இவர் புரியும் திருத்தொண்டைக் கண்டு சமணர்கள், ''ஐயா! மண்ணைக் கல்லினல் உயிர்கள் மாளும்; ஆதலினல் இந்த வேலையைச் செய்யாதீர்!'' என்று கூறித் தடுத்தார்கள். ''திருநீற்றையே சாந்தமாக எண்ணிப் பூசும் சிவபிரானுக்குரிய திருப்பணி இது!'' என்ருர் தண்டியடிகள்.

''நாங்கள் கூறிய அறிவுரையையும் நீ கேட்கின்ருயில்லை. உனக்குக் கண்தான் இல்லையே, காதும் இழந்தனையோ?'' என்று கேட்டனர் சமணர்.

''நான் சிவபெருமானுடைய திருவடிகளையன்றி வேறு ஒன்றையும் காணேன். சிவபெருமானுடைய திருவருளினல் உலகமெல்லாம் அறியும்படி என் கண் காணப் பெற்ருல் நீங்கள் யாது செய்வீர்கள்?'' என்று கேட்டார் தண்டியடிகள்.

''நீ உன் கடவுளுடைய கருணையினல் கண் பெற்ருயாகில் நாங்கள் இந்த ஊரில் இருக்க மாட்டோம்'' என்று கூறிய சமணர்கள், தண்டியடிகள் நாயஞர் கரத்தில் உள்ள மண் வெட்டியையும், கூடையையும் பறித்து, குறித் தறிகளையும் பிடுங்கி எறிந்தார்கள்.

திருப்பணிகளுக்கு இடர் புரிவோர் அன்றும் இருந்தார்கள்; இன்றும் இருக்கின்ருர்கள்; என்றும் இருப்பார்கள் போலும்!

நாயஞர் மனம் நொந்து, பூங்கோயிலின் திருமுன் நின்று, ''எம்பெருமானே! திருக்குளத்தைக் கல்லும் கைங்கரியமாகிய சிவ புண்ணியத்தையும், அதனைப் புரியும் அடியேனையும் சமணர் அவமானம் செய்தமையால் அடியேன் மனம் வருந்தினேன். இடரை நீக்கி அருள் புரிதல் வேண்டும்'' என்று துதித்து, வணங்கித் தமது திருமடத்தில் சென்று கண் கலங்கினர்.

தண்டியடிகள் நாயஞர் அன்றிரவு உறங்கினர். கண்ணுதற் கடவுள் தோன்றி, ''அன்பனே! நீ உன் மனத்தில் உள்ள கவலையை விடுக. உன் கண்கள் நாளைக்கு ஒளி பெறும். உன் பணியைத் தடுத்தவர்கள் கண்களை இழப்பார்கள். அஞ்சாதே!'' என்று அருளிச் செய்தார். அன்றிரவே சோழமன்னன் கனவிலும் தோன்றி, ''மன்னனே! தண்டி என்னும் நமது அன்பன் நமக்குக் குளம் கட்ட, சிலர் பொருது அப்பணிக்கு இடர் செய்தார்கள். நீ அவனிடத்திலே சென்று அவன் கருத்தை முடிப்பாய்!'' என்று பணித்து மறைந்தருளினர்.

சோழ மன்னன் கண் விழித்து எழுந்தான்; புளகாங்கிதமடைந்தான்; சிவபெருமானது திருவருளை நினைந்து தொழுதான். பொழுது புலர்ந்தவுடன் தண்டியடிகளிடம் வந்து பணிந்து, தான் கண்ட கனவு நிலையைக் கூறினன்.

தவநெறி நின்ற தண்டியடிகள் நிகழ்ந்தவற்றைப் பற்றி மன்னனிடம் தெரிவித்தார்.

''இனி நீர் இந்த வழக்கை நியாயப்படி முடிப்பீர்!'' என்று கூறினர்.

''தண்டியடிகள் முன்னே போனர். அரசன் அவருக்குப் பின்னே சென்று குளக் கரையை அடைந்தார். சமணர்கள் குழுமி நின்ருர்கள். மன்னவன் தண்டியடிகளை நோக்கி, ''நீர் கண் பெற்றுக் காட்டும்!'' என்ருன்.

''சிவபெருமானே பரம்பொருள்; அவருடைய அடிமையாக யான் இருப்பது உண்மையாயின், உலகவர் முன்னே என் கண்கள் விளங்குக!'' என்று கூறி ஐந்தெழுத்தை ஓதித் திருக்குளத்தில் மூழ்கினர் தண்டியடிகள்.

> ஏய்ந்த அடிமை சிவனுக்கியான்
> என்னில் இன்றென் கண் பெற்று
> வேந்தன் எதிரே திருவாரூர்
> விரவும் சமணர் கண்ணிழப்பார்
>
> ஆய்ந்த பொருளும் சிவபதமே
> ஆவதென்றே அஞ்செழுத்தை
> வாய்ந்த தொண்டர் எடுத்தோதி
> மணிநீர் வாவி மூழ்கினர்.

சிவபெருமானைத் தொழுது குளத்திலிருந்து அவர் கண் பெற்று எழுந்தார். புங்கவர் பூமழை பொழிந்தனர். சமணர்கள் கண்களை இழந்து கலங்கினர்கள். மன்னன் அவர்களை நோக்கி, ''நீங்கள் முன்ஒப்பியவாறு திருவாரூரை விடுத்து நீங்குமின்'' என்ருன்.

தண்டியடிகள் தான் மலர் மீது பணிந்து மன்னன் விடைபெற்று நீங்கினன். நாயஞர் சிவபெருமான் திருவருளையே சிந்தித்து, ஐந்தெழுத்தை இடையருது நினைந்தார். திருப்பணியின் குறையை நிறைவு செய்து சிவசிந்தையுடன் இருந்து முடிவில் முக்கட் பெருமான் அடிமலர் சேர்ந்தார்.

(தொடரும்

# நான்கு நன்மைகள்





உங்கள் சேமிப்புக் கணக்கிற்கு
பாங்க் ஆப் மதுரை அளிக்கும்
நான்கு நன்மைகள்

கணக்கு திறப்பதற்கு ரூ. 5/-ந்தே போதுமானது. தினசரி இருப்பின்பேரில் வருடத்திற்கு 4½% வட்டி

அவசரத்தேவைகளுக்கு வாரத்திற்கு ரூ. 5,000/- வரை உங்கள் சேமிப்பிலிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

செக்குகள் மூலம் பணவினியோக வசதிகள்



கருமுத்து தியாகராசன்
தலைவர்

T.K. ராமசுப்ரமணியம்
காரியதரிசி

**பாங்க் ஆப் மதுரை லிட்**
மதுரை

# ஹேடென்ஸா




## மூல நோய்க்கு

எங்கும் கிடைக்கும்

OZ-982A TAM

# ஆர்ட்ஸ் அகாடமி

**கரோல்பாக், புதுடில்லி**

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் 200-வது பிறந்த நாள் விழாவும், ஆர்ட்ஸ் அகாடமியின் நான்காவது ஆண்டு விழாவும்

நிகழ்ச்சிகள் :

4-5-1967 பஞ்சரத்ன கீர்த்தனைகள் வித்வான் கே. ஆர். ஜெயராமய்யர் & பார்ட்டி

5-5-1967 சங்கீத பூஷணம் பி.ஏ. வெங்கடாசலம் -வீணை

6-5-1967 வித்வான் கே. ஆர். ஜெயராமய்யர் & பார்ட்டி -பாட்டு

7-5-1967 சங்கீத வித்வான் டி. ஆர். சுப்ரமணியம் -பாட்டு

ரஸிகர்கள் திரளாக வந்து விழாவைச் சிறப்பிக்கக் கோருகிறோம்.

ஆர்ட்ஸ் அகாடமியின் "சங்கீத வித்வான்கள் க்ஷேமநல நிதி" உதவி இவ்வாண்டு ஸ்ரீ வாசுதேவன் அவர்களுக்கு அளிக்கப்படும்.

# காதல் பிறந்தது!




சினிமாப் படங்களில் வரும் காதல் காட்சிகளைக் கண்டு மனம் புழுங்குவான் ராம்குமார். நீர் நிலைகளிலும், அணைக்கட்டுக்களிலும், மைசூர் பிருந்தாவனத்து நந்த வனங்களிலும் சினிமாக் காதலர்கள் ஆடும் களியாட்டங்களைப் பார்க்கும்போது பரவச மடைந்து அந்தக் கதாநாயகன் இருக்கும் இடத்தில் தன்னை நிறுத்தி மானசீகமாகப் பார்த்து மெய்ம் மறந்து போவான். அதற்காகவே, ராமமூர்த்தி என்ற தன் பெயரை 'ராம்குமார்' என்று நாகரிகமாக மாற்றிக் கொண்டான். அதிர்ஷ்ட வசமாக உத்தியோகம் பார்க்க வேண்டிய அவசியம் அவனுக்கு இல்லை. கிராமத்தில் அவனுக்கு நிறைய நிலம் இருந்தது. நிலத்தைப் பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம்கூட அவனுக்கு இருக்கவில்லை. எல்லாம் அவன் மாமாவின் பொறுப்பில் இருந்தது. சிறு வயதிலேயே தாய் தந்தையர்களை இழந்துவிட்ட அவனுக்கு மாமாதான் எல்லாம். பட்டப் படிப்பு முடிந்த கையோடு பட உலகில் இறங்க முடிவு செய்து விட்டான் ராம்குமார். செல்லப் பிள்ளையாக வளர்ந்துவிட்ட அவனிடம் மாமா எதுவும் மறுத்துக் கூற முடியவில்லை. அவனுக்கு அதில் அநுபவம் ஏற்பட்டால் தானாகவே திருந்தி வழிக்கு வந்து விடுவான் என்று தீர்மானித்து அவன் போக்கில் விட்டு விட்டார்.

ராம்குமார் வாட்ட சாட்டமாக நன்றாக இருப்பான். அரும்பு மீசையும், குளுகுளுவென்று நாகரிகமாகக் குலுங்கும் சுருண்ட கூந்தல் அடர்ந்து வளர்ந்த கிராப்புமாக அவனைப் பார்ப்பவர்களெல்லாம் சினிமா நடிகனென்றே நினைப்பார்கள். சினிமா என்னும் பல்கலைக் கழக வகுப்பில் சேருவதற்கு முன்னால் நாடக மேடை அநுபவம் பெறுவது புகுமுக வகுப்பு மாதிரி என்று யாரோ ஓர் அனுபவசாலி அவனிடம் கூறி விட்டான். கம்பெனிகளும் மண்டலிகளுமாயிருந்த பல பெரிய சிறிய நாடகக் குழுக்களில் சேர்ந்து தன் நடிப்புக் கலையை வளர்த்துக் கொண்டான் ராம்குமார்.

ஒரே கலையில் தேர்ச்சி பெற்று, ஒரே துறையில் பயின்று வரும் இருவர் ஒன்று சேர்ந்தால் அது இணையற்ற ஒற்றுமையாயிருக்கும் என்பது அவனது அறியாத நம்பிக்கை. சற்று விளக்கமாகச் சொல்ல வேண்டுமானால், கலைஞர்களாயிருக்கும் ஆணும் பெண்ணும் வாழ்க்கையில் இணைந்தால் அது ஆதர்ச வாழ்க்கையாக விளங்கும் என்பதுதான்.

நாடகத்தில் ராம்குமாருடன் பல பெண்கள் நடித்தார்கள். ஆனால் ராம் குமாருக்கு அவர்களைக் காதலிக்க நேரமில்லை. காரணம் ஒரு தடவை நடக்கும் நாடகம் மறுமுறை நடக்கும் என்பது நிச்சயமில்லையே. அப்படியே நடந்தாலும், அந்த பெண்தான் கதாநாயகியாக நடிப்பாள் என்றும் சொல்ல முடியாதே. ஆகவே, அவன் நிலை குழப்பமாகத்தான் இருந்தது.

பல நாள் பட்ட சிரமம் வீண் போகவில்லை. ராம்குமாருக்குச் சினிமாவில் 'சான்ஸ்' கிட்டி விட்டது. ஆனால் அவன் விரும்பியபடி கதாநாயகன் பாகமல்ல. தகப்பனார் வேஷம்! முதலில் அதை மறுத்துவிட வேண்டுமென்றுதான் நினைத்தான். ஆனாலும் கிடைத்த 'சான்ஸை' விட்டுவிடக் கூடாதென்று அப்பாவாக நடிக்க ஒப்புக் கொண்டான். ஒருமுறை அப்பாவாக நடித்தவன் ஒரு நாளும் கதாநாயகனாக நடிக்க முடியாதென்னும் திரையுலக

ண்மை நிலை அவனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. அடுத்த படங்களிலும் அப்பாவாகவே நடித்தான். பிறகு நிறைய 'அப்பா சான்ஸ்'கள் அவனுக்குக் கிடைத்தன.

ஆனால் கதாநாயகனாக நடிக்க வேண்டும் என்னும் ஆசையை அவனால் மாற்றிக்கொள்ள முடியவில்லை. ஒரு முறை அழாக்குறையாகக் கண்களில் நீர் மல்க ஒரு திரைப்பட டைரக்டரிடம் கேட்டான்: ''ஏன் டைரக்டர் ஸார், என்னிடம் என்ன குறை? கதாநாயகன் பாகமே தரமாட்டேன் என்கிறீர்களே! கதாநாயகனாக நடிக்க எனக்குத் தகுதியில்லையா? ஒருவேளை ... நான் வயதானவனாகத் தோன்றுகிறேனா?''



அதற்கு அவர், ''மிஸ்டர் ராம்குமார், உங்கள் வருத்தம் மிகவும் நியாயமானதுதான். ஆனால் உங்கள் முக பாவங்கள் கொஞ்சம் வயதான பாத்திரத்துக்குத் தகுந்தவையாக இருக்கின்றன. 'மேக்கப்மேன்' அப்படித்தான் சொல்லுகிறார். நீங்களும் அப்பாவாக நடித்துப் பல படங்களில் புகழ் பெற்று விட்டீர்கள். அந்தப் பாத்திரத்தை ஏற்க யாராவது முன்வர வேண்டுமல்லவா? நீங்கள் மனம் தளரக்கூடாது...'' என்று கூறிச் சமாதானப்படுத்தினார்.

ஆனால் அவர் கூறிய சமாதான வார்த்தைகளை அவனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ''என்ன ஸார், என்னைவிட வயதான நடிகைகள் என்னை 'அப்பா' என்று கூப்பிடும்போது, என் மனம் எவ்வளவு வேதனைப்படுகிறது தெரியுமா? கதாநாயகனாக நடித்துக் காதல் காட்சிகளில் புகுந்து விளையாட வேண்டிய வயதில் கிழவனாகப் படத்தில் தோன்ற வேண்டியிருக்கிறதே...!'' என்று ராம்குமார் துக்கம் பொங்க விம்மினான்.

''மிஸ்டர் ராம்குமார், நீங்கள் வருந்துவதில் பயனில்லை. பட முதலாளிகளின் அபிப்பிராயத்தை ஒட்டித்தான் கதாநாயகன், கதாநாயகி செலக்ஷன் நடக்கிறது. அதை மாற்றி ஒரு புது முகத்துக்குக் கதாநாயகன் பாகத்தைக் கொடுக்க முடியாது.''

''நான் புது முகமா ஸார்? பத்துப் படங்களில் நடித்திருக்கிறேன், ஸார்! பத்துப் படங்களில் நடித்திருக்கிறேன்!''

''வாஸ்தவம், மிஸ்டர். பத்துப் படங்களிலும் கதாநாயகியின் தகப்பனாகத்தானே நடித்திருக்கிறீர்கள்? கதாநாயகனாக ஒரு படத்தில்கூட நடித்ததில்லையே?''

''சான்ஸ்' கிடைத்தால்தானே நடிக்கலாம்? ஜலத்தில் இறங்கித்தானே நீந்தக் கற்றுக்கொள்ள வேண்டும்?''

''என்னை மன்னித்துவிடுங்கள், மிஸ்டர் ராம்குமார். இதுமாதிரி !விஷயங்களில் வாதப் பிரதிவாதங்களினால் எந்த விதப் பிரயோஜனமும் இல்லை. என்னால்





முடித்தால் நிச்சயம் உங்களுக்கு உதவி செய்வேன். சினிமாவில் கதாநாயகன் 'சான்ஸ்' என்பது ரொம்பப் பெரிய விஷயம். யார் மனசு வைத்தாலும் சுலபமாக நடக்கக்கூடிய காரியம் அல்ல அது. அதற்காக ஒரு இளைஞர் பட்டாளமே 'க்யூ'வில் நிற்கிறது!''

இம்மாதிரி பல சினிமா டைரக்டர்களிடமும், பட முதலாளிகளிடமும் மோதிப் பார்த்தான். டைரக்டர்கள் முதலாளிகளுக்குப் பயந்தனர். முதலாளிகள் வசூலை நினைத்துப் பயந்தனர். ஆனால் ராம்குமாரின் மனம் பட்ட வேதனையைச் சொல்லி முடியாது. அழகழகான நட்சத்திர நடிகைகளுடன் ஆடிப் பாடி அகமகிழ்ந்து நடிப்பதை விட்டு, அருமைப் புதல்விகளாக மதித்து எத்தனை நாட்களுக்குத்தான் அப்பாவாக நடித்துக் கொண்டிருக்க முடியும்? இன்னும் கொஞ்சம் போனால் உண்மையாகவே அப்பா வேஷத்துக்குத்தான் வாயக்கென்று ஆகிவிடும். சீக்கிரத்தில் இதற்கு ஒரு விமோசனம் தேட வேண்டும். அவன் மனம் தீவிரமாகச் சிந்தித்தது.

சினிமாவில் கதாநாயகனாக நடிப்பதற்குச் சிறந்த வழி ஒரு சினிமா நட்சத்திரத்தை மணந்து கொள்ளுவதுதான். அவளாலே அவனுக்குக் கதாநாயகன் சான்ஸ் கிடைக்கலாமல்லவா? யாரை மணந்துகொள்வது? ரஞ்சிதம், மனோகரி, உஷாராணி, ஹேமா, மாலா, ஜ்வாலா இவர்களெல்லாம் ராம்குமாரோடு நடித்தவர்கள்தான். — அதாவது ராம்குமாரின் புத்திரிகளாக!

அன்பு, பாசம், வாஞ்சை, வாத்ஸல்யம் ஆகிய உணர்ச்சிகள் பொங்க ராம்குமார் மேற்படி நடிகைகளை அணைத்தபடி தந்தையாக நடித்திருக்கிறான். ஆனால் உண்மையில் அவனது உள் மனத்தில் காதல், பிரேமை, மோகம் ஆகிய உணர்ச்சிகள்தான் கொந்தளித்துப் பொங்கும். இதே மாதிரி அந்த நடிகைகளின் மனத்திலும் போராட்டம் நடந்து கொண்டிருக்கலாமல்லவா? பார்ப்பதற்கு ராம்குமார் லட்சணமாக இருந்தான். அதோடு யாருடனும் வெகு சரளமாகப் பேசிக் கவர்ந்து விடுவான். எல்லா நடிகைகளும் 'ஸெட்'டில் படப் பிடிப்பின்போது ராம்குமாரிடம் விசேஷப் பிரியத்தோடு பழகுவார்கள். அவன் 'ஸெட்டில்' இருக்கிறான் என்றால் ஒரே கலகலப்பா யிருக்கும்.

குறிப்பாக ரஞ்சிதமும், ஜ்வாலாவும் ராம்குமாரை ரொம்பவும் விரும்பினார்கள். அவனைக் கண்டதும் அவர்களுடைய விசாலமான நயனங்கள் விரிந்து ஆசையையும் ஆவலையும் கொட்டும். 'மேக்கப்'பினால் மேம்பட்டு நிற்கும் எடுப்பான அவர்களது இளமை எழில் மேலும் வாளிப்பாகத் தோன்றும். அந்த இரண்டு நடிகைகளும் ஒரு நாள்கூட அவனிடம் முகம் கடுத்தது கிடையாது. அதற்கு மாறாக அவனிடம் வலியச் சென்று தாங்களாகவே பேசி வம்பளப்பார்கள்.

ராம்குமார் இத்தனை காலமும் அவர்கள் சரளமாகப் பேசிப் பழகி வந்ததைப் பெரிது படுத்திப் பார்க்கவில்லைதான். நடிகன் ஒரு சினிமா நட்சத்திரத்தை மணந்து கொண்டால் 'சான்ஸ்' கிடைப்பது சுலபம் என்ற எண்ணப் பொறி மனத்தில் தெறித்ததோ இல்லையோ, தன்னுடன் நடிக்கும் நடிகைகளைப் பற்றி எண்ணிப் பார்க்கலானான் ராம்குமார். அவர்களுடைய பேச்சும், பழக்கமும் இப்பொழுது இதுவரையில் அவன் எண்ணிப் பார்க்காத அபூர்வப் பொருளை விளக்கின. ராம்குமார், தனக்குத் தானே சிரித்துக் கொண்டான். தன் விருப்பத்தை நேரில் தெரிவித்தால் என்னவென்று நினைத்தான். தைரியம் வரவில்லை. கடைசியில் கடிதம் எழுதுவது என்ற முடிவுக்கு வந்தான்.

ரஞ்சிதம், ஜ்வாலா இருவரும் நல்ல அழகிகள். இருவருமே போட்டி போட்டுக் கொண்டு சேர்ந்தாற்போல் பல படங்களில் நடித்தனர். இருவரில் யார் அவன் விருப்பத்துக்கு இணங்கினாலும் அவனுக்கு அதிர்ஷ்டம்தான். சினிமா நட்சத்திரத்தை மணந்து கொண்ட மறு நிமிஷமே பத்திரிகைகளில் ஓர் அறிக்கை வெளியிட வேண்டும்—''....என்னும் நடிகை தன் கணவர் ராம்குமாரைக் கதாநாயகனாகப் போட்டால் தான் நடிப்பாள்...'' என்று நிர்த்தாட்சிண்யமாக எல்லாப் பத்திரிகைகளிலும் வெளியிட்டுவிட வேண்டும். இந்த எண்ணம் அவன் மனத்தில் எழுந்தவுடனேயே தன்னை ஒரு நட்சத்திரக் கணவனாக நினைத்துக் கொண்டு மெய் சிலிர்த்துக் கொண்டான்.

தன் மனத்தில் பொங்கும் ஆசையையெல்லாம் கடிதத்தில் கொட்டித் தீர்த்தான் ராம்குமார். முதலில் ஜ்வாலாவுக்கு எழுதிப் படப் பிடிப்பின்போது அவன் தனியாக ஓய்வெடுத்துக் கொள்ளும் சமயம் பார்த்து அவளிடம் எப்படியோ கொடுத்து விட்டான்.

கடிதத்தைப் படித்துப் பார்த்த ஜ்வாலாவின் முகத்தில் நிஜமாகவே தீ ஜ்வாலை பொங்கி எழுந்தது. ராம்குமார் சிறிதும் எதிர்பாராத விதமாக அவள் கொதித்துச் சீறி விட்டாள்:

''மிஸ்டர் ராம்குமார், என்ன தைரியம் உங்களுக்கு? நானாவது உங்களைக் கல்யாணம் செய்து கொள்ளுவதாவது! நான் சினிமா உலகில் புகழோடு வாழ்வது உங்களுக்குப் பிடிக்கவில்லை. என்னை அழிக்கத் திட்டமிட்டு விட்டீர்கள். ஒரு சினிமா நட்சத்திரம் திருமணத்தைப் பற்றி நினைப்பதே பெருந்தவறு. கல்யாணம் அவளுடைய புகழேணியை வெட்டி வீழ்த்தும் அரிவாள். நான் ஒருபோதும் மணம் செய்துகொள்ள மாட்டேன். என்றும் குமரியாகவே வாழ்வேன். என்னைவிட எவ்வளவோ வயதில் மூத்த சினிமா நடிகைகள் பலர் திருமணத்தைப் பற்றிச் சிந்திக்காமலே இருக்கும் போது எனக்கு என்ன வந்து விட்டது திருமணம் செய்து கொள்ள? இத்தனை நாட்களாக நல்லபடியாகப் பழகி வந்தீர்கள் என்ற காரணத்தால் நான் உங்களை மன்னித்துவிடுகிறேன்... நீங்கள் போகலாம்...'' என்று கூறி அவன் கடிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்து அவன் கையில் கொடுத்தாள் ஜ்வாலா.

அவளை நிமிர்ந்து பார்க்கவே ராம் குமாருக்குத் தைரியம் இல்லை. நல்ல வேளையாக

கவர்ச்சியிலும்

மேன்மையை

நாடுங்கள் !



செஞ்சுரியின்

மிகச் சன்னமான

புடவை ரகங்கள்

தி செஞ்சுரி ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்

பம்பாய் - 1

உற்பத்தித்திறனே வாழ்க்கையின் குறிக்கோள்

NPS/CM/121

# B·I



# S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

**1967 மே 15** | **1967 ஜூன் 8**

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை -1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை -1

**மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

**நாகப்பட்டினத்திலிருந்து**

**1967 மே 16** | **1967 ஜூன் 9**

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக்கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

**ஏஜண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்**

இந்த நிகழ்ச்சியை யாரும் பார்க்கவில்லை. சினிமாக் காட்சி மாதிரி ஒரு நொடியில் ஓடி விட்டது.

ரஞ்சிதத்திடம் ராம்குமாருக்கு ஓரளவு நம்பிக்கை இருந்தது. காரணம், ரஞ்சிதம் ஜ்வாலாவைப் போல் படபடப்புக்காரியில்லை. அவள் பார்வையில் கனிவும், கனிவும், காதலும் இருந்தன. ''நீங்கள் என்னை ரொம்பவும் மரியாதையாக 'வாருங்கள், உட்காருங்கள்' என்று பேசுவது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. 'தந்தையாக நடிக்கும் உப நடிகன்தானே' என்று உங்களை நீங்களே தாழ்த்திக் கொண்டு பழகுவது நன்றாக இல்லை. உங்களை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது...'' என்று முன்பு ஒரு சமயம் ரஞ்சிதம் 'ஸெட்'டில் சொன்னது அவன் நினைவில் பதிந்து போயிருந்தது. ஆகவே, அவளுக்குக் கடிதம் எழுதுவது அவனுக்குச் சிரமமாகவே இல்லை.

ஆனால் அதைக் கொடுக்கும் போது முன் ஜாக்கிரதையாக, ''ரஞ்சிதம், ஒரு முக்கியமான விஷயம் இக்கடிதத்தில் எழுதியிருக்கிறேன். படித்துவிட்டு உன் அபிப்பிராயத்தைச் சொல்லு. இக்கடிதத்திலிருக்கும் விஷயம் உனக்குப் பிடிக்காததாயிருந்தால், 'அதற்காக என்னிடம் கோபித்துக் கொள்ளக் கூடாது' என்று மிகவும் பணிவன்போடு கேட்டுக் கொள்ளுகிறேன். இது உனக்குப் பிடித்துத்தான் இருக்க வேண்டும் என்று நான் கட்டாயப்படுத்தவில்லை...'' என்று மிகவும் குழைவாகக் கூறிக் கெஞ்சும் பார்வையொன்றை வீசினான்.

''என்ன ஸார், முன்னுரை மிகவும் பலமாயிருக்கிறதே! அப்படி என்னதான் கடிதத்தில் எழுதியிருக்கிறீர்கள்? நேரில்தான் சொல்லுங்களேன்'' என்றாள் ரஞ்சிதம், தன் காந்தப் புன்முறுவலை வீசி.

''...நேரிலே சொன்னால் சுவாரஸ்யமே போய்விடும், ரஞ்சிதம். நீ இதைப் படித்துத்தானாக வேண்டும். கொஞ்சம் பொறுமையாகப் படித்துத்தான் பாரேன். ஆனால், படித்ததும் பிடிக்காத விஷயமாக இருந்தால் என்னிடம் கோபித்துக் கொள்ளக் கூடாது.''

''இல்லை, இல்லை. நீங்கள் பயப்படாதீர்கள். நான் ஒருநாளும் உங்களிடம் கோபித்துக் கொள்ள மாட்டேன்...'' என்று மோகனப் புன்முறுவலுடன் கூறிவிட்டுக் கடிதத்தைப் பிரித்தாள், ரஞ்சிதம்.

ராம்குமாருக்கு இமயத்தின் உச்சியில் இருப்பதுபோல் குளிர்ந்















தது. 'நான் ஒருநாளும் உங்களிடம் கோபித்துக் கொள்ள மாட்டேன்'' என்று அவள் கொடுத்த வாக்குறுதி அவன் மனத்தில் நம்பிக்கையின் ஊற்றுக் கண்களைத் திறந்து வைத்தது. முக்கியமான சினிமா வசனம்மாதிரி பலமாக அவனது செவிகளில் ஒலித்தது.

ராம்குமாரின் கடிதத்தை ரஞ்சிதம் மிகவும் கவனமாகப் படித்தாள். அவள் முகத்தில் கொஞ்சம் கூடக் கோபக் குறியில்லை என்பதைக் கவனித்த ராம்குமார் புளகாங்கிதம் அடைந்தான். ஆவலோடு பதிலுக்குக் காத்திருந்தான்.

கடிதத்தைப் படித்ததும் ரஞ்சிதத்தின் முகம் வாடட்டமடைந்தது. ''உங்களிடம் எனக்குக் கொஞ்சம் கூடக் கோபமில்லை. ஆனால் என் மனம் உங்களிடம் வேறுவிதமாக ஈடுபட்டுவிட்டது. நான் என் தந்தையைப் பார்த்ததில்லை. நான் ஒரு மாதக் குழந்தையாயிருந்தபோதே அவர் இறந்துவிட்டார். நான் நடித்த முதல் படத்திலேயே நீங்கள் என் தந்தையாக நடித்தீர்கள். உங்களை என் வாய் நிறைய 'அப்பா, அப்பா' என்று அழைத்தபோதெல்லாம் நான் அடைந்த ஆனந்தத்தை அளவிட்டுக் கூற முடியாது. குழந்தைப் பருவத்திலிருந்து இந்த என் இருபதாவது வயது வரையில் உங்களைத் தவிர நான் வேறு யாரையும் 'அப்பா' என்று அழைத்ததில்லை. என்னைப் பொறுத்தவரையில் நான் உங்களை என் தந்தையாகவே மதித்துவிட்டேன். அதனால்தான் 'நீங்கள் உங்கள்' என்னும் மரியாதைப் பதங்களை என்னிடம் உபயோகிக்க வேண்டாம் என்று உங்களைக் கேட்டுக் கொண்டேன். ஆனால் உங்கள் எண்ணம்...'' என்று ரஞ்சிதம் கூறிக் கொண்டிருக்கும்போதே ராம்குமார் இடைமறித்து, சினிமாவில் நடிக்கிற மாதிரி பெருங் குரலில், ''...போதும் ரஞ்சிதம். போதும். என்னை மன்னித்துவிடு. என்னை மன்னித்துவிடு'' என்று அலறிக்கொண்டே அவள் வீட்டை விட்டு வெளியேறி ஓடினான்.

தன் வீட்டை அடைந்த பிறகுதான் ராம்குமாருக்கு ஓரளவுக்கு நிம்மதி உண்டாயிற்று. ஆனால் மற்ற நடிகைகளுக்குக் கடிதம் எழுதும் எண்ணம் அடியோடு அவன் மனத்தை விட்டுப் போய்விட்டது. வீட்டுக்கு வந்து தன் மேஜை எதிரில் அமர்ந்து மேஜையை ஒரு நோட்டம் விட்டான். பிரிக்கப்படாதபல கடிதங்கள் அநாதையாகக் கிடந்தன. அந்தக் கடிதங்களை எழுதியது யாரென்பது ராம்குமாருக்கு நன்றாகத் தெரியும். அவன் அத்தை மகள் சீதா தன் இதயத்து அன்பை யெல்லாம் கொட்டி கண்ணீரினாலேயே எழுதிய கடிதங்கள் அவை.

ஒரு கவரை எடுத்துப் பிரித்தான். அது வந்து ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது. சீதா அலுத்துப் போய் எழுதிய கடைசிக் கடிதம் அது:

''அன்புள்ள அத்தான்,

என் கடிதங்கள் அங்கே பிரிக்கப்படாமலே கிடக்கும் கொடுமை எனக்கு நன்றாகத் தெரியும். சினிமாவில் நீங்கள் நடிக்க ஆரம்பித்தபோதே எனக்குக் கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது. ஆனால் படங்களில் தகப்பனாராகத்தானே நடிக்கிறீர்கள் என்று ஆறுதல் செய்து கொண்டேன். மேலும் உங்களிடம் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. ஆனால் என் கடிதங்கள் ஒன்றுக்குக் கூடப் பதில் எழுதவில்லை நீங்கள். மனசுக்குக் குழப்பமாக இருக்கிறது. இந்தக் கடிதத்துக்குப் பதில் வரவில்லை என்றால் உங்களிடம் நான் கொண்டுள்ள முழு நம்பிக்கையையும் இழந்து விடுவேன். அப்புறம்...அப்புறம்...''

அதற்கு மேல் ராம்குமாரினால் படிக்க முடியவில்லை. கண்களில் நீர் மல்கி மறைத்தது. ஆனால் சினிமாவில் வருகிற மாதிரி சீதாவின் முகம் பெரிதாகக் 'குளோஸப்'பில் தெரிந்தது. அவன் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது. மீண்டும் கடிதத்தைப் படிக்கலானான்: இல்லை சீதாவே பேசலானாள்:

''அத்தான்! நீங்கள் நடித்து வெளியான படங்களை யெல்லாம் பார்த்து வருகிறேன். உங்களோடு நடிக்கும் சினிமா நடிகைகளை யெல்லாம், 'மகளே' என்று நீங்கள் அன்பு பொங்க அழைத்து, தந்தையின் அன்புடன் ஆதரவாக அணைத்துக் கொண்டு உருக்கமாகப் பேசும் பேச்சுக்களைக் கேட்கும்போது என் உடம்பெல்லாம் சிலிர்த்துப் போகிறது. யாருக்கும் கிட்டாத பாக்யமாக எனக்கு நீங்கள் கிட்டியிருக்கிறீர்கள். ஏக பத்தினி விரதனான ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் பெயரைத் தாங்குகிறீர்கள். உங்களுக்கும் எனக்கும்தான் எத்தனை அழகான பெயர்ப் பொருத்தம்! என்னைத் தவிர வேறு யாருக்கும் உங்கள் இதயத்தில் இடம் இருக்காது என்பதில் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. ஆனால், அப்பாவும் அம்மாவும் உங்களை நம்ப மாட்டேன் என்கிறார்கள். நீங்கள் ஒரு சினிமா நடிகையைத்தான் மணந்து கொள்ளப் போகிறீர்களாம். என்னை மறந்து விட்டீர்களாம். அப்பாவும், அம்மாவும் இப்படியெல்லாம் சொன்ன போதிலும் நான் உங்களைக் கொஞ்சம் கூடச் சந்தேகிக்கவில்லை. இருந்தாலும் நீங்கள் மூன்று வருஷங்களாக இந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. உங்களைப் பற்றிய சந்தேகம் தீர வேண்டுமானால் ஒரு வாரமாவது படப்பிடிப்புகளுக்கு ஓய்வு கொடுத்துவிட்டு ஊர்ப் பக்கம் வாருங்கள்.... இதற்கு மேல் எழுதவே என் கை நடுங்குகிறது. அப்பா எனக்கு வேறு வரன் பார்க்கிறார்....நான் உங்களைத் தவிர... வேறு யாருக்கும்....மாலையிட மாட்டேன்.'' —அன்புள்ள சீதா''

கடைசி வரிகளில் நிறைய அழிந்திருந்தன- அவள் கண்ணீர் சிந்தியிருக்க வேண்டும். ராம்குமாரின் கண்களிலும் கண்ணீர் பெருகியது. சீதாவுக்குத்தான் அவனிடம் எத்தனை அன்பு!

சினிமாப் படப்பிடிப்புக்களுக்கெல்லாம் ஒரேயடியாக முழுக்குப் போட்டுவிட்டு, சினிமா ஆசைக்கும் அவற்றுடன் முழுக்குப் போட்டுவிட்டு ராம்குமார் தனக்காகக் காத்திருக்கும் சீதாவைக் காண ரயிலேறி விட்டான். அவன் மனம் மிகவும் நிர்மலமாயிருந்தது. வானத்தை விட நிர்மலமாயிருந்தது. ஆம், வானத்தில் நிறைய நட்சத்திரங்கள் நின்று கண் சிமிட்டின. ஆனால் அவன் மன வானில் வழக்கமாக மின்னிக் கொண்டிருந்த சினிமா நட்சத்திரங்களில் ஒன்றுகூட அப்பொழுது இல்லை.



# வீட்டிலோ, வெளியிலோ...ஆயுட்கால ஆனந்தத்தை அளிக்கும் உறுதுணை—பை!

வீட்டிற்குள்ளோ, வெளியிலோ ஒரு பை ரேடியோ எடுத்துச் செல்லுங்கள்! வருடக்கணக்காக உடனிருந்து ஆனந்தமளிக்கும் ரேடியோ, பை! பொருத்தமாக மாட்ச் செய்யப்பட்ட ஒலி அமைப்பின் காரணமாக, பை ரேடியோ, மிகத் தெளிவான ஒலிபிரட்டலைத் தருகிறது. வருடக்கணக்காக அப்பழுக்கற்று இயங்குவதற்கென இதன் ஒவ்வொரு பாகமும் மிக நுணுக்கமாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. பை ரேடியோவின் நவீன சீரமைப்பு (ஸ்ட்ரீம்லைண்ட் ஸ்டைலிங்) உங்கள் இல்லத்தை அழகுமிளிரச் செய்கிறது. ரேடியோ மற்றும் டெலிவிஷன் துறையில், சிறந்த அகில உலகப் புகழ்வாய்ந்தது, பை.

உங்கள் அருகாமையிலுள்ள பை வியாபாரியிடம் சென்று பை ரேடியோக்களையும், ட்ரான்ஸிஸ்டர்களையும் வைத்துக் கேட்டுப்பாருங்கள். நீங்கள் அவற்றை விரும்புவீர்கள்.

மாடல் 3320 போர்டெபிள் ட்ரான்ஸிஸ்டர். 9 ட்ரான்ஸிஸ்டர் டயோடுகள், 3 பாண்டுகள், அதி நுட்பம்வாய்ந்த ஒலிபெருக்கி, ஃபெர்ரைட் மற்றும் டெலஸ்கோபிக் ஏரியல்கள், 2-டோன் வார்ப்படம் செய்யப்பட்ட காபினெட்டார்த்திங் (நிலத்தொடர்பு) மற்றும் வெளிப்புற ஏரியல்களைப் பொருத்துவதற்கான ஸாக்கெட்டுகள். விலை ரூ. 328/-* தோல் உறை விலை ரூ. 20/-

மேலும், டேபிள் ட்ரான்ஸிஸ்டர்கள், எஸி மற்றும் எஸி/டிஸி மெயின்கள்.

* விலைகள் சுங்கவரி மாத்திரம் அடங்கியவை. விற்பனைவரி மற்றும் இதர உள்ளூர் வரிகள் தனி.

ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் லிட். பை ரேடியோ டிவிஷன்.**

பம்பாய், கல்கத்தா, மதராஸ், டெல்லி, பெங்களூர், செகந்திராபாத், பாட்னா.

**பை லிமிடெட்**, கேம்ப்ரிட்ஜ், இங்கிலாந்து, அவர்களின் தரப்பில் நேஷனல் எக்கோ ரேடியோ அண்ட் என்ஜினீயரிங் கோ. லிட்., பம்பாய் 1 அவர்கள் **பை** ரேடியோக்களைத் தயாரிக்கின்றனர்

Shilpi GRA 286-TAM.

அட்டைப் படக்கதை

# இதய மலர்




''டாக்டர்!''

டாக்டர் சுந்தரராஜன் தம் இளம் நோயாளி நளினியைக் கூர்ந்து பார்த்தார். ''என்னம்மா நளினி? என்ன சொல்ல வருகிறாய்?''

''எதற்காக இன்னும் இந்த வீண் சிரமமெல்லாம்?'' அவள் குரலில் அலுப்பும் சலிப்பும் குமிழியிட்டன.

''அப்படியெல்லாம் நம்பிக்கை இழக்க வேண்டாம், நளினி!'' டாக்டர் சிரஞ்சால் மருந்துப் பாட்டிலிருந்த திரவத்தை இழுத்தார்.

''எனக்குத் தெரியும், இன்னும் அதிக நாள் நான் உயிர் வாழப் போவதில்லை என்று.''

டாக்டர் புன்னகையோடு பஞ்சால் அவள் கையில் தடவிவிட்டு ஊசியைச் செலுத்தினார்.

''அப்பப்பா! இப்படிக் குத்திக் குத்தியே உடம்பெல்லாம் ஒரே புண்ணாகிவிட்டது.''

டாக்டர் அவள் நெற்றியை வருடியவாறே ஆதரவு தரும் மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார். ''நீ படித்தவள். ஆகவே மனத் திறன் மிக்கவள் என்றல்லவா நினைத்தேன்? நம்பிக்கைக்கு இருக்கும் சக்தி மருந்துக்கு இல்லை என்பது உனக்குத் தெரியாதாம்மா? நளினி! உனக்கு ஒன்றைத்தான் வலியுறுத்திக் கூறுவேன். ஓய்வு வேண்டும் உனக்கு, உடலுக்கும் உள்ளத்துக்கும்...''

''அது நிறையக் கிடைப்பதால்தான் எனக்கு அமைதியே கிடைப்பதில்லை. ஒரே சிந்தனை... என்னை முடக்கிக் கொள்ள முடியாத ஓய்வு எனக்கு வேண்டுமானால்...எத்தனை குறுகிய காலமானாலும்கூட எனக்கு வாழ்வு வேண்டும்!''

டாக்டர் அதிர்ச்சியோடு, ''நீ என்னம்மா சொல்கிறாய் நளினி?'' என்று பதறினார்.

''ஆம் டாக்டர்! நான்... நான் ஒரு மனைவியாகவே சாக விரும்புகிறேன்!''

டாக்டர் தம்மைத் திகைப்பினின்றும் வெளியேற்றியவாறே குரலெழும்பாக்குரலில், ''மண வாழ்வா?'' என்று முணுமுணுத்தார்.

இதயத்து நோயை உணர்ந்திருந்த டாக்டருக்கு, அங்கு அரூபமாக ஒளிந்திருந்து வினை தரும் ஏக்கத்தையும் சுட்டிக் காட்டிவிட்டாள் நளினி.

டாக்டர் முன் பக்கம் வந்தார். இதுவரை வாசல் ஓரம் நின்றிருந்த செல்வந்தர் சாம்பசிவம் அவரைப் பின்தொடர்ந்தார். இருவரும் சோபாவில் அமர்ந்தனர்.

''டாக்டர்! கேட்டீர்களா நளினி கூறுவதை? எனக்கு எவ்வளவுதான் செல்வமிருந்தென்ன? இவள் போன பின் எதற்கு இவையெல்லாம்?'' மிகுந்த பிரயாசையோடு உணர்ச்சி பொங்கக் கூறினார் சாம்பசிவம்.

''ஆனால் மிஸ்டர் சாம்பசிவம், நளினியின் இதயம் மிகவும் பலவீனம் அடைந்துள்ளது. நல்ல ஓய்வில் சாதாரண நிலையில் இருந்தாலே இரண்டு வருடங்கள் நம்பலாம். மணவாழ்வு என்றால் ஆறு மாதமோ ஒரு வருடமோ நிச்சயமாகச் சொல்ல முடியாது. மகிழ்வின் உச்சத்தையோ, மிகையான துக்கத்தையோ தாங்கும் நிலையில் இல்லை அவள் இதயம். ''உம்...அது இருக்கட்டும். சொந்தத்தில் யாராவது வரன் இருக்கிறானா?''

''சொந்தத்திலானால் இத்தனை நேரம் பாதி ஏற்பாடுகள் செய்து விட்டிருப்பேன்'' என்றார் சாம்பசிவம் ஏக்கத்துடன்.

''ஓ! அவளே யாரையாவது விரும்புகிறாளா?''

''உம்! அப்படித்தான்.''

''அப்படியானால்...?''

''நளினியின் விருப்பம் அது. அந்தப் பையனுக்கு அப்படி ஓர் எண்ணம் இல்லையாம். அவனுக்கு உறவுப் பெண் இருக்கிறாளாம். நளினி சொல்கிறாள், வேறு யார் அவளை மணக்க முன்வந்தாலும் பணத்துக்காக வருவார்களாம். அவள் மனத்தை மதிக்க மாட்டார்களாம். அந்தப் பையன் மிகவும் உயர்ந்த குணமுடையவனும். அவன் நளினியை மணந்து கொண்டால்? நீங்கள் கூறுவது போல் ஆறு மாதமோ...ஒரு வருடமோ கழித்துத் தனக்குப் பிடித்தவளை மணந்து கொள்ளட்டும் என்கிறாள்.''

''அப்படியா கூறினாள்?'' என்று கசிந்தார் டாக்டர்.

''எனக்கு எந்த வழியும் புலப்படவில்லை. அந்தப் பையனையே நேராகக் கேட்டேன். உங்களுக்கு விஷயம் எட்டவில்லையா டாக்டர்?''

''எனக்கு எப்படித் தெரியும் விஷயம்? ஒவ்வொன்றாகச் சொல்கிறீர்களே. என்ன சொன்னான் அந்தப் பையன்?''

''அதை நளினியிடம் கூடக் கூறவில்லை. ஏனெனில் அவன் மறுத்து விட்டான். எத்தனை சொல்லியும் அவன் கேட்கவில்லை.''

''அப்பா!'' என்ற அலறல் கதவோரம் கேட்டது. அங்கே நளினி அலங்கோலமாகக் கீழே விழுந்து கிடந்தாள்.

டாக்டர் பரபரத்தார். நாடியும் இதயமும் துல்லியமாக அவருக்கு எச்சரிக்கை விடுத்தன. நளினிக்குப் பலத்த அதிர்ச்சி. இந்த நிலையிலும் எண்ணியதைப் பெற மாட்டோமோ என்ற அதிர்ச்சி. அவள் மயக்கம் தெளிந்த போது டாக்டர் முகம் நிறையச் சிரித்து அவள் கவலையைப் போக்க முயன்றார்.

''நளினி! நீ கவலைப்படாதேம்மா. நான் ஆயிற்று, உனக்கு உறுதி கூறுகிறேன். நீ விரும்பும் வாலிபனை நான் மணம் முடித்து வைக்கிறேன், எவ்வகையிலேனும்... அந்தப் பையன் யாரம்மா?''

''டாக்டர்! நான் எப்படி...?''

''மிஸ்டர் சாம்பசிவம், நீங்கள் கூறுங்கள்.''

சாம்பசிவம் பெரும் தயக்கத்தோடு போராடினார். கடைசியாக மெல்ல நாவசைந்தது. ''நாகராஜன்!''

''நாகராஜனா?'' டாக்டருக்குப் பொறி கலங்குவது போலிருந்தது.

''ஆம் டாக்டர்! உங்கள் மகன் நாகராஜன் தான். நீங்கள் முயன்று முடிக்கக் கூடிய இடம்தான். நளினிக்காக இதைச் செய்யுங்கள் டாக்டர். மறுத்து விடாதீர்கள், டாக்டர். அவளால் அதைத் தாங்கிக் கொள்ளவே முடியாது.''

''நளினி! நீ கொஞ்சம்கூட அவநம்பிக்கை கொள்ளாதே. அவனை உன் கணவனாக்குவது என் பொறுப்பு; என் கடமையும்கூட.''

''டாக்டர்! உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?'' உணர்வின் மிகுதியில் சாம்பசிவம் டாக்டரின் கரங்களைப் பற்றிக் கொண்டார்.

டாக்டர் நளினியை நோக்கினார். அவள் முகம் நிலவாகப் பூத்திருந்தது. அதன்பின் மருந்துகளைப் பற்றிக் கூறியதோ, விடை பெற்றதோ, காரில் அமர்ந்து ஓட்டி வந்ததோ எல்லாம் இயந்திர கதியில் நடந்தன.

ஒரு ஜோடி சிரிப்பலைகள் இழைந்து அவரை வரவேற்றன. வீட்டினுள் அடியெடுத்து வைக்கவே அவர் கால்கள் கூசின.

ஹாலில் நாகராஜனும், பாலாவும் கேரம் போர்டு விளையாடிக் கொண்டிருந்தனர். ''போதும் அத்தான். கை வலிக்கிறது'' என்று ஸ்ட்ரைக்கரைத் தூரப் போட்டாள் பாலா.

டாக்டரைக் கண்டதும் அடங்கிய சிரிப்பு அவர் மாடியை அடைந்ததும் தொடர்ந்தது. சிறிது நேரத்துக்கு முன் கண்ட அந்த இருவர் முகத்தின் குதூகலத்தையும், பார்வைக் கணைகளின் ஈர்ப்பையும் எண்ணிக் கண்கள் கசிந்தன. இருவருமே எதிர்கால வளமையைப் பற்றிக் கோபுரங்களாகக் கற்பனைகளை வளர விட்டிருப்பார்களே? நிர்மாணிக்கப்பட்டுவிட்ட எதிர்கால ஜோடிகளில்லையா அவர்கள்? அதனால்தானே அவர்கள் எதிர்ப்போ, மறைவோ இன்றிப் பழகி வருகின்றனர்! இப்போது ஜோடி சேர்ப்பது தெய்வத்தின் உரிமை என்று விதி சிரிக்கிறதா? இந்தக் குழந்தைகளை அவர் எவ்வாறு பிரிப்பார்? டாக்டர் நெற்றிப் பொட்டை அழுத்திய வாறே தேம்ப முயன்றார். சீ! ஒரு டாக்டர் அழுவதா? இதய நோயாளி ஒருத்திக்குக் கொடுத்த வாக்கை இப்படிப் பாசச் சுழிப்பில் வீசி ஏறிய முயல்வதா? கூடாது. அது முடியாது. முதலில் அவர் ஒரு டாக்டர். அப்புறம்தான் நாகுவின் தந்தை, பாலாவின் மாமா என்ற உறவெல்லாம்! அவர் தம்மையே தேற்றிக் கொண்டார்.

காப்பி கொணர்ந்த மனைவியிடம் அவர் ''நாகுவை மேலே அனுப்பு'' என்று சொல்லி அனுப்பினார்.

சிறிது நேரத்தில் குதூகலத்தின் ஒரு துண்டாக, மகிழ்ச்சியின் ஒரு தெறிப்பாக அவன் அவரருகே வந்தான்.

''என்னப்பா! ரயிலுக்கு ஏதேனும் டிக்கெட் 'புக்' பண்ணணுமா?''

''உட்கார்'' என்றார் அவர். எப்படி ஆரம்பிப்பது என்றே தெரியவில்லை.

''அப்பா! ரொம்ப 'சீரியஸ்' விஷயமோ?''

''நீ ஒரு தியாகம் செய்ய வேண்டும்''— வறண்ட குரல் எந்த உணர்வைப் பிரதிபலிக்க வேண்டுமோ அதைச் செய்யவில்லை.

''என்னப்பா இது? கதைகளில் வருவது போல் பேசிக் கொண்டு'' என்று வேடிக்கையாக வினவினான் அவன். அந்த உரிமையை அவர் வழங்கி யிருந்தார்.

''நீ எனக்காக ஒன்று செய்ய வேண்டும் நாகு! ஒரு பெண்ணுக்கு நான் வாக்குக் கொடுத்து விட்டேன்.''

''என்னப்பா இது? இந்த வயதிலா?'' என்று அவன் 'போலி'யாகக் கேலி பேசினான். ''அம்மாவுக்குத் தெரியுமா?''

''போடா அசடு! ஆன வயதுக்கு என்ன பேசுகிறேன் என்று தெரியவில்லையா?''



**இதல்லவோ சமதர்மம்!**

கலிபோர்னியாவில் உள்ள கட்டிட வல்லுநர் பெட்ருஸ்கி என்பவர் சுழலும் குடியிருப்புக் கட்டிடம் கட்டுவதற்கான திட்டம் ஒன்றை தயாரித்திருக்கிறார். பசிபிக் கடற்கரை ஓரத்தில் கட்டப்படும் இந்தக் குடியிருப்பானது ஒரு நாளைக்கு எட்டு முறை சுழலும். அதன் மூலம் ஒவ்வொரு பகுதியில் குடியிருப்பவர்களும் கடல் அழகைக் காணும் சமவாய்ப்பு கிட்டும். - 'ரத்னஸ்ரீ'

ஆதாரம் 'எல்லி' (பிரான்ஸ்)

''புரிகிறது. நீங்கள் சாம்பசிவம் வீட்டிலிருந்து வருகிறீர்களா?'' என்று அலட்சிய தோரணையில் கேட்டான் நாகராஜன்.

''ஆம்! அவள் இதயம் மிகவும் பலவீனமாகி விட்டது. வாழப் போவது ஓராண்டோ அரையாண்டோதான்....''

''அதற்கு நீங்கள் டாக்டர் என்ற முறையில் முடிந்த அளவு குணப்படுத்த முயலுங்கள்.''

''அதுதான் முயலுகிறேன். அவளுக்குச் செல்வத்தில் குறைவில்லை. மனத்தில் மட்டும் குறை உண்டாகி விட்டது. அவளைப் புரிந்துகொண்டு அன்பு செலுத்த ஓர் உள்ளம் தேவைப்படுகிறது. அவளைச் சாகும் வரை நிம்மதிப்படுத்தி மகிழ்விக்க நான் பொறுப்பேற்று விட்டேன். அதை என் கடமையாகவே கொண்டு விட்டேன். நளினியை நீ விரைவில் மணக்கப் போகிறாய்!''

''அப்பா! இது நடக்கக்கூடிய காரியமா? அவர்கள் கேட்கிறார்கள் என்று நீங்களும்.... பாலாவை நினைத்துப் பார்க்கவில்லையா ?''

''எல்லாம் நினைத்துப் பார்த்தேன். அவள் உனக்கே உன்க்குத்தான். ஏனெனில், நளினியின் வாழ்வு ஒரு வருடத்துக்குத்தான்......''

''அப்பா!'' நாகு அலறினான். ''இது நியாயமா அப்பா ? எங்களுக்கெல்லாம் இதயம் என்று ஒன்றில்லையா ? உங்களுக்குத்தான் மனசும், வாக்கும் உண்டா? ஒரு வருடத்துக்குள் இறந்துவிடப் போகும் ஒரு பெண்ணை உங்கள் மகனுக்கு எப்படியப்பா மணம் பேசுகிறீர்கள்?....''

''நாகு! என் வரை ஒரு ஆரோக்கியமான இதயத்தைப் பற்றி நான் கவலைப்படப் போவதில்லை. ஒரு பலவீனமான இதயத்தின் தேவையை உணர்ந்து, செய்வதை அவசரமாகச் செய்ய வேண்டிய அவசியம் ஒன்றே எனக்கு முக்கியமானது. என் சொல்லுக்கு ஒரு சிறு எதிர்ப்புக்கூட ஏற்படுவதை நான் விரும்பவில்லை. போ, உடனே பாலாவை இங்கே வரச் சொல், நான் பேசிக் கொள்கிறேன்.'' டாக்டர் ஆத்திரமும், அதட்டலுமாகக் கூறி முடித்தார்.

அதுமுதல் டாக்டரின் வீடு வீடாக இல்லை. இப்போதெல்லாம் அது அவருக்குப் பழகி விட்டது. பாலாவின் கலீர்ச் சிரிப்பையோ, நாகு அவளைச் சீண்டும் குறும்பையோ கண்டு நாள் பலவாயிற்று. ஏன், மஞ்சள் முகம் பளபளக்க 'என்னங்க' என்று எந்நேரமும் வளையவரும் கமலம்? இப்போது அவளுக்குக் கேட்பதற்கே ஒன்றுமிருப்பதில்லை போலும்! அவர் மனத்தில் கூர்மையான நகத்தால் கீறிக் குருதி கசியும் வேதனை ஏற்பட்டது. இதெல்லாம் அவராலா? ஓர் அபலைப் பெண்ணின் வாழ்வுக்கு முயன்றது ஒரு குற்றமா? அவர் இல்லம், கலைத்துவிடப் பெற்ற குருவிக் கூடாகி விட்டதே !

அவர் தம் அறையின் உள்ளே சென்றதும், பாலா காப்பிக் கோப்பையுடன் அங்கே வந்தாள். அவர் எதிரே கோப்பையை வைத்து விட்டுத் திரும்ப இருந்தவளைத் தயக்கத்தோடு பார்த்தார் அவர். ''பாலா!'' அவர் குரலில் ஒரு சங்கடமான போராட்டம்.

''என்ன மாமா?!'' என்று கனிவாகப் புன்னகை பூக்க முயன்றாள் அவள்.

எத்தனை போலியான சிரிப்பு !

''நாளை மறுநாள் நாம் யாவரும் திருநீர்மலை செல்கிறோம். புறப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்து கொள்ளுங்கள்!''

''அத்தானும் அக்காவும் திரும்பவும் இந்த வீட்டுக்கு வரும்போது ஆரத்தி சுற்றி வரவேற்க நான் இங்கேயே தங்கி இருக்கிறேன் மாமா !''

அவள் குரலில் எந்த உணர்ச்சி மேலோங்கி இருக்கிறதென்பதை டாக்டரால் அனுமானிக்க முடியவில்லை. ஆனால் அவள் முகத்தைப் பார்த்த போது அவரால் வற்புறுத்த இயலவில்லை. அவள் வர விரும்பவில்லை. அது இயற்கை. இவளை விட்டு விட்டுக் கமலம் வர ஒப்புவாளா? அந்தப் பொறுப்பை இவள் மீது சுமத்துவதுதான் சரி.

''திருமணம் முடிந்து நளினி இங்கு வரப் போவதில்லை. நாகுதான் அங்கே போய் இருக்கணும். அவள் இதய நோயாளி அல்லவா?....உம்....உன் அத்தையைக் கிளம்பத் தயார் பண்ணுவது உன் பொறுப்பு.''

அவள் பதில் கூறவில்லை. அவர் கூறிய காரியத்துக்கு ஆமோதிப்பு உண்டு என்பது அந்த மௌனத்திலேயே விளங்கியது.

மூன்று தினங்கள். எதையுமே சாதித்து விடாத எளிமையோடு அவை ஓடிவிட்டன.

நளினியை நாகு மனைவியாக்கிக் கொண்டான். வீட்டில் உறவினர்களுக்கென்றும், ஹோட்டலில் பிரமுகர்களுக்கென்றும் அதைத் தொடர்ந்து விருந்துகள் நடந்தன. இப்போது நாகு பூரணமான குடும்ப வாழ்வை மேற்கொண்ட முழு இளைஞன். நளினியின் நெஞ்சுக்குக் கிடைத்த அரிய பொக்கிஷம்.

நான்காம் நாள் காலை நாகராஜன் நளினியின் வீட்டிலிருந்து தன் வீட்டுக்கு வந்தான். பூஜை மாடத்தின் எதிரே கண் மூடித் தியானித்த பாலாவின் விழித்த கண்ணுக்கு விருந்தென நின்றான் அவன். வெகுநாட்களுக்குப்பின் அத்தானைச் சந்திக்கும் கிளர்ச்சி பொங்க நின்றாள் அவள். ஆனால்

அவன் கண்களில் தெளிந்த அமைதி சுரீரெனச் சுட்டது. இனம் புரியாததொரு மாற்றத்தை அவன் சொல்லாமலேயே விளங்கிக் கொண்டாள் அவள். சட்டென விலகி, தன் மாமாவுக்கும் அத்தைக்கும் அவர்கள் பிள்ளையின் வரவைத் தெரிவித்தாள்.

கமலத்தின் உள்ளம் துடித்தது. மகனையும், பாலாவையும் பார்த்தாள். இந்த இரு உள்ளங்களும் அன்றிலிருந்து பேசவோ, ஏன், பார்க்கவோகூட இல்லாமல் பிரிந்து விட்டனவே என்ற ஒரே எண்ணம்தான் வளர்ந்தது.

''அப்பா....!''

''என்ன நாகு? நளினி ஏதேனும் சொன்னாளா?''

''இல்லை அப்பா. நான்தான் தீர்மானித்த ஒன்றைச் சொல்லப் போகிறேன். அதைக் கேட்டால் நீங்களும் அம்மாவும் ஏன் பாலாவும்கூடக் கோபித்துக் கொள்ளலாம். நான் பிடித்தோ பிடிக்காமலோ நளினியை மணந்து விட்டேன். இனி வாழ்வின் இடையே அவள் பிரிந்து போனாலும்கூட அவள் ஒருத்திதான் என் மனைவி அப்பா !''

''நாகு!'' என்று அலறினாள் கமலம்.

டாக்டர் திகைத்தார். அவர் போட்ட முடிச்சுக்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று பொருந்தாமல் திசைமாறி, நைந்து, முறுக் கவிழ்வது போலிருந்தது. ''என்ன நாகு? இது என்ன பைத்தியக்காரத்தனம்? ஒரே வருடத்தில் உனக்கு இல்வாழ்க்கைத் துறவு தர நான் இந்த முயற்சியைச் செய்யவில்லை.''

''வேறு வழியில்லை அப்பா !'' வார்த்தைகளில் வெளிப்படாத தீர்மான உறுதி குரலில் முகிழ்த்தது.

''பார்த்தீர்களா, பார்த்தீர்களா, உங்கள் பிள்ளையை? உங்கள் பிடிவாதத்தாலும், அவன் பிடிவாதத்தாலும் பாலாவுக்கு என்ன கதி நேர்ந்து விட்டது பார்த்தீர்களா?'' ஆக்ரோஷத்தோடு ஆரம்பித்துத் தழுதழுப்பில் வலுவிழந்தது கமலத்தின் குரல்.

''கமலம் நீ பேசாமலிரு. நாகு! வா மாடிக்குப் போகலாம்'' என்று படியேறிய தந்தையைப் பின்தொடர்ந்தான் நாகு. எந்தவித சமாதானத்துக்கும் அயராது சமாளிக்கும் உறுதி அவன் கால்களின் அழுத்தத்திலும் பிரதிபலித்தது.

**டா**க்டர், நளினியைப் பரிசோதித்துப் பார்த்தார். மிகவும் திருப்தியோடு அங்கிருந்து புறப்பட்டார்.

தெய்வத்தையே கண்ணெதிரில் கண்டு விட்ட மரியாதையோடு கதவருகே சென்று மறையும் வரை டாக்டரையே பார்த்து நின்றாள் நளினி. முற்றத்து நிலவாகியிருந்தது அவள் முகத்தின் பொலிவு. மெலிந்த உடலில் யாருக்கும் தெரியாத ஒரு சிறு பலம். ஏங்கிய விழிகளில் அமைதி. வென்று விட்ட களிப்பின் அளவான இதம் போல் முடியும் கருகருப்பு. இப்போதெல்லாம் நளினியால் வெகு நேரம் உட்கார இயலுகிறது. கண்கள் களைப்புற்று, தலை சுற்றி மயக்கம் வருவதில்லை. கற்பனை செய்திருந்த மகிழ்ச்சி நிலைகுலையாமல் வந்த புதுச் சூட்டில் அவளுக்கு அதீத தெம்பு வந்தாயிற்று. இனி சட்டென ஒன்றுக்கு இரண்டாய இறங்கு முகம் காட்டுமோ?

கொஞ்ச நாட்களாய் நளினியால் சீர்தூக்கிச் சிந்திக்க முடிகிறது. நாகராஜன் என்ன அவளுக்குக் கிடைக்கக் கூடியவனா? அதுவும் வேறு ஒருத்திக்கு என்று தீர்மானிக்கப்பட்டவன்! கிட்டத்தட்ட பறித்துக் கொண்டது போல்தானே இன்று? கல்லூரியில் இரண்டு வருடங்களுக்குமுன் இந்த நெருக்க வலி மறைமுக எச்சரிக்கையாக நின்ற போது, அவனுடன் அவள் பழகவும், பேசவும் நேர்ந்த போதெல்லாம் உதாசீனம் காட்டியவன், இன்று அன்பை வர்ஷிக்கிறான். இப்படிப்பட்ட பரிபூரணமான அன்பு கிட்டும் என்று அவள் நினைத்திருந்தாளா என்ன?

''நளினி !'' அழைத்துக் கொண்டே நாகு உள்ளே வந்தான்.

''நளினி! சாயந்திரம் ஓர் இசை நிகழ்ச்சி இருக்கிறது. போகலாமா? உனக்குப் பிடிக்கிறதா ?''

''ஓ! உங்களுக்குப் பிரியமான இடத்துக்கு வர எனக்குப் பிடிக்காமலா போகும்?''

''அப்படியானால் நீ தயாராக இரு. நான் குளித்துவிட்டு வருகிறேன்.''

நளினி தலையை அவிழ்த்துச் சீவிப் பின்னிக் கொண்டாள். முக அலங்காரத்தை முடித்துக் கொண்ட போது தோன்றிய ஒரு சிறு களைப்பை ஆற்றிக் கொள்ளச் சோபாவில் விச்ராந்தியாகச் சாய்ந்து கொண்டாள். நாகு இன்னும் குளித்துவிட்டு வரவில்லை. வரும் வரை அவள் ஓய்வு எடுத்துக் கொண்டால், இசை நிகழ்ச்சியைக் கொஞ்ச நேரம் அமர்ந்து ரசிக்கலாம். ஆனால் இதென்ன, இன்று இத்தனை தீவிரக் களைப்பு? நளினி கண்களை அழுத்தி மூடிவிட்டுக் கொண்டு திறந்து பார்த்தபோது அறை வாசற்படியில் நிழலாடியது.

''யார் ?''

''உள்ளே வரலாமா?'' இனிமையான பணிவான குரலோடு ஒரு பெண்ணின் முகம் தெரிந்தது.

''வாருங்கள். இப்படி உட்காருங்கள் !'' என்று கூறிய நளினி வந்தவளை இனம் புரியாமல், ''நீங்கள்?'' என்று தயங்கினாள்.

''நான் பாலா. உங்கள் டாக்டரின் தங்கை மகள்.''

'சட்'டென்று பிரமிப்பில் வாயடைத்த நளினி, ''அப்படியா?'' என்று மெல்லிய குரலில் வினவியவாறே எழுந்து அவளருகே போய்ப் பாலாவின் கரம் பற்றி ஆதூரத்துடன் சேர்த்துக் கொண்டாள்.

''டாக்டர் இருப்பார் என்று வந்தேன்.''

'' அவர் அப்போதே வந்துவிட்டுப் போயாகி விட்டதே !''

''அவர்.... உங்கள் கணவர்....''

''உங்கள் அத்தான் என்று கூறுங்களேன். நியாயம்தானே? உங்களுக்குக் கோபமிருக்கும். நீங்கள் என்னை மன்னிக்க வேண்டியது தான் முறை. எனக்கு இதய நோயைத் தந்து விட்ட கடவுளுக்காகவாவது......!''

''நீங்கள் ஏதேதோ பேசுகிறீர்கள். நான் அப்படி ஏதும் நினைக்கவில்லை.......''

''இப்படி என்னைச் சமாதானப்படுத்துவது மரியாதைக்காகவென்றாலும், கொஞ்சம்

சந்தோஷமாகத்தான் இருக்கிறது. என் தங்கையே! உங்கள் வாழ்வுக்கு நான் இடைஞ்சலாகவே இருக்க மாட்டேன். இன்னும் அதிகம் என்று எண்ணினால் ஒரே ஒரு வருடம் பொறுத்துக் கொள்ளுங்கள். என் வாழ்நாள் அவ்வளவுதான். அதன்பின் என் வாழ்வு - உங்களிடமிருந்து தயை தாட்சிண்யமில்லாமல் பறித்துக் கொண்ட வாழ்வு - உங்களிடமே திரும்பி விடும். இந்த ஏழைச் சகோதரியை நீங்கள் மன்னிக்க வேறு என்ன வேண்டும்?''

பாலா தானும் எழுந்து கொண்டாள். ''இப்படி எல்லாம் பேசாதீர்கள் நளினி. எனக்கு எவ்விதமான கோபமோ வருத்தமோ இல்லை. நீங்கள் எதையாவது நினைத்து வருத்தப்படாமல்....''

''வருத்தமா? அதை நான் தனியாகப் பட வேண்டுமா? நானே வருத்தத்தின் ஒரு தனி வடிவம் பாலா'' என்று நளினி கூறிக் கொண்டிருக்கும் போதே, ''கிளம்பிவிட்டாயா நளினி?'' என்றவாறே துவாலையும் கையுமாக அங்கே வந்தான் நாகு.

''உங்கள் பாலா வந்திருக்கிறாள், பாருங்கள்...... பார்த்தீர்களா? நான் மண்டுகம்! என்னைப் பார்க்கத்தான் வந்தாளா, வேறு எதற்காவது வந்தாளா என்றுகூட நான் விசாரிக்கவில்லை.''

நாகு திகைப்போடு பாலாவைப் பார்த்தான். அவள் ஏன் இங்கே வந்தாள்?

''அத்தைக்கு உடம்பு சரியில்லை. மாமாவிடமாவது உங்களிடமாவது கூறி அழைத்துப் போகலாம் என்று வந்தேன்.''

நாகு பரபரப்போடு, ''அப்படியா? கிளம்பு, போகலாம்'' என்றான்.

''நானும் கூட வருகிறேனே?''

''வேண்டாம் நளினி. நீ கவலைப்படாமல் இங்கேயே இரு. நாளைக்கு உன்னை அழைத்துப் போகிறேன்.''

**வீ**ட்டை அடைந்து முன் வாசலைத் தாண்டும் போதுதான் பாலா கூறினாள். ''அத்தை மயக்கமடைந்து விழுந்துவிட்டார்கள். அப்புறம் கொஞ்சம் தேவலையானதும்தான் கூப்பிட வந்தேன். அங்கே 'அவர்கள்' எதிரில் சொல்ல வேண்டாமென்றுதான்....''

டாக்டர் மனைவியருகே வந்து உட்கார்ந்திருந்தார். நாகு அருகே சென்றதும் கமலம் உதடுகள் நடுங்க அவனைப் பார்த்தாள். அவனை ஒட்டி வராமல் தள்ளி வரும் பாலாவைக் கண்டதும் அவள் கண்கள் கலங்கின. தன் மகன் யாரோ ஒருத்திக்குச் சொந்தமாகி விட்டதையும் தன் மருமகள் அநாதையாகத் தூர நிற்பதையும் கண்டு மனம் வெதும்பினாள்.

''நாகு!'' என்ற அந்த அன்னையின் விளிப்பு காற்றில் நடுங்கும் திரிபோல் ஒலித்தது. ''என்னை இனி மேல் நம்பாதேடா. நான் போவதற்குள் இவள் கழுத்தில் ஒரு தாலியைக் கட்டிவிடு.''

நாகு தலையைக் குனிந்து கொண்டான். உணர்வுகள் நடுங்கத் தவித்தான். டாக்டர் இரைத்தார்.

''டேய், நாகு! உனக்கு இரக்கமில்லையா? நளினிகூட இவளை மணந்து கொள்ள முழுச்



''நாணமுள்ள பெண் ஆணைத் துரத்துவது இல்லை! எலிப் பொறி எலியைத் துரத்துவது இல்லை!''

- எக்சேஞ்ச் எக்ஸ்பிரஸ்
நாகை வே. ஜயராமன்

சம்மதமும் தருவதாகத்தான் முன்பே சொன்னாளே. சரி என்று சொல்லுடா....''

''அம்மா, என்னை மன்னித்து விடும்மா. உனக்கு மகன் ஒருவன்தான். எனவே, மருமகளும் ஒருத்திதான்'' என்று கூறியவன் தலையைத் திருப்பிக் கொண்டான்.

''நாகு! வேண்டாண்டா, இந்தப் பைத்தியக்காரத்தனமான பிடிவாதம். உன் கொள்கையும், லட்சியமும் எங்களைக் கஷ்டப்படுத்துவதோடு விடாது. தீர யோசிக்கும் இடம் இது. நளினிக்கு வாழ்வே ஓரிரு வருடங்கள்தான். தவிர அவளுக்கு....அவளுக்குத் தாய்மை அடையும் நிலை இல்லை என்னும் போது...நம்முடைய வம்சம் இதோடு முடிந்து போவதா? அதெல்லாம் யோசித்துப் பார்க்க வேண்டாமா? உன்னோடு இந்த வம்சம் பூண்டற்றுப் போவதா? வேண்டாம்டா நாகு! நான் சொல்றதைக் கேள்!''

''அம்மா! என்னை மன்னிச்சுடும்மா. நான் எல்லாவற்றையும் யோசித்தேன். என் முடிவு நான் சொன்னதுதானம்மா...''

''நாகு!'' என்று ஆழ்ந்த துயரத்தோடு அவன் கூறியதை ஜீரணித்துக் கொள்ள முயன்ற கமலம் தன்னருகே நின்ற பாலாவைப் பார்த்து, ''பாலா! உனக்கு எத்தனை கொடுமை செய்து விட்டோம் அம்மா. இந்த அதிர்ச்சியை நீ எப்படித் தாங்கிக் கொள்வாய் அம்மா?'' என்று பரிதாபமான குரலில் தனக்குத் தானே நொந்தவாறு பேசினாள்.

''நீங்கள் வருத்தப்படாதீர்கள் அத்தை. நான் எவ்வித அதிர்ச்சியும் அடையவில்லை. இவ்விதம் நேரும் என்று நான் எதிர்பார்த்ததுதான் அத்தை. என் அத்தானைப் பற்றி எனக்குத் தெரியுமே. ஒருத்திக்கு மட்டும் வாழ்வளித்து, ஒருத்தியோடு மட்டுமே வாழ வேண்டும் என்ற தீவிரமான குறிக்கோள் கொண்டிருந்தார் அவர். எனவே, அப்போதே முழுதும் அவரை இழக்கச் சித்தமாகி விட்டேன்......''

டாக்டர் தவிப்போடு பாலாவைப் பார்த்தார். அவர் கொண்டு வந்த ஒரு தீர்மானம் இப்படிக் குடும்பத்தின் பழைய ஒட்டுறவுகளையே போக்கி விட்டதே. இந்தப் பெண் நாகுமீது உயிராக இருந்தாளே! அவன் மறுத்ததை அப்படியே ஏற்றுக்கொண்டாளே....

''நீங்கள்.... நீங்கள்தானே எல்லாவற்றுக்கும் காரணம். இப்போது அவனையோ, அவளையோ நொந்து கொண்டு என்ன பயன்? ஐயோ! நினைக்கவே தோன்றாத எத்தனை விபரீதங்கள் தோன்றி விட்டன...'' என்று முறையிட்ட கமலத்தை ஆறுதல்

# டி.வி.எஸ். பஸ் பாடிகளின் புதிய கவர்ச்சியான முன் தோற்றம்

டி.வி.எஸ். தேவைக்கு உகந்த பஸ் பாடிகளை எந்தவித சேஸிஸ் மீதும்—அசோக் லேலண்டு கோமெட், பெட்போர்டு, டாட்ஜ், பார்கோ டாடா மெர்சிடீஸ் பென்ஸ், வில்லிஸ் ஜீப், ஸ்டாண்டர்டு 20—தயாரிக்கிறார்கள். அவை மிகவும் உறுதியானவை—ஆனால் லேசானவை; எடை குறைவுள்ளவை. அதனால் எண்ணெய் செலவும், டயர் தேய்வும் குறைவு; சிக்கனமானது; கரடு முரடான சாலைகளைச் சமாளிக்கும். பிரயாணிகளுக்கு மிக்க வசதி.

ஒவ்வொரு நாளும் சராசரி மூன்று பஸ் பாடிகள் கட்டுகிறோம். தேவைக்கு உகந்த கம்போசிட் முழு ஸ்டீல் பாடி, சிறிய பஸ், உல்லாஸ பஸ், எக்ஸ்பிரஸ் வான், டெலிவரி வான், பிக்-அப் வான், அம்புலன்ஸ், மூடிய அல்லது திறந்த லாரி, ஸ்டீல் டிரைவர் காபின், டிப்பர் பாடி முதலியன தயாரிக்கிறோம்.




மற்ற விபரங்களுக்கு:

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்**

**பிரைவேட் லிமிடெட்**, மதுரை

(டி.வி.எஸ். ஸ்தாபனம்)

படுத்தவும் முடியாமல், எதிர்த்துப் பேசவும் முடியாமல் தவிப்புடன் நின்றார் டாக்டர்.

கமலத்தின் மனத்தில் தீவிரமான ஆவேசக் கொந்தளிப்பு ஏற்பட்டது. ஆற்ற முடியாத பெரு நெருப்பாய் நெஞ்சு எரிவது போல் இருந்தது. மனத்தைத் திறந்து கொட்டிவிடும் சொற்களை யார் மீது எரிசரங்களாக வீசினால் பலன் ஏற்படப் போகிறது? ஏன்.... இதற்கெல்லாம் மூலகாரணமாக எங்கோ சயனித்துக் கொண்டு சுக போகத்தில் மூழ்கிக் கிடப்பவனை ஒரு வார்த்தை கேட்டு வந்தாலென்ன? நாகுவைக் கணவனுக்கிக் கொண்டதன் மூலம் அவள் அல்லவா அவனை அனாதையாக்கி விட்டாள்? அவளால் அல்லவா பாலா கன்னியாக நிற்கப் போகிறாள்....? எல்லாவற்றையும்விட அவளால் அல்லவா பரம்பரை பரம்பரையாக வளர்ந்து வரும் இந்தக் குடும்பம் சந்ததியற்று நசித்துவிடப் போகிறது?

**கா**லை மணி பத்திருக்கும். ஒன்றுக்குப் பாதியாக இளைத்த பலஹீனத்துடன் இருந்த கமலம் மெல்ல எழுந்து பாலாவை அழைத்தாள். "நாகுவோ, நளினியின் அப்பாவோ வீட்டில் இருக்க மாட்டார்கள். இப்போது போய் நளினியைப் பார்த்து வரப் போகிறேன். ஒரு டாக்ஸியைக் கூப்பிடு, பாலா."

பாலா தயங்கியவாறே கமலத்தின் முகத்தைக் கூர்ந்தாள். "இப்போது.... இந்த உடம்போடு......"

"எனக்கு உடம்புக்கு என்ன கேடு ? உம், நிற்காதே. நீ மறுப்பதால் நான் நின்றுவிடப் போவதில்லை. எப்படியும் போகத்தான் போவேன். போ, போய் டாக்ஸியைக் கூப்பிடு. நான் மட்டுமே போகிறேன். போனதும் வந்ததுமாகத் திரும்பி விடுவேன்." படபடவென்ற அவள் ஆவேசத்தை எதிர்க்கத் துணிவின்றிப் பாலா ஒரு டாக்ஸியிலேற்றிக் கமலத்தை அனுப்பி வைத்தாள்.

சட்டென்ற பிரமிப்பில் கண்களை அகல விழித்த நளினி அடுத்தகணமே சுதாரித்தவாறு கமலத்தை வரவேற்றாள். "வாருங்கள், அத்தை. உடம்பு எப்படி இருக்கிறது ? நானே வந்து பார்க்க இருந்தேன்."

அரைமணி நேரத்துக்குப்பின் கமலம் அவ்விடத்தை நீங்கியபோது நளினி படுக்கையில் குப்புறக் கவிழ்ந்து தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவளது மெல்லிய விசும்பல் ஒலி நான்கு சுவர்களுக்குள்ளேயே வெகு நேரம் கேட்டுக் கொண்டிருந்தது.

"கூடாது.... நிச்சயம் கூடாது.....அப்படி நடக்க விடமாட்டேன்......" என்று அவள் உள்ளோலம் குரல் தந்தது.

அதன்பின் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும் வேகமும், விறுவிறுப்பும் சூழ முன்னேறத் தூண்டின. ஏற்றுக் கொண்ட துணிவில் தெரிந்த ஆருடக் கணிப்பின் வழி பிசகாமல் போகும் தெளிவும் தெம்பும் அணைத்து வழி காட்டின. அந்த நினைவின் துணையால் நேரப் போகும் ஏதோ ஒன்றின் அடியொற்றித் தடம் கலையாமல் ஒன்றிப் போகும் தன்மையில் லயித்தாள் நளினி. அப்புறம் அர்த்தமற்ற ஒரு சுழிப்பூடே ஒரு நிரந்தர அமைதி. தேம்பலூடே ஒரு மெல்லிய பூரிப்பு ஏற்பட்டது.

"நளினி என்னவோபோலிருக்கிறாள்" எனச் சாம்பசிவமே டாக்டரை அழைக்க வந்தார்.

"அப்படியா? எனக்கும் உடம்பு சரியில்லை. நாகு இந்தப் பக்கமே வரவில்லையே!" என்றவாறே கிளம்பினார் டாக்டர்.

நளினியின் கண்கள் ஒளி மங்கிக் கிடந்தன. நீலம் பூத்தாற்போல் உதடுகள் காய்ந்து கிடந்தன. உடம்பு வெளுத்து விட்டிருந்தது. ஆயினும், புன்னகைக்கும் தெளிவுக்கும் குறைவில்லை. "எனக்கு ஒன்றுமில்லை, டாக்டர்! பலவீனம்தான் அதிகமாக இருக்கிறது. அப்பாவுக்கு ஒரே பயம்" என்று மேலோட்டமான குரலில் கூறினாள்.

"காலைவேளைகளில் தலை சுற்றலும் மயக்கமும். ஒரே குமட்டல் வேறு. சாப்பிட்டதை எல்லாம் வாந்தி எடுத்துவிடுகிறாள் டாக்டர். உடம்போ ரொம்பப் பலவீனம். பார்த்து ஏதேனும் நல்ல மருந்தாகக் கொடுங்கள், டாக்டர்......"

நோயின் அறிகுறிகளைக் கேட்கும்போதே டாக்டர் திடுக்கிட்டார். பரிசோதனையின் ஒவ்வொரு கட்டத்திலும் அவர் சந்தேகம் ஊர்ஜிதம் ஆகிவிட்டது. மனம் இடிந்து நொறுங்குவது போல் அவருள் ஒரு கேவல் வெளிப்பட்டது. அவரது இதய நோயாளியைச் சாவு எந்த ரூபத்தில் சட்டெனத் துரத்திவர ஆரம்பித்துவிட்டது என்பது புரிந்து போயிற்று. நிதானமாக அவளருகே அமர்ந்து கொண்ட டாக்டர், சாம்பசிவத்தை வெளியேறுமாறு கேட்டுக் கொண்டார்.

"நளினி! உன்னை ஆரம்பத்திலேயே எச்சரித்தேன் இல்லையா? உன் நலனில் அக்கறை காட்டாத நாகுவை எண்ணி நோகிறேன் நான்......"

"டாக்டர்! அவரை அப்படி எல்லாம் எண்ணிவிடாதீர்கள் டாக்டர். இதை நான் விரும்பி ஏற்றேன், யாசித்துப் பெற்றேன். அவர் மறுப்பை யெல்லாம் என் பிடிவாதத்தால் வென்றேன்....." அவள் குரலில் ஓர் அபூர்வ மென்மை.

"நீ விரும்பி ஏற்றதா? இதன் அபாயங்களை நீ எண்ணிப் பார்க்கவில்லையா அம்மா?"

"அபாயம்! அதுதான் என்னை ஒவ்வொரு நிமிடமும் தொடர்ந்து கொண்டேயிருக்கிறதே டாக்டர். ஆயினும் நான் எவ்வளவு அதிர்ஷ்டம் செய்தவள்! ஒருத்தரின் மனைவி என்ற உறவோடு சாக விரும்பினேன். நீங்கள் மனமுவந்து உங்கள் தங்கை மகளை விலக்கி என்னை உங்கள் மகனுக்கு மணம் முடித்தீர்கள். என் விருப்பத்தை அற்ப ஆசை என்று ஒதுக்காமல், பைத்தியக்காரத்தனம் என்று எள்ளி நகையாடாமல் என் இருப்பு ஒன்றையே நோக்காகக் கொண்டு செயல் புரிந்தீர்கள். உங்கள் உயர்வை என்னால் சொல்லி மாளுமா டாக்டர்? நான் இதைத்தான் இப்போதெல்லாம் சிந்தித்துப் பார்க்கிறேன். என்னால் உங்கள் குடும்பத்தில் எத்தனை சிக்கல்கள்? எத்தனை மனக் கசப்புகள், மனமுறிவுகள்? நான் மண வாழ்வு மேற்கொண்ட அழகால் ஒரு குடும்பத்தையே சிதைத்த பெருமையைப் படைத்துவிட்டேன், டாக்டர்......"

"என்னென்னவோ நினைத்துத் துன்பப் படுகிறாயேம்மா. என் குடும்பத்தைச் சிதைத்து

விட்டதாக ஏன் கற்பனை செய்து கொள்கிறாய்......?''

அவர் வார்த்தைகளை நம்பாதது போல் தலையசைத்தாள் அவள். ''பாலாவின் கண்ணீருக்கு நான் எவ்வாறு பதில் கூறுவேன்? மகனைத் தந்துவிட்டுச் செய்வதறியாது தவிக்கும் உங்கள் தியாகத்துக்கு? ஆரோக்கியம் பிரிந்திருக்கும் எனது அத்தை இடிந்து போய் அன்று என்னருகே வந்து நூமுறி அழுத போது, வம்சம் தழைக்காமல் நின்றுவிடப் போகும் கொடுமையைக் கூறிக் கதறிய போது, எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டேன் டாக்டர்! நீங்கள் பெரிய தவறு செய்து விட்டீர்கள். அன்று என் ஆசையைத் தூசியாக மதித்துத் தூரத் தள்ளி இருந்தீர்களானால்... கேவலமான என் நோயுற்ற இதயத்தின் வீணான ஆசைக்கு நல்ல இதயங்களையெல்லாம் பலி கொடுத்து விட்டீர்களே......'' நளினியின் கண்களில் நீர்த் தாரை வடிந்தது.

டாக்டர் தவிப்போடு, ''கமலம் இங்கே வந்தாளா? என்னிடம் சொல்லவில்லையே. அவள் ஏன் இங்கே வந்தாள்?'' என்று கேட்டார்.

''ஆம், டாக்டர். நீங்கள் எல்லாம் மூடி மறைத்த உண்மைகளை அவர்களிடமிருந்து நான் அறிந்து கொண்டேன். பாலாவை மணக்க மாட்டேன் என்ற 'அவர்'து பிடிவாதம், அவரையன்றி வேறு யாரையும் மணப்பதில்லை என்ற பாலாவின் தீர்மானம், வம்சம் அற்று விடுகிறதே என்ற அத்தையின் இயல்பான அச்சம், இதயநோய்க்காரிக்குக் குழந்தை பிறக்கக்கூடாது என்ற உங்கள் போதனை — இத்தனைக்கும் இடையே என்னால் கலைந்து போன ஒரு குடும்பத்துக்கு உதவ முடிந்ததெல்லாம் இதுதான். என்னால் தோன்றிய விபரீத சூழ்நிலைகளைப் போக்க முடியாவிட்டாலும் என்னையே தந்துவிட முயல்கிறேன். இந்த வாழ்வு வேறு எதற்கு டாக்டர்? அவரது உறுதிக்கும், உங்கள் தியாகத்துக்கும் அத்தையின் அச்சத்துக்கும் என்னால் செய்ய முடிந்த ஒன்றே ஒன்று தான். இந்த உயிர் வெறுமனே போகாமல் ஓர் உயிரை ஈன்றுவிட்டுப் போவதிலும் அர்த்தம் இல்லையா? என் நினைவாக ஓர் உயிரை விட்டுப் போகும் போது, கேவலம் இதய நோயாளி என்ற சுய அநுதாபத்துடனும், ஏளனத்துடனும் சுகமாக நாட்களைக் கழிக்காமல், துன்பம் ஏற்றேனும் ஓர் உயிருக்கு உயிர் கொடுக்கும் உன்னதமான காரியம் செய்கிறோம் என்ற திருப்தி கிடைக்காதா?'' என்று கூறிய கவட்டோடு நளினி உணர்ச்சிகளால் கொந்தளித்துப் போன தன் உடலை ஆசுவாசப்படுத்திக் கொள்பவள் போல், தலையணையுடன் சாய்ந்து கொண்டாள்.

''பார்த்தாயா, நளினி! நீ இப்படி உணர்ச்சி வசப்படக் கூடாதம்மா. உன்னைப் பற்றி நாங்கள் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நீயோ எங்களைப் பற்றியே இல்லாத கற்பனைகளைப் பண்ணிக் கொண்டு அலடிப் படுகிறோயம்மா.....!''

''என்னைப் பற்றிக் கவலைப்பட என்ன இருக்கிறது, டாக்டர்? இதனால் என் உயிர் ஓரிரு வருடங்களுக்கு நீண்டு வரப்போகும் உயிர் பத்தே மாதத்தில் முடிவடைவதாயினும் சரி.




**ம**னிதனைவிட சுண்டெலிக்கு அதிக எண்ணிக்கையுள்ள எலும்புகள் உள்ளன. மனித உடலில் உள்ள மொத்த எலும்புகள் 206. ஆனால் சுண்டெலியின் உடலிலுள்ள எலும்புகள் மொத்தம் 232. அதாவது 26 எலும்புகள் அதிகம்! இந்த அதிகப்படி எலும்புகள் அதன் வாலில் உள்ளவை!

ஆதாரம்: ''ஆஸ்திரேலியன் போஸ்ட்''
தகவல்: ச. ஸ்ரீதரன்.

---

எப்படியாவது நான் ஒரு குழந்தைக்கு உயிர் கொடுக்கும் வரை என்னைக் காப்பாற்றி விடுங்கள் டாக்டர். நான் உங்களை வேண்டிக் கொள்வதெல்லாம் இதுதான். என் உயிரைப் பற்றிய அக்கறையை இன்னும் ஏழெட்டு மாதங்கள் மட்டும் நீடிக்கச் செய்தால் போதும். என் உயிருள் உருவாகி வரும் கருவைப் பத்திரமாகக் காப்பாற்றிவிடுங்கள், டாக்டர். நீங்கள் இதற்கு ஒப்பியே ஆகவேண்டும். சின்ன உயிரைச் சேதப்படுத்தியேனும் பெரிய உயிரைக் காக்கும் உங்கள் வழக்கமான கொள்கையை விட்டு இதைச் செய்வீர்களா டாக்டர்? என் பலவீனமும், தள்ளாட்டமும் எனக்குப் புரிவதால்தான் இத்தனை தூரம் கேட்டுக் கொள்கிறேன். பிரசவம் ஆகும் வரை என்னைப் பிழைக்க வைத்து விடுங்கள். அதன் அடுத்தகணமே எனக்கு என் உயிர் தேவையில்லை..... நான் வாழ்ந்த இருப்பிற்கு ஒரு நிலைத்த ஞாபகத்தை விட்டுப் போகும் பெருமையைத்தாருங்கள் டாக்டர்!''

அவளது வேண்டுகோள் கூப்பிய அவள் இரு கரங்களின் மொழியாக ஒலிக்கிறது. நீரினுள் மூழ்கிக் கொண்டே கரையேற முயலும் தவிப்பில் அவள் தத்தளிக்கிறாள். ஆனால் அவளுக்கு உயிர் மீது ஆசையில்லை. எவளால் சந்ததி நசித்து விடும் என்று அவரும் அவர் மனைவியும் அஞ்சினார்களோ, அவர்களுக்காக அவள் தன்னையே அர்ப்பணித்துச் சந்ததியை ஏந்தி நிற்கிறாள். டாக்டரின் உடம்பெல்லாம் புல்லரித்தது. அவர் இதய நோயாளிக்குத் தன் மகனை அளித்தது தியாகமா? கமலம் அவருக்காக விட்டுக் கொடுத்தது தியாகமா? பாலா கன்னியாகவே இருந்துவிடப் போகிறாளே, அது தியாகமா? அல்லது நாகு மறுமணம் செய்து கொள்ள மறுப்பதுதான் தியாகமா? இதோ, பச்சை மரத்தில் தீப்பற்றுவது போல் தன்னைத் தாய்மைக்கு ஒப்படைத்து, உயிர்த்தியாகம் செய்யப் போகும், கேவலம் ஓர் இதயநோய்க்காரி இத்தனையிலும் உயர்ந்து நிற்கவில்லையா?

டாக்டர் பாசமும், பரிவும் பொங்க அவள் தலையை மெல்ல வருடித் தம் ஆதாரத்தைக் காட்டிக் கொள்கிறார். ''நீ பயப்படாதே நளினி. கடவுள் உன் ஆசையை நிறைவேற்றுவார்! உனக்கு அவர் துணை இருப்பார்!''




- புத்தாண்டு மலர்
- வியாழனுக்கு ஒரு மகத்துவம்
- வடிகால் வசதி தேவை

இவ்வாண்டு கல்கி சித்திரை மலர் மிகச் சிறப்பு வாய்ந்தது. சிறப்புச் சிறுகதை மலர் என்றே பெயரிட்டிருக்கலாம். சிறப்புச் சிறுகதைகள் ஒவ்வொன்றும் வாழ்வின் தத்துவங்களை எடுத்துக் கூறுகிறது. எல்லாக் கதைகளுக்கும், தலைசிறந்து நிற்பது ஜெகசிற்பியன் எழுதியுள்ள ''இது பொன்னகரம் அல்ல'' என்ற கதை. ஆசிரியருக்கு எனது மனமுவந்த பாராட்டுக்கள்.

பெல்காம், 18-3-67 ட. பிரகாஷ்

தங்கள் 16-4-67 புத்தாண்டு மலரில் ஸ்ரீ முருந்தன் அவர்கள் எழுதிய ''அனு ஓர் அதிசயப் பணியாள்'' படித்து மிக மகிழ்ச்சி அடைந்தோம். ஆனால் 38ம் பக்கத்தில் கூறி விருப்பது சரியில்லை. ஜாருகுடா என்கிற இடத்தில் இருக்கும் யுரேனிய சுரங்கம் ஹைதராபாத் அருகில் இல்லை. இது பீஹார் மாகாணத்தில் இருக்கிறது என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். இவ்வளவு விஷயங்களைச் சேகரித்தவர் இந்த முக்கிய அம்சத்தைக் கவனிக்கவில்லை போலும்.

புதுதில்லி
17-4-67 நாகராஜன்

கல்கி புத்தாண்டு மலரில் எஸ். மைதிலி என்பவர் எழுதியதாக உள்ள ''தெரியாதா என்ன?'' என்ற நகைச்சுவைத் துணுக்கைப் படித்தேன்.

ராகினி ரிக்ரியேஷன்ஸ் குழுவைச் சேர்ந்த ''கேகைஸ்'' என்ற அமைப்பிலுள்ள நாங்கள் கடந்த ஐந்து ஆண்டுகளாகவே சென்னை நகரிலும், வெளியூர்களிலும் 'நகைச்சுவைக் கதம்ப நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறோம். இந்தக் கதம்ப நிகழ்ச்சியில் "Marriage Romance" என்ற தலைப்பில் ஒரு நிகழ்ச்சி உள்ளது. அதற்கான வசனத்தை எழுதித் தந்தவர் திரு வி. ஆர். கோபாலகிருஷ்ணன் (ராகினி) என்பவர். இந்த நிகழ்ச்சியின் வசனம் எழுத்துக்கெழுத்து அப்படியே 'தெரியாதா என்ன?' என்ற துணுக்கில் வந்துள்ளது.

சென்னை-5 ப. ர. கோவிந்தராஜன்,
15-4-67 செயலாளர்,
ராகினி ரிக்ரியேஷன்ஸ்

'முள்ளும் மலரும்' தொடர் நாவலை ஆர்வத்துடன் படித்த பல்லாயிரக்கணக்கான வாசகர்களில் நானும் ஒருவன். ஒரு பெரிய இலக்கியப் படைப்பைத் தந்ததற்காக என் பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். கதாபாத்திரங்கள் இன்னமும் தத்ரூபமாக நடமாடுவது போல் எனக்குத் தோன்றுகிறது. இவ்வளவு மாதங்களாக வியாழக்கிழமைக்கே ஒரு தனி மகத்துவத்தைக் கொடுத்து வந்தது நாவல்.

பம்பாய்-19
12-4-67 டி.டி. விஜயராகவன்

கதையம்சத்தைவிட அற்புதமான நடையழகே என்னை மிகவும் கவர்ந்து விட்டது. டிராலி, உடும்புக் கொட்டகை, பவர் ஹவுஸ் ஆகியவற்றை நம் கண் முன்னேயே உலவ விட்டார் ஆசிரியர்.

பெங்களூர்
8-4-67 பி. சாந்தா தத்

கதையில் பாத்திரப் படைப்பு மிகவும் சிலாக்கியமான அம்சமாக அமைந்திருப்பது பெரும் பாராட்டுக்குரியது. முக்கியமாக மங்காவின் பாத்திரம் என்றும் நம் எண்ணத்தைவிட்டு நீங்காவண்ணம் செய்திருக்கும் ஆசிரியரின் திறமையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

திருச்சி, 8-4-67 கே. ரகுநாதன்

அந்தந்தப் பகுதிகளுக்குரிய எளிய வட்டார உரையாடல்களைக் கையாண்டு சம்பவங்களைக் கண் முன் கொண்டு வந்து நிறுத்துவதில் ஆசிரியர் வெற்றியடைந்திருக்கிறார்.

அக்காக் குருவியின் அவல ஒலி கேட்கும் போதெல்லாம் எங்களுக்கு மங்காவின் நினைவு வரும். கண்கள் பனிக்கும்.

முதல் பரிசளித்துக் கௌரவித்த கல்கிக்கு எங்கள் மனமார்ந்த நன்றி.

கூடூர், 7-4-67 சுப. சிங்காரம்

தஞ்சாவூர் மாவட்டத்தில் பயிர்களுக்கு நீர் பாய்ச்சுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு நிலத்தில் தேங்கிக் கிடக்கும் நீரை வடிப்பதும் முக்கியம். ஆதியில் பாசனத் திட்டங்களை வகுத்தவர்கள் அதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. காவேரித் தீரத்தில் நீரை வடிப்பது ஒரு பெரிய பிரச்னை. தனி விவசாயிகள் சொந்த முயற்சியால் நீரை வடிப்பதில் அதிக வெற்றி கண்டுவிட முடியாது. காவேரித் தீரத்தில் வடிகால் வசதி அமைப்பது ஒரு பொறி இயல் பிரச்னை. காவேரித் தீரம் முழுவதுக்கும் சேர்த்தே இத்திட்டம் வகுக்க வேண்டும். இதற்குச் சர்க்கார்தான் வழி காண வேண்டும். தஞ்சை, சட்டசபை அங்கத்தினர்கள் இதை அரசாங்கத்துக்கு எடுத்துக் காட்டி வற்புறுத்திக் கொண்டேயிருக்க வேண்டும். நாளடைவில் பயன் கிடைக்கும்.

அம்பாசமுத்திரம்
15-4-67 வி.டி.சுப்பையாமுதலியார்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

## உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

### தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!

**பிரில்க்ரீம் மட்டுமே**

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.




**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

BIP/1/P/11/65 TM

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்

தபால் செலவு தனி